# BRAHMIN Versus NON-BRAHMIN

OR

# THE SOLUTION

## A NEW TAMIL SOCIAL DRAMA

BY

RAO BAHADUR. P. SAMBANDAM, B.A., B.L.,

*Author of:*

The Two Sisters, Galava, Manohara, The Curse of Urvasi, The Merchant of Vanipura, Fate and Love, Simhalanatha, Pushpavalli, Amaladitya, Magapathi, Farces, Siruthondar, The Golden Fetters, True Love, The Bandit Chief, Bricks-Between, At Any Cost, The Fair Ghost, The Wedding of Valli, The Eye of Love, Vijayarangam, As you like it, Ratnavali, Lord Buddha, The Tragedy of Silence, The Good Fairy, Geetha Manjari, The True Brother, Malävikagnimitra, Chandrahari, The Demon Land, Sabapathy Part I, The Pongal Feast or Sabapathy Part II, A Rehearsal or Sabapathy Part III, Sabapathy Part IV, Blessed in a Wife, The Dancing Girl, Subbadra-Arjuna, Karna the Giver, Sahadeva's Stratagem, The Surgeon General's prescription, Vichu's Wife, Sakuntala, Vikramorvasi, The Point of View, The Two Selves, The Tragic Denouement, The Sub-Assistant Magistrate of Sultanpet, Harischandra, Blind Ambition, Markandeya, Sarangadhara, The Two Friends, The Knavery of Kalappa, As We Sow-So We Reap, Over Forty Years Before the Footlights Parts I & II etc, in Tamil; and Harischandra, and Yayathi in English.

FIRST EDITION.

Madras:

PRINTED BY THE PEERLESS PRESS,

13, THAMBU CHETTY STREET, G. T.

3.00

 1933 Price per Copy Rs. ~~1-8~~]

ஓம்

# பிராம்மணனும்-சூத்திரனும்

அல்லது

# பரிஹாரம்

ஒரு புதிய தமிழ் நாடகம்


ராவ்பஹதூர்

## ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.


இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ் நூல்கள்:—

லீலாவதி — சுலோசனை, சாரங்கதரன், மகபதி, மனோஹரன், நற்குல தெய்வம், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், காதலர் கண்கள், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், ரத்னாவளி, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, பிரஹசனங்கள், அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல்பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், வள்ளிமணம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்கிரமோர்வசி, முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் முதற்பாகம், நாடகமேடை நினைவுகள் இரண்டாம் பாகம் முதலியன.


முதற் பதிப்பு

சென்னை 'பியர்லெஸ்' அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

1933


3.00



[விலை ரூபாய் [redacted]

INSCRIBED

to

THE BELOVED MEMORY

of

MY PARENTS

**P. VIJIARANGA MUDALIAR**

and

**P. MANICKAVELU AMMAL**

and

MY FRIEND

**C. RANGAVADIVELU**

# PREFACE.

---

This drama was begun by me in the year 1928; it has taken me nearly 5 years to complete. My object being to find a solution which would remove, though slowly, the existing clash of feelings between the Brahmins and Non-Brahmins especially in Southern India, I had to weigh each sentence carefully before putting it in writing. It is well known, at least to my friends, that I do not belong to any party. I have attacked in this drama certain habits, and customs prevalant among these two rival parties.

I wish it to be clearly understood that though I have used as the names of dramatic Personæ names in common use in the Tamil Land, these names have *absolutely* no reference to any living or dead personalities.

If this humble literary effort on my part would bring both the parties together a little, and make them forget their present differences and unite them in serving our Motherland, I would feel amply rewarded, for any little trouble, I have taken in writing this

I would like to state that all societies, professional and amateur that desire to stage this or any other drama by me, must take my previous permission by paying to me my usual royalty, and then only stage the same; otherwise they make themselves liable to be prosecuted for breach of copy right.

I invite all my readers to whichever party they belong, to favour me with their candid criticism of this my solution of the problem.

Pammal Lodge,
*27th June 1933.*

P. SAMBANDAM.

௳

# பிராம்மணனும்—சூத்திரனும்

அல்லது

# பரிஹாரம்



## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| ராமகிருஷ்ண ஐயர் | ... ... | ஒரு பிரபல ஆட்வொகேட். |
| சீதாராமன் ஐ.ஸி.எஸ். | ... ... | அவரது பிள்ளை. |
| தர்மலிங்க முதலியார் | ... ... | ஒரு பிரபல வர்த்தகர். |
| திருநாவுக்கரசு | ... ... | தர்மலிங்க முதலியார் பிள்ளை. |
| வேங்கடேச முதலியார், சாம்பமூர்த்தி ஐயர் | ... ... | இரட்டையர் எனப் பெயர் பெற்ற இரண்டு நண்பர்கள். |
| டாக்டர் பெரைரா | ... ... | ஒரு கிருஸ்துவ வைத்தியர். |
| சத்தியநாராயண ஐயர் | ... ... | ராமகிருஷ்ண ஐயருக்கு அவரது மனைவியின் மூலமாக பந்து. |
| சுப்பராமன் | ... ... | ராமகிருஷ்ண ஐயர் வீட்டு பரிசாரகன். |
| அண்ணாசாமி முதலியார் | ... ... | தர்மலிங்க முதலியாருடைய பந்து. |
| சுந்தரம் ஐயர் | ... ... | சத்தியநாராயண ஐயர் பந்து. |
| பாஷியம் | ... ... | சீதாராமன் வேலையாள். |
| மரகதம்மாள் | ... ... | ராமகிருஷ்ண ஐயர் மனைவி, சீதாராமன் தாயார். |
| கற்பகம் | ... ... | தர்மலிங்க முதலியாருடைய குமாரத்தி. |
| வேதம் | ... ... | ராமகிருஷ்ண ஐயருடைய இளம் பெண். |

ஒரு போயி, ஒரு கிராம முனிசிப்பு, ஓர் உதவி வயித்தியன் முதலியோர்.

கதை நிகழிடம்—பெரும்பாகம் சென்னையிலும்,
சிறியபாகம் திருவொற்றியூரிலும்.

காலம் 1938.

# பிராம்மணனும் - சூத்திரனும்

அல்லது

# பரிஹாரம்



## முற்கூறு

**இடம்:—சென்னை கடற்கரையோரம் மணலில் சிமென்டினால் கட்டப்பட்ட ஓர் ஆசனத்தருகில் சீதாராமன் உலாவிக் கொண்டிருக்கிறான்.**

காலம்—இரவு ; பின்புறமாகப் பிறைச்சந்திரன் தெரிகிறது.

சீ. பிராம்மணனும் ! சூத்திரனும் !—அப்பா!—அப்பா!—கடவுள் என்றொருவர் இல்லையென்பதற்கு இந்தப் பிரமாணமே போதும். கருணையோடு கூடிய கடவுள் ஒருவர் இருந்தால், இந்த ஜாதி பேத மெல்லாம் வைத்து என்னையும் இந்நாட்டையும் இவ்வளவு கஷ்டத்திற்குள்ளாக்குவாரா? —இன்னொரு முறை படித்துப் பார்க்கிறேன் ! [கையிலிருக்கும கடிதமொன்றைப் படிக்கிறான்] "என்ன வென்றாலும் நான் தாழ்ந்த ஜாதியிற் பிறந்த சூத்திரப் பெண் ! அவள் உயர்ந்த ஜாதியிற் பிறந்த பிராம்மணப் பெண் !"— கற்பகம் ! கற்பகம் ! இவ்வளவுதானா என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கை !—கற்பகத்தைப் பாராமல் நான் எப்படி பட்டணத்தை விட்டு புறப்படுவது? அவள் வீட்டில் அவளைப் பார்ப்பதென்றால் எனக்கு அச்சமாயிருக்கிறது. என் காகிதம் அவளுக்குக் கிடைத்திருக்கும்—எப்படியாவது வராமற் போகமாட்டாள் என்று நினைக்கிறேன்—ஒருவேளை வராவிட்டால்! [சிமென்ட் கட்டிடத்தின் மீது உட்கார்ந்து கடிதத்தைப் பார்த்த வண்ண மிருக்கிறான்.]

பின்புறமாக மெல்ல கற்பகம் வருகிறாள்.

கற்பகம்! கற்பகம்! இவ்வாறு என்னைக் கைவிடலாமா நீ!

[கண்ணீருடன் கடிதத்திற்கு முத்த மிடுகிறான்.]

க. உம்—[தொண்டையைக் கனைத்துக்கொள்கிறாள்.]

சீ. ஆ!—கற்பகம்! [எழுந்திருக்கிறான்.]

க. அப்படியே உட்காருங்கள்.—உங்களுடன் பேச நான் வரவில்லை.—சமுத்திரக் காற்றில் கொஞ்சம் உலாவிவிட்டு போகலாமென்று வந்தேன்.

சீ. எப்படியாவது வந்தாயே அது போதும் எனக்கு! கற்பகம்!—நீயும் இங்கு கொஞ்சம் உட்காரமாட்டாயா?

க. என்னுடன் ஒரு வார்த்தையும் பேசாதிருப்பதானால் கொஞ்சம் உட்கார்ந்து போகிறேன். அதிக தூரம் மணலில் நடந்து என் கால் நோகிறது.

சீ. நீ கட்டளையிட்டால் அப்படியே பேசவில்லை. நீ உட்கார்ந்தாவது போயேன் கொஞ்ச நேரம். [கற்பகம் மெல்ல அந்த கட்டிடத்தின் மற்றொரு புறமாக உட்காருகிறாள்]

[பெருமூச்சு விட்டு, சற்றுப் பொறுத்து] என் காகிதம் உனக்குக் கிடைத்ததா?

க. நீர் என்னுடன் பேசலாகாதென்று சொல்லவில்லையா நான்! இன்னொரு வார்த்தை பேசினீரானால் அப்படியே எழுந்து போய் விடுவேன்!

சீ. இல்லை இல்லை' நான் பேசவில்லை உன்னுடன்! நீ போகாதே! [கொஞ்சம் பொறுத்து] ஹும்!—நாளைத்தினம் ரெயிலில் இந்த வேளை எங்கிருக்கப் போகிறேனோ?

க. [திடுக்கிட்டு, பிறகு] நான் பேசவேண்டாம் என்று சொல்லவில்லையா?

சீ. உன்னுடன் பேசவேண்டாமென்று தானே சொன்னாய்?

க. பிறகு சற்று முன்பாக யாருடன் பேசினீர்?

சீ. எனக்குள்ளாக வருத்தப்பட்டுக் கொண்டேன்!

க. [அவனை உற்றுப் பார்த்து] எங்கே போகிறீர் ரெயிலில் ?

சீ. சீமைக்கு.

க. சீமைக்கா !—ஏன் ?

சீ. டில்லியில் ஐ. சி. எஸ்ஸுக்காகத் தேர்ந்தெடுக்கும் பரிட்சையில் நான் முதலாகத் தேறினதாக தந்திவந்தது. என் தகப்பனார் நான் உடனே — நாளைக்கே — சீமைக்குப் போகப் புறப்பட வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார் !

க. உம்—[சற்று பொறுத்து] நீர் எப்பொழுது பட்டணம் திரும்பி வருவீர் ?

சீ. நீ எப்பொழுது வரச்சொல்லுகிறாய் ?

க. நானா ! நான் சொல்லுவானேன் ? உம்மைத் திரும்பிச் சீக்கிரம் வரும்படி வேண்டத்தான் இன்னொருத்தியைப் பிடித்திருக்கிறீரே !

சீ. கற்பகம் ! கற்பகம் ! என்னாற் பொறுக்க முடியவில்லை ! கொஞ்சம் உன்னுடன் பேச எனக்கு உத்திரவு கொடு. [அவள் பக்கம் திரும்பி] கற்பகம் ! பிராம்மணர்களெல்லாம் உன் தகப்பனார் நம்பாவிட்டாலும், நீ என்னை நம்பக் கூடாதா ? உன்னிடம் நான் வேடிக்கைக்காவது ஏதாவது பொய் உரைத்திருக்கிறேனா ? இதே இடத்தில் உட்கார்ந்து கொண்டு போன வருஷம் வைசாக பௌர்ணமியன்று நாமிருவரும் ஒருவர்க்கொருவர் சத்தியம் செய்து கொடுத்ததை நீ மறக்கலாமா ?

க. நான் மறக்க வில்லை ! நீர்தான் மறந்தீர் !

சீ. என்ன நான் மறந்து தப்பிதம் செய்தது ?

க. ஜானகியுடன் டென்னிஸ் மிக்செட் டபில்ஸ் (Mixed doubles) ஆடினீரா இல்லையா காலேஜ் டோர்னமென்டில் ? (Tournament)

சீ. ஆடினேன்—அதில் என்ன தவறு ?

க. தவறொன்றுமில்லை, உமக்கு ! நாமிருவரும் ஆடவேண்டுமென்று தீர்மானித்திருந்தோமா இல்லையா ?

சீ. ஆமாம், பிறகு உனக்கு உடம்பு அசௌக்கியமா யிருக்கிற தெனவும் இந்த வருஷம் டோர்னமெண்டில் ஆடமுடியா தென்றும் சொல்லியனுப்பினுயா இல்லையா ?

க. சொல்லி அனுப்பினுல்? அவளுடன்—ஆடச்சொன்னுர் களோ உம்மை?

சீ. நம்முடைய காலேஜுக்காகப் பெயரைக் கொடுத்தாயது நான் உன் பெயருடன்; பிறகு நீ ஆடமுடியாதென்று தெரிவிக்கவே நான் என்ன செய்வது? காலேஜ் பிரின்சி பால் (Principal) வேறு யாருடனுவது சேர்ந்து ஆடி, எப்படியாவது அந்த கப்பை (Cup) நமது காலேஜுக்காக ஜெயிக்கவேண்டும், இது மூன்ருவது வருஷம், இவ்வரு ஷம் ஜெயித்தால் அந்த கப் நமது காலேஜுக்கு சொந்த மாகிவிடும், என்று நிர்ப்பந்தப்படுத்தினுர்!—கண்ணு! நான் என்ன செய்வது?

க. ஆமாம், பிறகு உங்கள் தகப்பனுர் நிர்ப்பந்தப்படுத்தினுர் என்று அவளைக் கலியாணம் செய்துக்கொள்வீர்!

[முகத்தைத் திருப்பிக் கொள்கிருள்.]

சீ. [அவள் முகத்தைத் தன் பக்கம் மெல்லத் திருப்பி] கண்ணு! அப்படி என் தகப்பனுர் செய்தால் நான் அதற்கு உடன் படுவேன் என்று நினைக்கிருயா? என்னைப்பார்த்துச் சொல் உன் வாயைத்திறந்து! என்ன சொல்கிருய்?

க. [மெல்ல] மாட்டீர்—என்று நினைக்கிறேன்.

சீ. அவ்வளவு போதும்! கண்ணே! கண்ணே!

[அவளுக்கு முத்தமிடுகிருன்.]

க. அதிருக்கட்டும், டென்னிஸ் மாச் (match) ஜெயித்தீரே, அன்று காலை அவளிடமிருந்து ஏதாவது டானிக் (tonic) வாங்கிக் கொண்டீரா உமது வழக்கம் போல்!

சீ. கற்பகம்! கற்பகம்! உன் அதரத்தைத் தீண்டின என் அதரம் வேருெருத்தியின் அதரத்தைத் தீண்டுமென நினைக்கிருயா?—கண்ணே!—கற்பகம்! யாரோ தூரத்தில்

இந்தப்பக்கம் வருகிறார்கள் போலிருக்கிறது—நாம் சீக்கிரம் பிரியவேண்டும்.

க. எனக்கும் நேரமாகிறது.

சீ. நான் நாளை சாயங்காலம் போட்மெயிலில் (Boat Mail) புறப்படுகிறேன். திரும்பி வர ஒருவருஷம் பிடிக்கும்! இந்த ஒருவருஷம் உன்னைக் காணாமல் நான் எப்படி கழிக்கப் போகிறேன்! [துக்கப்படுகிறான்.]

க. நான் மாத்திரம் எப்படிக் கழிக்கப்போகிறேன்! [துக்கப்படுகிறாள்.]

சீ. கண்ணே! கண்ணே! துக்கப்படாதே! நாம் என்ன செய்யலாம்! நான் எப்படியும் போய் வரவேண்டும்! ஒருவிதத்தில் இது நல்லதல்லவா? சீமைக்குப்போய் ஒரு வருஷம் வசிக்க உத்திரவு கொடுத்த என் தந்தை நாம் கலியாணம் பண்ணிக்கொள்ளவும் பிறகு உத்திரவு கொடுக்க மாட்டாரா?

க. எனக்கென்னவோ சந்தேகமாயிருக்கிறது! அதிலும் இவ்வருஷம் சனாதன தர்மசபைக்குக் காரியதரிசியாக நியமிக்கப்பட்டிருக்கிறதாக சுதேசமித்திரன் பத்திரிகையில் கண்டேன், அப்படிப்பட்டவர், தன் மகன் ஒரு சூத்திரப்பெண்ணை விவாகஞ் செய்துகொள்ள ஒப்புக் கொள்வாரா?

சீ. எல்லாம் பார்க்கலாம், நான் திரும்பி வந்தவுடன். அதோ அவர்கள் அருகில் வருகிறார்கள். கற்பகம்! கண்ணே! நான் சீமைக்குப்போய் ஐ. சி எஸ். பரிட்சையில் தேறி, சீக்கிரம் சுகமாய்த் திரும்பி வரும்படி எனக்கு நல்ல டாணிக் ஒன்று சீக்கிரம் கொடு!

க. [அவனுக்கு ஒரு முத்தம் கொடுத்து] சுகமாய்ப் போய்வாரும். ஆனால் ஒன்று, வாரம் வாரம் காகிதம் மாத்திரம் தப்பாமல் எழுதும். ஒருவாரம் எழுதத் தப்பினீரோ பிறகு உம்முடன் நான் பேசவே மாட்டேன்!

சீ. இல்லை கண்ணே! அப்படியே ஆகட்டும்! தவறாமல் எழுதுகிறேன்! நீயும் தவறாமல் எனக்கு பதில் எழுத வேண்டும்!

க. அப்படியே ஆகட்டும்.

சீ. கண்ணு! கண்ணு! இன்னொரு டானிக்! ஒருவருஷம் பொறுக்கவேண்டி யிருக்கிறதுபார்! இன்னொன்று! இன்னொன்று!

க. அதோ அருகில் வந்து விட்டார்கள்! பத்திரம்.

[முத்தம் கொடுக்கிறாள்.]

(தூரத்திலிருந்து ஒரு குரல் "அப்பா! இப்படித்தான் அலையோரமாகப் போகலாமே"!)

சீ. ஐஐயோ! ஜானகியின் குரல்!

க. ஆம்! ஆம்! அவள் வருமுன் நாம் போய் விடுவோம்.

[இருவரும் விரைந்து வெவ்வேறு பக்கமாய்ப் போகின்றனர்.]

காட்சி முடிகிறது.



# முதல் அங்கம்



## முதற் காட்சி

இடம்—சென்னையில் எழும்பூரில் தர்மலிங்க முதலியாருடைய பங்களாவின் மேல்மாடி; வெளியில் வீதியில் பெருங்கலக கோஷ்டம்.

சாம்பமூர்த்தி ஐயரும், வேங்கடேச முதலியாரும் ஜன்னலருகில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.

சா. ஏனடா, பெரியகிழவா இந்தக் கலகமெல்லாம் ஒழிந்து நமது தேசம் சுகப்படுவதெக்காலம்?

வே. சின்ன கிழம், நீதான் சொல்லேன்?—இருதிறத்தாருக்கும் எப்பொழுது புத்திவருகிறதோ அப்பொழுது தான், என்று தோற்றுகிறது.

சா. அதைச் சொல்வதற்கு பெரிய கிழவன் ஒருவன் வேண்டுமோ?—எப்பொழுது இருதிறத்தாருக்கும் புத்திவருமென்று கேட்டால்?

வே. அதற்கு பதில் பரமேஸ்வரனைத்தான் கேட்டுப்பார்க்க வேண்டும்.

சா. கேட்டுப்பாரேன் அவரைத்தான்.

வே. உம்! [சற்றுயோசித்து] உங்களிருவரையும் நான் ஏன் படைத்தேன்—என்று என்னைக்கேட்கிறார்.

சா. உம்—சரியாக—ஒரு வருஷம் பொறுத்துக்கேள்—அந்தக் கேள்விக்குப்பதில் சொல்லுகிறேன். இப்பொழுது இந்த கலகத்தைப்பார்த்துக் கொண்டிருப்பதைவிட, அதோ அரசு வருகிறான் போலிருக்கிறது. அவனுடன் பேசிக் கொண்டிருந்தாலும் பிரயோஜனமுண்டு.

திருநாவுக்கரசு, வேதத்தை அழைத்துக் கொண்டு மெல்ல வருகிறான்.

தி. மெல்லவா—உழப்போரே.

வே. அரசு, இதுயாரடா இந்தக் குழந்தை ?

தி. எம் பொன்னுட்டி.

வே. கெட்டிக்காரன்தான்!—இதற்குள்ளாக ஒரு பெண்சாதியைச் சம்பாதித்துக் கொண்டாயே!—குழந்தை மிகவும் அழகாயிருக்கிறது—பாபா, உன் பெயர் என்ன அம்மா.

வே. வேதம்.

சா. அரசு—யார் குழந்தையடா இது ?

தி. மூணுவது பங்களாவிலே—ஐயர் இல்லே—அவரு பொன்னு.

சா. என்ன! ராமகிருஷ்ணையர் பெண்ணு ?

தி. ஆமாம்.

வே. அடடே! நீ சூத்திரனுச்சுதேடா வேதத்தின் கிட்டப் போகக்கூடாதே !

தி. அப்படி இண்ணு ?

சா. அடே! கிழவா! உனக்கு எத்தனை முறை சொல்லியிருக்கிறேன், என் எதிரில் இந்தப் பேச்செடுக்க வேண்டாம் என்று ?

வே. நான் விளையாடினுல், அது கூடவா தவறு ?

சா. விளையாட்டிற்குக் கூட நமக்குள் இந்தப் பேச்சுவேண்டாம். இவன் பெரியவனுயின பிறகு, இவனுக்குக் கற்பிக்கட்டும் பிராம்மணத் துவேஷம்—இவன் தந்தை, இப்பொழுதாவது இந்த இழவெடுத்த பேதமெல்லாம் அறியாது சந்தோஷமாய் விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

வே வாஸ்தவம்தான்—வாய்தவறி வந்து விட்டது.

தி. ரோஜாப்பூ தாதா, எனக்கு டபாசு வாங்கி கொடுக்கரேனிண்ணீங்களே இண்ணைக்கி.

வே. டபாசு கெட்டது! அதை விடமேலானது ஒன்று வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன்—இதோ பார்த்தாயா?—[ஒரு பொம்மைத் துப்பாக்கியை ஜேபியிலிருந்து எடுத்து] துப்பாக்கி!

தி. துப்பாக்கி! துப்பாக்கி! எனக்கு! எனக்கு!

வே. இரு—சுட்டுக் காட்டு காட்டுகிறேன்--[அப்படியே செய்து] டப்!—பார்த்தாயா?

தி. [அதை வாங்கிக்கொண்டு] சுடரகுண்டு?

சா. இதோ! [தன் ஜேபியிலிருந்து எடுத்துக் கொடுத்து]

வே. நேக்கு?

சா. என்னடா இது? ஒன்றுதானே அம்மா வாங்கிக்கொண்டு வந்தோம்—பாபா—அழாதே—உனக்கு நாளைக்கு வாங்கித் தருகிறோம்.

தி. பாபா, அழுவாதே!—உம்—நீ இத்தே வைச்சிக்கோ. நாளைக்கு குண்டு மல்லிதாதா வாங்கி வர்ரத்தே நான் வைச்சிகரேன். [அதை வேதத்தினிடம் கொடுக்கிறான்.]

வே. சாம்பமூர்த்தி, இவர்களுக்கிருக்கிற புத்தி இவர்கள் தகப்பனார்களுக்கில்லையே!

சா. சில விஷயங்களில் சிறு குழந்தைகளுக்கிருக்கும் புத்தி பெரியவர்களுக்கிருந்தால் இப்பேருலகம் இப்படிப் பாழாய்ப்போகுமா? [வெளியில் பெருங் கலக கோஷ்டம்.]

வே. மறுபடியும் ஆரம்பித்தார்களா என்ன!

[சாம்ப மூர்த்தி ஐயருடன் ஜன்னலருகிற் போய்ப் பார்க்கிறார்.]

சா. அடடே! பாவிகளே! பெண் பிள்ளையடா!—பெண் பிள்ளையடா!

வே. கற்பகம்! கற்பகம்!—விழுந்துவிட்டாள்!

சா. சீதாராமன்! சீதாராமன்!

வே. கத்தியால் குத்துகிறான்! குத்துகிறான்!

சா. [விரைந்தோடி வேதத்தின் கையிலிருக்கும் பொம்மைத் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு ஜன்னலருகிற்போய்] கழுதைகளே! யாராவது அவர்கள் கிட்ட நெருங்கினால் அப்படியே சுட்டுவிடுவேன்! சுட்டுவிடுவேன்! [வெளியில் சப்தம் அடங்கி விடுகிறது] வெங்கடேசம்! நான் இப்படியே துப்பாக்கி

யைக் காட்டிக்கொண்டிருக்கிறேன், நீ விரைந்து போய் இரண்டு பெயரையும் தூக்கிக்கொண்டு வந்துவிடு. வீட்டு ஆட்கள் இரண்டு பெயரை அழைத்துக்கொண்டுபோ. அதிக காயம்பட் டிருக்கிறாற்போலிருக்கிறது ! [வெங்கடேச முதலியார் விரைந்து கீழே போகிறார்] கற்பகம் எழுந்து விட்டாள் ! அவளுக்கு காயம் ஒன்றும் படவில்லை—ரத்தம்! ரத்தம்! நீ தொடாதே அம்மா! தொடாதே அம்மா! வெங்கடேசம்! நீ தலைபக்கம் பிடித்துக்கொள் அப்படியே! கூடுமானவரைக்கும் அசைக்காமல் கொண்டு வாருங்கள் ! ஜாக்கிரதை ! ஜாக்கிரதை !—கலகம் செய்த ஒரு கழுதையையும் காணோம் ! பொம்மைத் துப்பாக்கியைக்கண்டதும் பயந்தோடிய படுக்காளிகள் ஸ்வராஜ்யம் கிடைத்தால் நம்முடைய தேசத்தை எப்படிக் காப்பாற்றப் போகிறார்களோ ! [படிக்கட்டண்டைப் போகிறார்.]

சீதாராமனை வெங்கடேச முதலியார், கற்பகம்,
இரண்டு வேலையாட்கள் மெல்லத் தூக்கிக்கொண்டு வருகின்றனர்.

சா. வெங்கடேசம் !—என்ன ?

வெ. உயிர்—இருக்கிறது.

சா. நீ ஏனம்மா தூக்கிக்கொண்டு வருகிறாய்? உன் துணியெல்லாம் ரத்தமாச்சுதுபார். நீ விடு, நான் பிடித்துக் கொள்ளுகிறேன். [அப்படியே செய்கிறார்.]

க. பெரிய அப்பா—பிழைப்பாரா ?

சா. பொறு—பார்த்துச் சொல்லுகிறேன். நீ நில் இங்கேயே—அந்த அறைக்குள் இருக்கும் படுக்கையில் வளர்த்துவோம்.

க. நானும் வருகிறேன். நான் மெடிகல் காலேஜில் படிக்கிறேன் என்பதை மறந்தீரோ ?

சா. அப்படியானால் டாக்டர் சொல்லுகிறபடி நீ கேட்க வேணும். வெளியே நில்.

[சீதாராமனை உள் அறைக்குக் கொண்டுபோகின்றனர்.]

க. இப்படியா நாங்கள் சந்திக்க வேண்டுமென்று ஈசன் விதித்தார்!—என் உயிரைக் காப்பாற்றினர்! தன் உயிரைக் கொடுத்தார்?--பரமேஸ்வரா! அப்படி யில்லாதிருக்குமாக! எங்கள் இருவர் உயிரில் உமக்கு ஒன்று வேண்டுமாயின் என் உயிரைக்கொண்டுபோம்.

[அறையில் மிகுந்த கலவரத்துடன் உலாவுகிருள்.]

சாம்பமூர்த்தி ஐயர் மெல்ல கதவைத் திறந்துகொண்டு வருகிருர்.

சா. [கதவண்டை நின்று, கதவை மூடிவிட்டு] அம்மா—

க. [திடுக்கிட்டு] என்ன ? என்ன பெரியப்பா ?

சா மெல்ல—பயப்படாதே! தைரியமாயிரு—அந்தக் கத்தி இன்னும் அரை அங்குலம் உள்ளே போயிருந்தால் உடனே இறந்திருப்பான்! அப்படிப் போகாதபடி தெய்வாதீனமாய்—இந்தப் படமும் இதைச் சுற்றியிருந்த இந்தக் காகிதமும் தான் காப்பாற்றியது என்று நினைக்கிறேன்.

[அவைகளை அவளிடம் கொடுக்கிருர்.]

வே. [உள்ளிருந்து] சாம்பமூர்த்தி! சீக்கிரம் வா இப்படி!

சா. வந்தேன் ! [விரைந்து அறைக்குள் போகிருர்.]

க. கருணைக்கடவுளே! காப்பாற்றும் அவரை! என் கடைசி கடிதம்! என்படம் இவருக்கு எப்படிக் கிடைத்தது? அவரது ஹிருதயத்தின் ரத்தம் இதில் படிந்திருக்கிறதே!

சாம்பமூர்த்தி ஐயர் வருகிருர்.

பெரியப்பா! எப்படி இருக்கிறது ?

சா. கற்பகம், நீ மெடிகல் காலேஜில் படிக்கிறபெண், உனக்கிவ் விஷயங்களெல்லாம் தெரிந்திருக்கவேண்டும். அவன் மிகுந்த அபாயஸ்திதியிலிருக்கிருன். வெங்கடேச முதலியார் அவன் உயிர் தப்புவதற்கு ஒரு மார்க்கம்தானிருக்கிறது, அதாவது யாருடைய ரத்தமாவது அவனுடலில் டிரான்ஸ்பியுஷன் (transfusion) உடனே பண்ணிஞல்தான் பிழைப்பான், என்று சொல்லுகிருர். உங்கள் காலேஜில் யாராவது தங்கள் ரத்தத்தைக் கொடுக்க இசை

வார்களா? அவர்களுக்கு வேண்டிய பணத்தை அவன் தகப்பனார் கொடுப்பார்—இல்லாவிட்டால் நாங்கள் கொடுக்கிறோம்.

க. ஐயோ! இரண்டு பாசத்திற்கு முன்பாக ஒரு பிள்ளை இம்மாதிரியாகத்தன் ரத்தத்தைக்கொடுக்க, பிறகு அவன் வேறு காரணத்தினால் இறந்துபோக, அது முதல் மற்றப் பிள்ளைகளெல்லாம் பயந்து மாட்டேன் என்று சொல்லி விட்டார்களே!

சா. ஒருத்தரும் கிடைக்கமாட்டார்களா? இதில் கொஞ்சம் அபாயமிருக்கிறது வாஸ்தவம்தான். ஆயினும் வெங்கடேச முதலியார் இச்சிகிச்சையில் கைதேர்ந்தவர், ஒரு அபாயமுமில்லாமல் எப்படியும் காப்பாற்றுவார் என்று சொல்லிப்பார்க்கிறாயா? உடனே புறப்படு என் மோடார் வண்டியில்! தாமதமாகும் ஒவ்வொரு நிமிஷமும் அவன் உயிரைக்காப்பது அதிக கஷ்டமாகிக்கொண்டு வருகிற தென்கிறார்.

க. ஆனால் நான் யாரை இட்டுக்கொண்டு வந்தாலும் ஆட்சேபனை செய்யமாட்டீரே?

சா. உனக்கென்ன பயித்தியமா? யாராவது கிடைத்தாற் போதுமென்கிறேன்!

க. சத்தியமாக?

சா. சத்தியமாக.

க. ஆனால் என் ரத்தத்தைக் கொடுக்கிறேன்! அழைத்துக் கொண்டுபோம் என்னை உள்ளே! அவர் என் உயிரைக் காப்பாற்றினார், நான் அவர் உயிரைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை!

சா. கற்பகம்!—வேறு ஒருவருமில்லையா! இதில் கொஞ்சம்.—

க. அந்தக் கதையெல்லாம் உதவாது, பெரியப்பா, நீர் கூறியதை நீரே மறந்துபோகாதீர் நீரே சற்று முன்பாக தாமதம் செய்யும் ஒவ்வொரு நிமிஷமும் அபாயத்தை

அதிகரிப்பதாகக் கூறவில்லையா? உடனே அழைத்துச் செல்லும் என்னை! நீரும் வைத்தியர்! உம்முடைய கடமையைச் செய்யும்.

சா. வா ஆனல்—வெங்கடேசன் என்ன சொல்லுவாரோ?

க. அவர் ஒன்றும் சொல்லமாட்டார்! அவர் உம்மைப்போல் பயந்தவர் அல்ல.

சா. வா ஆனல்.

[கற்பகத்தை அழைத்துக்கொண்டு உள்ளே போகிருர்.]

வே. அரசு, என்ன இதெல்லாம்.

தி. வேதம், உங்க அண்ணாத்தைக்கு ரொம்ப காயம் பட்டிருக்குது இரண்டு தாதாவுங்களும் வயித்தியம் பார்க்கராங்க.

சாம்பமூர்த்தி ஐயர் விரைந்து வருகிருர்.

சா. இதோ இரண்டு நிமிஷத்தில் எடுத்துக்கொண்டு வந்து விடுகிறேன்!

வே. [உள்ளிருந்து] நமது அசிஸ்டெண்டையும் அழைத்துவா!

சா. அப்படியே! அப்படியே! [விரைந்து போகிருர்.]

தி. வேதம், நீ பயப்படாதே, சாமி இருக்கிருரு.

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி

இடம்—தர்மராய முதலியார் பங்களாவில் தோட்டப் பக்கமாக இருக்கும் ஓர் அறை. கற்பகம், ஒரு சாய்வு பிரம்புகட்டிலின் மீது ஜன்னலின் வழியாக வெயில் படும்படியான இடத்தில், படுத்துக்கொண்டிருக்கிருள்.

வே. [வெளியிலிருந்து] கற்பகம் நாங்கள் வரலாமோ?

க. வாருங்கள்.

வெங்கடேச முதலியாரும், சாம்பமூர்த்தி ஐயரும் வருகிருர்கள்.

என்ன அப்பா, நீங்களிரண்டு பெயரும் வருவதற்குக் கூடவா கேட்டுக்கொண்டு வரவேண்டும்?

வே. அப்படியல்ல அம்மா, இது நாம் மேல்நாட்டாரிடமிருந்து கற்கவேண்டிய நல்ல வழக்கங்களில் ஒன்று. என்ன தான் நாம் சுதேசிகளா யிருந்தபோதிலும் அயல்நாட்டார்களிட முள்ள நல்ல வழக்கங்களை யெல்லாம் நாம் எடுத்துக் கொள்வதே நலம்.

சா. இந்தக் கிழத்துக்கு என்னம்மா வரவர புத்தி இப்படி கெட்டுப்போயிருக்கிறது ? நமது தேசத்தில் இந்த வழக்கம் இல்லையோ ?

வே. பூர்வகாலத்தில் இருந்தது—இப்பொழுதிருக்கிறதா ?

சா. அது வாஸ்தவம்தான்.

வே. நான் சொன்னதற் கர்த்தமென்ன ? என்ன அம்மா கற்பகம், இந்தக் கிழம் வர வர மக்காகப்போகிறதம்மா ! அதிருக்கட்டும்—நாங்கள் வாதாட ஆரம்பித்தால் நாளெல்லாம் போதாது—உனக்கு எப்படி யிருக்கிறதம்மா உடம்பு ?

க. சவுக்கியமாகத்தானிருக்கிறது.—நேற்று ஜுரமேயில்லை. பலஹீனமாய் மாத்திரம் இருக்கிறது.

சா. இனிமேல் ஒன்றும்பயமில்லை அம்மா—காலை மாலை அரை அரைமணி நேரம் இம்மாதிரி வெயில்பட உட்கார்ந்துவா போதும்.

வே. இப்பொழுதாவது தெரிகிறதா இந்த சூர்யனொளியின் பிரயோஜனம் ?

சா. நான்தானே முதலில் அதைக்கண்டு பிடித்தேன் ?

வே. ஏண்டா கிழவா, நீயா கண்டு பிடித்தாய் ? நான் சொல்லி யில்லாவிட்டால் உனக்கு.—

சா. சரி, நம்முடைய சண்டையை அப்புறம் முடிப்போம் வந்த வேலையை மறந்து விட்டாயே, இந்தக்கிழத்துக்கு பேச ஆரம்பித்தால் மூளை கெட்டுப்போய் வளவள வென்று பேசிக்கொண்டிருப்பான் ஓய்வில்லாமல் !

க. என்ன நீங்கள் வந்த வேலை ?

சா. அடே கிழவா, நீதான் சொல்.

வே. நீதான் சொல்.

சா. வேறொன்றுமில்லை அம்மா, உம்—சீதாராமனை கூடிய சீக்கிரத்தில் தன் வீட்டிற்கு அனுப்பிவிட வேண்டுமென்று அவன் தகப்பனார் நிர்ப்பந்தித்த விஷயம்தான் உனக்குத் தெரியுமே. உடம்பெல்லாம் சவுக்கியமாகி விட்டது, இனியொன்றும் பயமில்லை உன் வீட்டிற்குப் போகலாம், என்று காலை சொன்னோம். அவன் அவனுடைய தகப்பனார் வீட்டிற்குப் போகுமுன்—உன்னைப்பார்த்து விட்டுப் போக விரும்புகிறான்.

க. எதற்காக?

வே. வேறு எதற்காக இருக்கப்போகிறது? நீ அவனுக்காக எடுத்துக்கொண்ட கஷ்டத்திற்காக உனக்கு வந்தனமளிக்கவேண்டுமென்று தானிருக்குமென நினைக்கிறேன்.

க. என்ன பெரியப்பா! அவரிடம் சொல்லி விட்டீர்களா என்ன? நான் வேண்டாமென்று கேட்டுக்கொண்டேனே?

வே. நான் சொல்லவில்லை அம்மா, உங்க சின்ன அப்பாதான் சொல்லி விட்டான்—முண்டம்!

சா. ஏண்டா, உனக்கென்னமாகிலும் கேட்கிறதா என்ன? நீ தானே என்னைச் சொல்லச் சொன்னாய்? இப்பொழுது என்னை முண்டமென்கிறாயா?

வே. இல்லை அம்மா, கற்பகம் நீ கோபித்துக்கொள்ளாதே! அவன் நிரம்பபரிதாபமாகக் கேட்டான், அப்பொழுது சொல்ல வேண்டியதாயிற்று.

க. உம்—ஆனால் வரச்சொல்லுங்கள்.

[சாம்பமூர்த்தி ஐயர் வெளியே போகிறார்.]

வே. கற்பகம், நான்தான் சொல்லச்சொன்னேன், வேண்டுமென்றால் என் பேரில் கோபித்துக்கொள், சாம்பமூர்த்தி பேரில் தப்பில்லை. நீ யோசித்துப்பாரம்மா, அவனுக்குத்

தெரிவதில் தப்பொன்றுமில்லை, நல்லதுதான் ஒரு விதத்தில்.

சாம்பமூர்த்தி சீதாராமனை அழைத்துக்கொண்டு வருகிறார்.

சா. இந்தா அம்மா கற்பகம், இதோ சீதாராமன் வந்திருக்கிறான், அவன் உயிரை என்னமோ நீ காப்பாற்றினையாம் அதற்காக உனக்கு வந்தனமளிக்க வேண்டுமாம்.

க. அவர்—அல்லவோ—என் உயிரைக்காப்பாற்றினார், அவர் வந்து தடுத்திரா விட்டால் என்னைக் கொன்றிருப்பார்களென்றே நினைக்கிறேன். அவருக்குப்பட்ட காயம் எனக்கல்லவோ பட்டிருக்கவேண்டும்? நான் அல்லவோ அவருக்கு வந்தனம் அளிக்கவேண்டும்.

வே. அம்மா, உங்கள் இரண்டு பெயர் சண்டையையும் என்னால் தீர்மானிக்க முடியாது!

சீ பெரியப்பா, நீங்கள்தான் தீர்மானம் செய்யுங்கள். நான் ஒன்றும் செய்யவில்லை விசேஷமாக. கற்பகம் தன்னுயிரின் ஹானியையும் பாராது தன் உடலிலுள்ள ரத்தத்தை—

க. தயவுசெய்து இனி இதைப்பற்றி என் எதிரில் பேசாதிருக்கும்படி உம்மைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சீ. உன் இஷ்டம்.

வே. நான் சரியான தீர்மானம் சொல்லுகிறேனம்மா. அவன் உன்னுயிரைக் காப்பாற்றினான்.—நீ அவனுயிரைக் காப்பாற்றினாய்—இரண்டும் சரியாகப் போய்விட்டது.—

சா. நல்ல கோமுட்டி.

வே. ஏண்டா நீமாத்திரம்!

சா. நான் சின்ன கோமுட்டி—அடடே! கிழவா! என்ன மணியாச்சுது பார்த்தாயா? ஒன்பது மணிக்கெல்லாம் அண்ணுசாமி முதலியாரைப் பார்ப்பதாகச் சொன்னோமே? இங்கே உட்கார்ந்துகொண்டு கதைபேசிக்கொண்டிருக்கிறோமே!

வே. அடடா! நானும் மறந்தேன்! இதோ புறப்படுவோம்.

சீ. எந்த அண்ணாசாமி முதலியார்? ஆயிரம்புளுகு அண்ணா முதலியார்?

சா. [சிரித்துக்கொண்டே] ஆமாம்!—அவர் பெண்சாதிக்கு உடம்பு சௌக்கியமில்லை.

க. ராகுகாலத்திற்கு முன்பு போய்ச் சேருங்கள், இல்லாவிட்டால் கஷ்டம்.

வே. அடடா! அவர் சமாசாரம் உனக்குக்கூட தெரியுமா அம்மா?

க. பட்டணத்தில் யாருக்குத் தெரியாது! [நகைக்கிறாள்.]

வே. இதோ நாங்கள் வந்து விட்டோம் அம்மா. சீதாராமா, சீக்கிரம் உன் வீடுபோய்ச்சேர், இல்லாவிட்டால் இன்னொரு காகிதம் எழுதி அனுப்புவார் உங்கள் தகப்பனார்.
[சாம்பமூர்த்தியுடன் வெளியே போகிறார்.]

சீ. கற்பகம்—நான் போய் வரவா?

க. செய்யும்.

சீ. இவ்வளவுதானா எனக்குபதில்?

க. நான் வேறு என்ன சொல்லக்கூடும்?

சீ. உம்—உன்னுடைய தீர்மானத்தினின்றும் மாற மாட்டாயா?

க. அது நியாயமான தீர்மானம் என்று நீரேஒப்புக்கொண்டு அதினின்றும் மாறும்படி நீர் என்னைக் கேட்கலாமா?

சீ. என் தகப்பனார் தன் மனசாற, நான் உன்னை மணக்கும்படி உத்தரவு கொடுப்பாரென்று கனவிலும் நினைக்கிறாயா?

க. நான்—நினைக்கவில்லை.

சீ. ஆகவே நாம் என்ன செய்வது?

க. நம்முடைய தலைவிதியைப் பொறுப்பது!

சீ. இதை மறுபடியும் கூறவோ இறந்து போக வேண்டிய என்னை, உன்னை ஹானியிற் படுத்திப் பிழைப்பித்தாய்?

க. அதைப்பற்றி மறுபடி பேச வேண்டாம் என்று நான் கேட்டுக்கொண்டேனே இல்லையோ? ஆகட்டும் என்று ஒப்புக் கொண்டீரா இல்லையா?

சீ. ஆம்!—ஆம்! நான் அதைப்பற்றிப் பேசவில்லை; இப்படி எண்ணுகிறவள் அவ்வளவு கஷ்டப்பட்டு என்னை ஏன் பிழைக்கும்படிச் செய்தாய், என்று கேட்கிறேன். என்னை இறந்து போகும்படி விட்டிருக்கலாகாதா? இந்த கஷ்டத்தை நான் அனுபவிக்க வேண்டியிராதே!

க. அதைத் தடுக்கும்படியான சக்தி எனக்கிருக்கும்வரை நீர் உமது உயிரை விட நான் பார்த்துக்கொண்டிருப்பேன் என்று எண்ணினீரா? அன்றியும் அப்படிச் செய்ததற்கு இன்னொரு முக்கியமான காரணம் உண்டு.

சீ. என்ன அது?

க. உங்கள் தகப்பனார், பிராம்மணர்களாகிய நாங்கள்தான் முற்காலத்தில் எங்கள் சுய நன்மையைப் பாராது மற்ற சாதியார்களுடைய நன்மைக்காக உழைத்து வந்தோம், என்று பிரசங்கம் செய்கிறாரே, மற்றசாதியர்களிலும் தங்கள் சுய நன்மை பாராது மற்றவர்களுக்காக கஷ்டத்திற்குட்படுபவர்கள் சிலராவது இருக்கிறார்களென்று அவருக்கு ரூபிக்கும் பொருட்டே!

சீ. கற்பகம், நீ என் உயிரைக் காப்பாற்றினாயே எனும் ஆனந்தத்தில், இவ்விதமாக ஆராய்ந்தறியவும் இடங்கொடுக்கின்ற தென்பதைப்பற்றி ஆலோசிக்கவும் அசக்தனாயிருந்தேன். இதுவரையில் என் தகப்பனாரிடம் நம்முடைய விவாகத்தைப்பற்றி எப்படிப் பேசத்துணிவது என்று அஞ்சியிருந்தேன். இந்த ஒரு நியாயமானது எனக்கு பெரும் ஊக்கத்தைக் கொடுத்திருக்கின்றது பலவிதத்தில்; ஆகவே கூடிய சீக்கிரத்தில், அவரிடம் நேராகக் கேட்டுப் பார்க்கிறேன்.

க. அதிற் பிரயோஜனமில்லை என்று தோற்றுகிறது; அவர் என்னவோ மாறமாட்டார். ஆயினும் கேட்டுப்பாரும்—சீக்கிரம்.

சீ. ஏன், என்ன சமாசாரம்?

க. வேறொன்றுமில்லை உமக்கு உடம்பு சௌக்கியமானவுடன்—உமக்கு சூரியநாராயண ஐயர் பெண்ணைக் கலியாணம் செய்விக்க வேண்டுமென்று—யோசித்துக்கொண்டிருக்கிறார் போலிருக்கிறது.

சீ. யார் சொன்னது?

க. அதைப்பற்றி உங்கள் வீட்டில் பிரஸ்தாபம் நடப்பதாக, உங்கள் வீட்டுவேலைக்காரி எங்கள் வீட்டு வேலைக்காரியுடன் நேற்றுப் பேசிக்கொண்டிருந்ததை, நான் அகஸ்மாத்தாய்க் கேட்டேன்.

சீ. ஒருவிதத்தில் நலமே—அவராக என் விவாகத்தைப்பற்றிப் பேச்செடுப்பார், அப்பொழுது நான் பேசுவதற்கு சுலபமாகும்.

க. அதென்ன உமது தகப்பனாரிடத்தில் உமக்கவ்வளவு பயம்?

சீ. பயமல்ல; அவருக்கோ வயதாகிவிட்டது. அவருக்கு நான் ஒரே பிள்ளை. அன்றியும் என்மீது அவர் எவ்வளவு பட்சம் வைத்திருக்கிறார் என்பதை நீ அறியாய். அவருடைய மனதுக்கு வருத்தத்தை யுண்டுபண்ண எனக்குக் கொஞ்சமேனும் இஷ்டமில்லை.

க. நீரே சற்று முன்பாகக் கூறினபடி அவர் என்னவோ இதற்கிசையப் போகிறதில்லை.

சீ. அப்படியல்ல, , உலகமானது அவர் சுபாவத்தை நன்றாயறிந்திலது. வெளிக்கு மிகவும் கடினசித்தமுடையவராயிருப்பதுபோல் காட்டினும், அவரைவிட இளகிய மனதுடையவரை நான் கண்டதில்லை. இந்த இழவெடுத்த பிராமணன் சூத்திரன் என்கிற சண்டையில் அவர் தலை

நுழைத்துக்கொண்டிராவிட்டால் என் வேண்டுகோளுக்கு எப்படியும் இணங்கியிருப்பார். இப்பொழுதும் நான் தைரியத்தை விடவில்லை. என்றைக்காவது ஒருநாள் அவர் சம்மதிப்பார் என்றே எனக்குள் ஏதோ தோற்று கிறது. நீ உன் உயிரை ஹானியிற்படுத்தி என் உயிரைக் காத்தாய் என்பதை அறிந்தாவது, அவர் மனம்மாறு திருக்கிறாரோ பார்ப்போம்.

க. அதை அவரிடம் நீர் கூறுவது எனக்கிஷ்டமில்லை—அப்ப டிச் செய்யாதீர்.

சீ. கற்பகம்! கற்பகம்! என் கைகளை கட்டி விடாதே. வேறெந்த நியாயத்தினாலும் வழிக்கு வாராவிட்டால், கடைசியாக இதை உபயோகிக்கிறேன். கொஞ்சம் தயவு செய்து எனக்கு உத்திரவு கொடு.

க. எனக்கென்னவோ இஷ்டமில்லை, ஆயினும் உம்முடைய இஷ்டம்.

சீ. அவ்வளவு போதும்—பிறகு எனக்கு உத்தரவு கொடுக்கி றாயா?

க. ஒருவேளை அவர் நீர் சூரியநாராயண ஐயர் மகளைக்கலி யாணம் செய்துக் கொள்ளும்படி நிர்ப்பந்தித்தால் என்ன செய்வீர்?

சீ. அன்றைத்தினம் விசாக பௌர்ணமியன்று சமுத்திரக் கரையோரம் நான் கூறியவாக்குறுதியை மறந்தாயோ? நான் அதனின்றும் தவறமாட்டேன். ஒருவேளை நீ தான் தவறுவாயோ என்னமோ?

க. நானா? ஆம், உங்கள் தகப்பனார் கூறுகிறபடி, பிராம்மணர் கள் பொய் பேசமாட்டார்கள்—சூத்திரர்கள் தான் செய் வார்கள்!

சீ. கற்பகம்! கற்பகம்! நீ என்னை என்ன வேண்டுமென்றா லும் தண்டி, இந்த பிராம்மணன் சூத்திரன் என்கிற பேச்சை மாத்திரம் என் முன்னிலையில் எடுக்காதே! நன்

ளுய் அழகாய் இருக்கும் உன் முகத்தை இந்தப்பேச்சை எடுத்து ஏன் கெடுத்துக் கொள்ளுகிறுய் ?

க [புன்சிரிப்புடன்] இல்லை. போய்வாரும், உமக்கு நேரமாகிறது.

சீ. வருகிறேன்—கற்பகம் [மேஜையின் மீதிருக்கும் வெள்ளிக்கோப்பையைக் காண்பித்து] இதை நாம் எப்படி ஜெயித்தோம் என்பது ஞாபகமிருக்கிறதா ?

க. பழயகதை ஆரம்பித்தீரா ?

சீ பழய கதையை ஆரம்பித்ததற்கு ஒரு நியாயமுண்டு. அதைச் சொல்லுகிறேன், அப்புறம் உன் இஷ்டம். அன்று காலை உன் வாயால் எனக்கு அந்த மாத்திரை கொடுத்திராவிட்டால் நான் ஜெயித்தே யிருக்கமாட்டேன் என்று நினைக்கிறேன். இப்பொழுது அதைவிட கஷ்டமான சண்டைக்குப்போகிறேன்—என் தகப்பனுருடைய மனதை ஜெயிக்க! இப்பொழுது இன்னொரு மாத்திரை கொடுக்கமாட்டாயா? என்னை ஜெயித்து வரும்படி உற்சாகப்படுத்த ?

க. யாராவது வரப்போகிறுர்கள்? [சுற்றிப்பார்த்து] இரண்டாகக் கொடுக்கிறேன், நீர் மேற்கொண்ட காரியம் கைகூடும் படியாக ! [இரண்டு முத்தம் கொடுக்கிறுள்.]

சீ. அவ்வளவு போதும்! பரமேஸ்வரன் எப்படியும் நம்மைப் பிரிக்கமாட்டார் !

க. அடடா ! ஒரு க்ஷணம் இரும். இந்த யோசனை எத்தனை நாளாக ! ஸ்வாமியாவது கீமியாவது எல்லாம் சுபாவம் என்று சொல்லிக்கொண்டிருந்தீரே ! எப்பொழுது இந்த புத்திமாறியது ?

சீ. கற்பகம், உனக்கு நான் முன்பே இதைச் சொல்லியிருக்கவேண்டும். நான் அந்த ஆபரேஷனுகி (operation) மயக்கம் தெளிந்து விழித்தது முதல் என் மனதில் இந்த நம்பிக்கை என்ன காரணத்தினுலேயோ உறுதியாய் உதித்திருக்கிறது !

க. மிகவும் சந்தோஷம், போய்வாரும்.

சீ. கண்ணு- இன்னொன்று ?

க. அதெல்லாம் உதவாது, நீர் ஜெயித்தபிறகுதான் !

[சீதாராமன் போகிறான்.]

காட்சி முடிகிறது.



## மூன்றும் காட்சி

இடம்:—ராமகிருஷ்ண ஐயர் வீட்டில் ஓர் அறை.

ராமகிருஷ்ண ஐயர், வெங்கடேச முதலியாரையும் சாம்பமூர்த்தி ஐயரையும் உள்ளே அழைத்துக் கொண்டு வருகிறார்.

ரா. அதெல்லாம் உதவாது, நேற்றைத்தினமே களைப்பில் பேசவேண்டுமென்று பார்த்தேன்; மெல்ல தப்பித்துக் கொண்டு போய்விட்டீர்கள்; உட்காருங்கள். அந்த டைரை (Tyre) யெடுத்து விட்டு வேறு டைர் போடுவதற்கு இன்னும் பத்து நிமிஷமாவது பிடிக்கும் [தானும் உட்கார்ந்து] ஏன், என்னைப்பார்த்தால் இருவரும் தலைமறைவாகப் போய்விடுகிறீர்கள் ? என்னகாரணம் ? சொன்னால்தான் உங்களை விடுவேன் இன்று.

மற்றிருவரும். ஒன்றுமில்லை [நகைக்கின்றனர்.]

ரா. ஏன் நகைக்கிறீர்கள் ? ஏதோ காரணம் இருக்கவேண்டும். என் பிள்ளையின் உயிரைக்காப்பாற்றினீர்கள் நீங்கள்; எங்கள் குடும்ப வைத்தியர் டாக்டர் பெரைரா நீங்கள் உடனே புதிய ரத்தம் புகுவித்தல் என்னும் சிகிச்சை செய்திரா விட்டால், அவன் இறந்தே போயிருப்பான் என்று தெரிவித்தார். அதற்காக உங்களுக்கு நான் நன்றியறிதலாக—

வே. இந்தமாதிரி ஏதாவது பேசுவீர்கள் என்றுதான்—

சா. நாங்கள் தலைமறைவாக இருந்தோம்.

ரா. அவர் ஆரம்பிப்பதை நீர் முடித்து விடும்! உங்களுக்குச் சரியாகத்தான் இரட்டையர் என்று பெயர் வைத்தார்

கள். அதிருக்கட்டும் நீங்கள் எனக்குச் செய்த பரோபகாரத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன் ?

சா. அதைப்பற்றிபேசாதிருத்தலேயாம்.

வே. ஆமாம்.

ரா. இந்த ஒரு முறை மாத்திரம் பேச எனக்கு உத்தரவு கொடுங்கள், என் வம்சத்தையே நீங்கள் காப்பாற்றியிருக்கிறீர்கள். அவன் எனக்கு ஒரே பிள்ளை யென்பது உங்களுக்குத் தெரிந்த விஷயமே. அவன் உயிரைக் காப்பாற்றியதற்கு நான் உங்களுக்கு நன்றியறிதலுடைய வனாயிருக்கவேண்டும். உங்களுக்கு என்ன பொருள் கொடுத்தாலும் போதாது. அப்படிக் கொடுத்தாலும் நீங்கள் வாங்கிக் கொள்ளமாட்டீர்கள் என்பதை நான் அறிவேன்—எனக்கு இதுதான் தோற்றுகிறது—உங்களுக்கு எப்பொழுதாவது—என்னால் செய்து முடிக்க வேண்டியது ஏதாவதிருந்தால் சொல்லுங்கள்—அதன்படி செய்கிறேன் இவ்வளவுதான் நான் செய்யக் கூடியது.

வே. ஆனால்—

சா. நான் சொல்லுகிறேன்—இப்பொழுது ஒன்றும் வேண்டியதில்லை ; அப்படிப்பட்ட சமயம் ஏதாவது நேரிட்டால்—உம்மைக்கேட்கிறோம். நீர் கூறியதை மறவாதீர்கள்.

வே. அதைத்தான் நானும் சொல்லலாமென்றிருந்தேன்.

ரா. [சிரித்துக்கொண்டே] நீங்களிருவரும், கம்பியில்லாமல் தந்தி பேசுகிறீர்களே அம்மாதிரி ஏதாவது வைத்துக்கொண்டிருக்கிறீர்களா என்ன ? உங்கள் இருவருக்கும் எல்லாவிஷயங்களும் ஒரே மாதிரி புத்தியிற்படுகிறாற் போலிருக்கிறது எப்போழுதும் ! அப்படியே ஆகட்டும். என்வாக்கினின்றும் நான் தவறேன்.

வே. உம்—நாம் புறப்படலாம் என்கிறாயோ ?

சா. ஆமாம்—நேரமாச்சுது.

ரா. ஒரு நிமிஷம்—இதோ டாக்டர் பெரைரா வருகிறார்.

டாக்டர் பெரைரா வருகிறார்.

குட்மார்னிங் டாக்டர்! [கையைபிடித்துக் குலுக்குகிறார்] பையன் என்னமாயிருக்கிறான்?

பெ. மிகவும் சவுக்கியமாயிருக்கிறான். எல்லாம் பரிசோதித்துப் பார்த்தேன்.

ரா. சந்தோஷம்—டாக்டர்—இவர்கள் உங்களுக்குத் தெரியுமோ? இவர் வெங்கடேச முதலியார், இவர் சாம்பமூர்த்தி ஐயர்.

பெ. ஓகோ! இவர்களைப் பற்றி நான் இந்தப் பட்டணத்திற்கு வராததன் முன்பே கேள்விபட்டிருக்கிறேன். இவர்கள் பெயர் எங்கும் பரவி யிருக்கின்றதே—பணம் வாங்காமல் வயித்தியம் செய்யும்—

வே.சா. பயித்தியக்காரர்கள் என்று! [எல்லோரும் நகைக்கின்றனர்.]

பெ. அதிருக்கட்டும் ராமகிருஷ்ண ஐயர், இவர்கள் அன்று உடனே அந்த ஆபரேஷன் செய்திராவிட்டால் உங்கள் மகன் பிழைத்திருக்கமாட்டான். இவர்களுக்கு நீங்கள் மிகவும் நன்றி யறிதலுடையவராயிருக்கவேண்டும்—

ரா. அதை நான் சொன்னால் கேட்கவும் மாட்டேன் என்கிறார்கள்.

பெ. அது அவர்களுடைய மேம்பட்ட குணத்தைக் குறிக்கிறது—என்னசார்? மிஸ்டர் வெங்கடேச ஐயர், சீதாராமையருக்குத் தன் ரத்தத்தைக் கொடுத்தது எங்கள் காலேஜ் ஸ்டூடெண்ட் (Student) என்று கேள்விப்பட்டேன்—யார் அந்த ஸ்டூடெண்ட்?

வே. உங்கள் காலேஜில் படிக்கிற பிள்ளை தான்—

சா. தன் பெயரை ஒருவரிடமும் கூறக்கூடாதென்று கட்டாயப் படுத்தியிருக்கிறு—

பே. அப்படியா! மிகவும் சந்தோஷம்! அவனுடைய மேன்மை யான குணம் மிகவும் மெச்சத்தக்கது—நான் வருகி றேன்—குட்டே! குட்டே! (Good Day)

[எல்லோருடைய கரத்தையும் பற்றிக் குலிக் கிவிட்டுப் போகிறார். அறையிலுள்ள கடி யாரம் பத்துமணி அடிக்கிறது.]

ரா. பத்துமணியாகி விட்டதா?—சாம்பமூர்த்தி, நீங்கள் சாப்பிட்டு விட்டுப்போகலாமே? வெங்கடேசம், நீயும் வழக் கம்போல்—சாப்பிட்டுவிட்டுப் போகலாமே? உங்களுடன் உட்கார்ந்து சாப்பிடவில்லை என்று கோபித்துக்கொள்ளக் கூடாது. ஏதோ பெரியவாள் ஏற்பாடு செய்துவிட்டுப் போயிருக்கிறார்கள், அதை நான் அனுஷ்டிக்க வேண்டிய வனாயிருக்கிறேன்.

வெ. அதொன்றும் எனக்கு ஆட்சேபனையில்லை—உடனே சாப்பிடப் போகிறீர்களோ?—ஸ்நானம் எல்லாம் ஆய் விட்டதா?

ரா. ஸ்நானம் எல்லாம் முன்பே ஆய்விட்டது—இலை போட் டிருக்கிறது, உட்கார வேண்டியது தான்.

வெ. இதோ வந்து விட்டேன்—ஒரு சந்தேகம் மாத்திரம்— அதைக்கேட்பதற்கு மன்னிக்கவேண்டும்.

ரா. என்ன வெங்கடேசம்?—தாராளமாய்க்கேள்—இந்த ஒரு வித்யாசம் தவிர உன்னை யேதாவது அன்னியனாகப் பாவிக்கின்றேனா?

வெ. இல்லை! ஆகவே நான் தாராளமாகக் கேட்கத் துணி கிறேன்—ஏதோ பெரியவாள் ஏற்படுத்திய ஏற்பாட்டி ற்குக் குறுக்காகப் போகமுடியவில்லை என்று கூறினீரே, இப்பொழுது சற்று முன்பாக நம்முடைய கைகளையெல் லாம் பற்றிக் குலுக்கி விட்டுப்போன டாக்டர் பெரைரா— ஜாதியில் பறையன்— ஓகோ! இப்போது நான் ஆதிதிரா விடன் என்று கூறவேண்டும். பறையனைத் தீண்டினால், உம்முடைய பெரியவர்கள் என்ன பிராயச்சித்தம் செய்

யச் சொல்லியிருக்கிறார்கள்—அதெல்லாம் செய்தாயதா? நேராகத்தானே சாப்பிட உட்காரப் புறப்பட்டீர்?

ரா. வெங்கடேசம்! நீ எப்பொழுது பார்த்தாலும் என்னை சங்கடத்திற்கு இழுத்து விடுகிறாய்—இம்மாதிரியான கேள்விகள் கேட்டு!

வே. அதிருக்கட்டும், பதில் சொல்லுங்கள் என் கேள்விக்கு.

ரா. நீ சொல்வது வாஸ்தவம் தான்—அது தவறுதான்—ஆயினும் டாக்டர் பெரைரா இப்பொழுது கிறிஸ்தவனாய் விட்டானே!

வே. அதைத்தான், சொல்வீர்களென்று காத்துக்கொண்டிருந்தேன். ஒரு பறையன் ஹிந்துவாயிருந்தால் அவனைத் தீண்டலாகாது நீர், அவன் கிறிஸ்தவனுகி விட்டால் தீண்டலாம்! இப்படி இருந்தால் நமது ஹிந்து மதம் எப்படி விர்த்தியாகிறது! இதனால்தான் ஆதிதிராவிடர்களெல்லாம்—வர வரக் கிறிஸ்துவர்களாகிறார்கள். அவர்கள் மீது குறை கூறுவானேன்! இதுதானு நீர் உமது சனுதன ஹிந்துமதத்தைக் காக்கும் மார்க்கம்?

ரா. வெங்கடேசம், நீ சொல்வது சரிதான்—நான் ஒப்புக்கொள்ளவேண்டியதே! ஆயினும் இந்தப் பறையர்களில்—ஆதிதிராவிடர்களில்—பெரும்பாலர் என்ன அசுசியாயிருக்கிறார்கள்? அவர்களைத் தீண்டுவதென்றால் உனக்குத்தான் மனம் ஒப்புகிறதா? டாக்டர் பெரைரா ஜாதியில் பஞ்சமனுயிருந்தாலும்—எவ்வளவு சுசியாயிருக்கிறான்! அவனைத் தீண்டுவதில் எனக்குக்கூட அருவருப்புத் தோன்றவில்லை.

வே. உங்கள் வாயிலிருந்து இது வந்தது எனக்கு மிகவும் சந்தோஷம், ஐயரவாள்! வாஸ்தவமாய் நீங்கள் யோசித்துப் பாருங்கள், முற்காலத்தில் நமது பெரியோர்கள் அவர்களைத் தீண்டலாகாது என்று கூறியதற்கு முக்கிய காரணம் அவர்கள் அசுத்தமான வழக்கங்களே என்பது

தான் என்று உமக்கே புலப்படும். வர வர இதெல்லாம் மாறவேண்டாமா ?

ரா. ஆகவே, நீ சொல்வதென்னவென்றால் இந்த ஜாதிபேதமே கூடா தென்கிறாய். பிராம்மணன், சூத்திரன், பஞ்சமன் எல்லாம் ஒன்றாக வேண்டுமென்கிறாய் !

வெ. நாம் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் முடிவில் அப்படித்தான் வந்து சேருமென்பதற்குச் சந்தேகமில்லை. உங்களுடைய புராணங்களிலும் இதிகாசங்களிலும் தான் கூறியிருக்கிறதே, கலியுகத்தில் ஜாதிகளெல்லாம் ஒன்றாய் சங்கிரணமாகி விடுமென்று !

ரா. ஆகவே, இந்தப் பிரிவுகளெல்லாம் அடியுடன் அற்றுப் போய் எல்லோரும் சமமாய்ப்போய் விடுவார்களென்று நினைக்கிறாயா ?

வெ. நான் அப்படி நினைக்கவில்லை. கடைசியில் இரண்டு பிரிவுகள் தான் நிற்கும்.

ரா. என்ன அவை ?

வெ. மனம், வாக்கு, காயம், மூன்றிலும் பரிசுத்தமானவர்கள் உயர்ந்தோர் என மதிக்கப்படுவார்கள்; அம்மூன்றிலும் பரிசுத்த மில்லாதார்கள் தாழ்ந்தவர்கள் என மதிக்கப் படுவார்கள் ! பிறப்பினால் ஒருவன உயர்ந்தவனும் தாழ்ந் தவனுமாகமாட்டான்; அவனது நடவடிக்கைகளினாலும் குணாதிசயங்களினாலும் அவன் உயர்ந்தவனாகவும் தாழ்ந் தவனாகவும் மதிக்கப்படுவான்.

ரா. அந்த காலம் எப்பொழுது வருமோ பார்த்துக் கொள் வோம் ! நம்முடைய ஜன்மத்தில் வரப்போகிறதில்லை.

வெ. வாஸ்தவம்தான், ஒப்புக்கொள்ளுகிறேன். ஆயினும் அந்த ஸ்திதியை யடையும்படியாக நாம் பிரயத்னப்படவேண் டாமா ?

ரா. நாம் என்ன பிரயத்னப்படுவது ? நம்மால் என்ன முடியும் ? கறுப்பு நாய் எப்பொழுதாவது வெள்ளை நாயாகு மோ?

வே. கறுப்புநாய் வெள்ளை நாயாகா விட்டாலும், வெள்ளை நாயைப்போல் சுத்தமான நாயாகலாம் அல்லவா ?

ரா. நீங்களிரண்டு பேரும் சேர்ந்தால் ஏதாவது புதிர் போட்டுக்கொண்டிருக்கிறீர்கள் !

வெங்கடேச முதலியார் ஷாபர் வருகிறான்.

வே. ஷா. கார் சரியாகி விட்டது.

வே. சந்தோஷம்—ஐயரவாள், இன்னொருவேளை சாப்பாட்டிற்கு வருகிறோம்—எங்களை மன்னிக்கவேண்டும்.

ரா. சரி—உங்களிஷ்டம்.

சா. நாங்கள் சொன்னதைக் கொஞ்சம் யோசனை பண்ணிப் பாருங்கள். அதில் கொஞ்சம் யோசிக்கவேண்டிய விஷயமிருக்கிறதென நீங்களே ஒப்புக் கொள்வீர்கள்.

ரா. உம்—வாஸ்தவம் தான் !

வே. சா. நாங்கள் வருகிறோம் [விடைபெற்றுப் போகின்றனர்.]

காட்சி முடிகிறது.



## நான்காம் காட்சி

இடம்—ராமகிருஷ்ண ஐயர் வீட்டில் ஓர் அறை.

ராமகிருஷ்ண ஐயரும் சத்யநாராயண ஐயரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர்.

ரா. என்ன அவ்வளவு அவசரமான சமாசாரம் ? நாளை காலை வரமுடியாதா தயவு செய்து ? கொஞ்சம் வேலையாயிருக்கிறேன் இப்பொழுது—

சத். நீங்கள் எப்பொழுது தான் வேலையில்லாதிருக்கிறீர்கள் ? அறுபது நாழிகையும் வேலைதான் உமக்கு !—முனிசிபல் எலெக்ஷன் வேலையோ ? சட்டசபையில் தான் ஜெயித்தாய்விட்டதே, இந்த முனிசிபல் எலெக்ஷன் எப்படிப் போனால் என்ன ?

ரா. அதுதான் உங்களுக்குத் தெரியாது. இந்த முனிசிபல் எலெக்ஷனில் அவர்களை ஜெயிக்க விட்டோமோ, பிறகு

மெல்ல மெல்ல அவர்கள் பலமடைந்தவர்களாய் சட்ட சபையிலும் நம்மைத் தோற்கடித்து விடுவார்கள், அதற்காகத் தான் இரவு பகலாக நான் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது.

சத். ஆமாம், இந்தமாதிரி ஊர் விவஹாரமெல்லாம் தலைமேல் எடுத்துப் போட்டுக்கொள்ளும், உம்முடைய சொந்த ஆத்து விவஹாரம் எக்கேடு கெட்டாலு மும்க்கென்ன?

ரா. அதென்ன ஐயரவாள்! புதிய சமாசாரமாயிருக்கிறது! எங்கள் ஆத்து சமாச்சாரம் என்ன?

சத். வேறென்ன இருக்கப்போகிறது? உங்கள் பிள்ளையாண்டான் சாமாசாரம்தான். அப்பொழுதே சொன்னேனே, அவனை சீமைக்கு அனுப்புவதன்முன் அவனுக்கு ஒரு கலியாணத்தைப் பண்ணிவிட்டு பிறகு அனுப்பும் என்று, அப்பொழுது என் பேச்சு ஏற்கவில்லை உமக்கு?

ரா. நீர் எப்பொழுதும் சம்சயப்பிராணி—நீர் நினைத்தபடி அவன் ஏதாவது வெள்ளைக்காரிச்சியைக் கலியாணம் பண்ணிக்கொண்டு வந்துவிட்டானு என்ன?

சத். அப்படிச் செய்தாலும் பரவாயில்லையே! அதைவிட கேடான சமாசாரத்திற்கு வழி தேடிக்கொண்டிருக்கிறுன்!

ரா. அதென்ன அது!

சத். நீர் உடனே அதைத் தடுக்காவிட்டால்—ஒரு சூத்திரப் பெண்ணைக் கலியாணம் செய்துக்கொள்ளப் போகிறுன்! அதுவும் பரம பிராம்மணத்துவேஷியும் உம்முடைய ஜன்ம வைரியுமாகிய தர்மலிங்க முதலியாருடைய மகளை!

ரா. என்ன!—யார் சொன்னது உமக்கு?

[தான் எழுதிக்கொண்டிருந்த பேனவை மேஜையின் பேரில் வைக்கிறார்.]

சத். யார் சொன்னால் என்ன உமக்கு? வாஸ்தவமா இல்லையா வென்று அவனை நேரில் அழைத்துக் கேட்டுப்பாரும்—

நான் வருகிறேன்—நான் இங்கிருந்தால் நான் ஏதோ கோள் சொல்லினேன் என்று நினைப்பான்.

[போகப்புறப்படுவது போல் பாசாங்கு செய்கிறார்.]

ரா. இல்லை, கொஞ்சம் உட்காருங்கள். என்ன சமாசாரம்? கொஞ்சம் விளங்கச் சொல்லுங்கள். இது வாஸ்தவம் தானா? உமக்கெப்படித் தெரிந்தது?

சத். [உட்கார்ந்து] என் பெயரை இழுத்து விடாதீர்—முன்பே சீதாராமனுக்கு என் பேரில் கோபமிருக்கிறது—இந்தக் கடிதத்தைப்பாரும்—சீக்கிரம் படித்துவிட்டு என்னிடம் கொடுத்து விடும்—அவன் வரப்போகிறான்.

[ஒரு நிருபத்தைக் கொடுக்கிறார்.]

ரா. [அதை விரைவிற் படித்துப் பார்த்து] ஓ! அப்படியா சமாசாரம்!—இந்தக் கடிதம் உமக்கு எப்படிக்கிடைத்தது?

சத். ஐயரவாள்! கோர்ட்டில்தான் உமக்கிந்த வழக்கம், வீட்டிலுமா இருக்கவேண்டும்? உண்மையை அறிந்தவுடன், இதைத் தடுக்க ஏதாவது மார்க்கம் தேடுவதா? அல்லது நம்முடைய குடும்பத்தின நன்மையைக் கோரி இதை உமக்குத் தெரிவித்த என்னைக் கிராஸ் (Cross) கேள்வி கேட்பதா? இது உம்முடைய குமாரன் கையெழுத்து தானே?

ரா. [அக்கடிதத்தை மறுபடியும் பார்த்து] ஆம்—அதற்குச் சந்தேகமில்லை.

சத். இப்பொழுதாவது நான் சந்தேகப்பட்டது சரிதான் என்று ஒப்புக்கொள்ளுகிறீரா? அதெல்லாம் போனாற் போகட்டும்—இப்பொழுது என்ன செய்யப் போகிறீர் சொல்லும்.

ரா. அதைத்தான் யோசிக்கிறேன்!—இப்படி நேரிடுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. இப்படி ஏதாவது நேரிட்டால் என் பெயர் என்னாகும்! சனாதனதர்ம சபைக்கு நான் பிரிசிடென்டாயிருந்து, என் மகனை இப்படி நடந்

தால் பிறகு பிராம்மணர்களெல்லாம் என்னை எப்படி மதிப்பார்கள் !

சத் அது கிடக்கட்டும்; இந்த சூத்திரர்களெல்லாம் உம்மை என்ன ஏளனம் செய்வார்கள் !

ரா. ஆம் ஆம் ! [எழுந்து கலவரத்துடன் உலாவி] இதை எப்படி யாவது தடுக்கவேண்டும்.

சத் அதுவும் உடனே—வீட்டில் அம்மாளுக்கு உடம்பு ரொம்ப காயலாயிருக்கிறதாகக் கேள்விப்படுகிறேன்—வயித்தியர்களும் ஏதோ சந்தேகமாகச் சொல்லுகிறார்களாமே— இந்த சந்தர்ப்பத்தில் சீதாராமன் ஏதாவது தப்பு தண்டாபண்ணுவானாயின்—இன்னும் கொஞ்சநாளாவது பிழைத்திருப்பதை விட்டு, உடனே ஏதாவது கெடுதியாக முடியினும் முடியும்.

ரா. ஆம் ஆம் !—இந்த ஆவணிமாசம் போனால் சாதுர்மாஸ்யம் வந்து விடுகிறது—இதற்குள் அவனுக்குத்தக்க பெண்ணைப் பார்த்து எப்படி கலியாணத்தை முடிப்பது? என்ன சங்கடம் ! என்ன சங்கடம் !

சத். ஐயரவாள் ! நான் ஒரு யோசனை சொல்கிறேன், கேளுங்கள். முன்பு நான் இந்தப் பிரஸ்தாபம் செய்த போது தாம் ஏதோ ஆட்சேபனை சொன்னீர்கள்—இப்பொழுது என் பெண்—ஜானகி—இன்டர் மீடியேட் பரிட்சையில் தேறியிருக்கிறாள்—இனிமேல் அவளுக்குக் கலியாணம் செய்யாமல் வைத்துக் கொண்டிருப்பதும் நல்லதல்ல—எனக்குஒரே பெண்—லட்ச ரூபாய் நகையுடன் கன்னிகாதானம் செய்து கொடுக்கிறேன்—என் தம்பிக்கும் குழந்தைகளில்லை—அவனுக்குப் பிற்காலம் அவன் சொத்தும் இவளுக்குத்தான் சேரும்—இதை எப்படி யாவது முடித்துவிடுங்கள்—வேறு யோசனை இல்லை.

ரா. இரண்டு வருஷங்களுக்கு முன்பு—இதைப்பற்றி நான் பிரஸ்தாபம் செய்த பொழுது அவன் ஏதோ—ஆட்சேபனை செய்தானே—

சத். ஆமாம்! சூத்திரப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்று விரும்புபவன், எந்த பிராம்மணப் பெண்ணுக்கும் ஏதாவது ஆட்சேபம்தான் செய்வான்! பிறகு உம்முடைய இஷ்டம்—நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். சனாதன தர்ம பரிபாலன சபையின் பிரசிடெண்டின் மகனே ஒரு சூத்திரப் பெண்ணை விவாகம் செய்து கொண்டான் என்று ஊரெல்லாம் சிரிக்கும் நாளை! நான் என் கடனைத் தீர்த்து விட்டேன். பிறகு உம்முடைய இஷ்டம்—அந்தக் காகிதத்தைக் கொஞ்சம் கொடுங்கள்.

ரா. கொஞ்சம் பொறுங்கள்—அவசரப்படாதீர்கள்—அவன் வந்ததும் சொல்லிப்பார்க்கிறேன்-இதைக்காட்டி அவனை நேராகக் கேட்கிறேன்.

சத் அவனைக் கேட்பதில் ஒன்றும் பயனில்லை—அவனை அழைத்து இந்த மாதிரி உன் கலியாணத்தை முடிவு செய்து கொண்டேன் என்று சொல்லிவிடும். அவன் என்ன உமது பேச்சைத் தட்டுவானா என்ன?

ரா அவன் குணம் உமக்கு நன்றாய்த் தெரியாது. அவனை பலாத்காரம் செய்வதில் ஒன்றும் பிரயோஜனமில்லை—மெல்ல சாந்தமாய்த் திருப்பினால்தான் முடியும் நமது காரியம்.

சத். அதெல்லாம் உங்கள்பாடு—இதோ கடைசி வார்த்தை சொல்லுகிறேன். நாளை தினத்திற்குள்ளாக எனக்கிரண்டிலொன்று தீர்மானமாகத் தெரியவேண்டும். ஆட்வோகேட் ஜெனரல் (Advocate - General) ஜம்புஸ்வாமி ஐயர் இரண்டாவது பிள்ளைக்கு மேலே விழுந்து கேட்கிறார்கள். நாளை தினம் அவர்களுக்கு முடிவான வார்த்தை சொல்வதாகச் சொல்லியிருக்கிறேன். ஆகவே உம்முடைய தீர்மானம் நாளைக்குள் எனக்குத் தெரியவேண்டும்—நான் வருகிறேன்.

ரா. வாருங்கள்—நாளைக்குள் உங்களுக்கு பதில் சொல்லியனுப்புகிறேன்.

சத். எல்லாம் உங்கள் கையிலிருக்கிறது-நீங்களே உங்கள் பிள்ளை பிராம்மண்யம் தவறி நடக்க விட்டால், பிறகு எல்லோரும்தான் அப்படி நடக்க ஆரம்பிப்பார்கள். பிறகு பிராம்மணர் என்பதே அற்றுப் போகும் நம்முடைய தேசத்தில்—அதுபோனால், பிறகு இந்து மதமே போகும்! நம்முடைய மதாசாரத்தைக் காப்பாற்ற வேண்டுமென்றிருந்தால்—அன்றியும் உம்முடைய சம்சாரம் பிழைத்திருக்க வெண்டுமென்றால்— உம்முடைய மகனுக்கு எப்படியாவது புத்தி சொல்லி, என் பெண்ணைக் கலியாணம் செய்துக் கொள்ளச் சொல்லும்.

ரா. அப்படியே ஆகட்டும். நீர் போய் வாரும்.

[வெளியில் மோட்டார் சப்தம்.]

அதோ அவன் வந்து விட்டான் போலிருக்கிறது!

சத் அப்படிச் சொல்லுங்கள் தீர்மானமாக—நிரம்ப சந்தோஷம்—அவர்களுக்கு இல்லையென்று சொல்லிவிட்டு, சீக்கிரம் நாள் குறித்துக்கொண்டு, நான் ஏற்பாடுகள் எல்லாம் செய்து விடுகிறேன். இன்றைக்கு நான் வீட்டை விட்டுப் புறப்படும் பொழுதே நிரம்ப நல்லசகுனம் ஆயிற்று—எது தவறினாலும், சகுனம் மாத்திரம் தப்பாது—நான் காலை வந்து பார்க்கிறேன். வருகிறேன்.

[போகிறார்.]

ரா. என்ன தர்ம சங்கடம்!—எப்படியாவது அவனை வழிக்குக் கொண்டு வரவேண்டும். இல்லாவிட்டால் எல்லோரும் என் பெயரைத் தூற்றுவார்கள்! அவன் பிடிவாதம் பிடிப்பானுயின் மரகதம் உடனே இறப்பாள்! ஆயினும் அவன் சீமைக்குப் போகுமுன் அவனிடம் அந்தப் பிரமாணம் வாங்கிக் கொண்டது நலமாயிற்று. என்ன நேர்ந்த போதிலும் அதினின்றும் அவன் தவறான்!—அடே போயி!

போயி வருகிறான்.

சின்ன ஐயரை இங்கே வரச்சொன்னேன் என்று சொல்.

சீதாராமன் வருகிறான்.

சீ. என்ன அப்பா, இதோ நானே வந்து விட்டேன்.

ரா. போயி, நீ போ வெளியே. [போயி போகிறான்.]

சீ. என்ன விசேஷம் அப்பா?

ரா. சீதாராமா, உன்னுடன் கொஞ்சம் சாவகாசமாய்ப் பேச வேண்டியிருக்கிறது. இப்பொழுது சாவகாசம் தானா?

சீ. என்ன அப்பா விளையாடுகிறீர்? உம்முடன் பேசுவதற்கு எனக்கு எப்பொழுது சாவகாசமில்லாமற் போயிற்று? என்ன சமாசாரம்?

ரா. இல்லை, இப்பொழுது பெரிய சிவில் சர்வென்ட் (Civil Servant) ஆய் விட்டாய்! முன்புபோல் சாவகாசமிருக்குமா என்று கேட்டேன்.

சீ. என்ன ஏளனம் செய்கிறீர்! உமக்கு நான் கவர்ன்மென்டில் இந்த உத்யோகம் ஒப்புக்கொண்டது இஷ்டமில்லை யென்று ஒரு வார்த்தை சொல்லும், உடனே ராஜீனமா கொடுத்து விடுகிறேனா இல்லையா பாரும்.

ரா ஆம், இஷ்டமில்லாத படியினால்தான் இவ்வளவு ரூபாய் செலவழித்து உன்னை சீமைக்கு அனுப்பினேன்!—உட்கார்—வெளியிற் போயிருந்தாற் போலிருக்கிறது—எங்கே போயிருந்தாய்?

சீ. டாக்டர் ராமராவ் வீட்டிற்குப் போயிருந்தேன்—

ரா. என்ன விசேஷம்? உனக்கு உடம்பு ஒன்றும் இல்லையே?

சீ. எனக்கா!—எனக்கு நடந்தால் உடம்பு கூட கூட வருகின்றது! அவ்வளவுதான் வேறொன்றுமில்லை. அம்மாவைப் பற்றிக் கேட்கப்போனேன். காலை சர்ஜன் ஜெனரலைக்கன்சல்ட் (Consult) பண்ணினீரே அவர் என்ன சொன்னார் என்று கேட்கப்போனேன்.

ரா. அவர் என்ன சொன்னாராம்?

சீ. வியாதி என்னவோ தீராத வியாதிதான், ஆயினும் ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தால் சில வருஷங்கள் கூடத்

தள்ளலாம்; ஆயினும் ஹிருதயம் மிகவும் பலஹீனப்பட்டிருக்கிறது; ஆகவே திடீரென்று அதற்கு அதிர்ச்சியைக் கொடுக்கும்படியான விஷயம் ஒன்று மில்லாதபடிப் பார்த்துக்கொள்ளவேண்டும் என்று தெரிவித்தாராம்.

ரா. ஆகவே—உன்னுடைய தாயார் இன்னும் சிலகாலம் ஜீவித்திருக்க வேண்டுமென்று விரும்புகிறாயா ?

சீ. அப்பா ! இன்றைக்கென்ன, என்றுமில்லாதபடி புதுமாதிரியாகப் பேசுகிறீர் ? இப்பொழுது நீர் கேட்ட கேள்வியைவிட, நான் இவ்வுலகில் உயிரோடிருக்க விரும்புகிறேனா இல்லையா என்று கேளுமே ? உங்களிருவரையும் என் தெய்வமாகப் பூசித்து வருகிறேன் என்பதை மறந்து பேசுகிறீரா ?

ரா. இல்லை, இப்பொழுது பெரிய உத்தியோகஸ்தனாய் விட்டாயே, இனி இதையெல்லாம் மறந்துவிடுவாயோ என்னவோவென்று கேட்டேன்.

சீ. அப்பா ! இன்னொருமுறை இந்த உத்தியோகத்தைப் பற்றிப் பேசுவீராயின் அந்தட்சணம் ராஜீனாமாகொடுத்து விட்டு மறுவேலை பார்ப்பேன் ! ஞாபகமிருக்கட்டும்—என் வாக்கினின்றும் எப்பொழுதும் நான் மாறமாட்டேன் என்பதை நீர் நன்றாயறிந்திருக்கிறீர்.

ரா. ஒருமுறை கூறிய வாக்கினின்றும் எப்பொழுதும் மாறமாட்டாயே ?

சீ. நீரே கெட்டாலும் மாறமாட்டேன் !

ரா. சந்தோஷம் !—இந்தக் கடிதத்தைப்பார் - இது நீ எழுதியதுதானா ? [நிருபத்தைக் கொடுக்கிறார்.]

சீ. ஆம்—நான் அல்லவென்று சொல்வேன் என்று எண்ணினீரா ?—இது எப்படி உமக்குக் கிடைத்தது ?

ரா. சீதாராமா, இதை ஒன்றும் தவறான மார்க்கத்தில் நான் பெறவில்லை. தெய்வச்செயலாய் எனக்குக் கிடைத்தது ;

சீ. தெய்வச் செயலாய்க் கிடைத்ததா? சனியின் செயலாய்க் கிடைத்தது எனக் கூறும்! இதைத் திருடிக்கொண்டு வந்து உம்மிடம் கொடுத்தது யார் என்று நான் அறியேன் என்று எண்ணினீரா? என்னுடைய சகுனிமாமா தானே கொண்டுவந்து கொடுத்தார்?

ரா. சீதாராமா, இதையார் எனக்குக் கொடுத்தது என்பதைப்பற்றி என்னைக் கேளாதே! நான் அதை வெளியிட அசக்தனாயிருக்கிறேன்.

சீ. நீர் உமது வாயாற் சொல்ல வேண்டியதில்லை. உமது கண்களே எனக்கு பதில் கொடுத்துவிட்டன.

ரா. அதிருக்கட்டும்—சீதாராமா, இப்பொழுது நீ என்ன செய்யப்போகிறாய்?

சீ. [தலைகுனிந்து] உங்கள் அனுமதியைக் கேட்கப்போகிறேன்—கற்பகத்தைக் கலியாணம் செய்துகொள்ள.

ரா. உம்!—நான் அனுமதி கொடுக்காவிட்டால்?

சீ. என்னுடைய நியாயங்களைமாத்திரம் நீர் கேட்பீராயின் எப்படியும் நீர் உத்திரவு கொடுப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

ரா. [தலையசைத்து] நான் அவ்வாறு நினைக்கவில்லை.

சீ. அப்பா, என் நியாயங்களைக் கேளாமலே தீர்மானித்துவிடலாமா?

ரா. நான் தீர்மானிக்கவில்லை; என் அபிப்பிராயத்தைத் தெரிவித்தேன்.

சீ. நீர் ஐகோர்ட்டு ஜட்ஜ் ஆனால், வியாஜ்யத்தை விசாரிக்கு முன்னமே, உமது அபிப்பிராயத்தைத் தெரிவிப்பீர்போலிருக்கிறது?

ரா. [கொஞ்சம் நகைத்து] இல்லை இல்லை! உன் நியாயங்களைச் சொல் கேட்கிறேன்—என் மனதை உன் நியாயங்களினால் திருப்பமுடியுமானால் உனக்கு அனுமதிகொடுக்கிறேன்—

சீ. அவ்வளவு கூறினீரே போதும். கொஞ்சம் சாவகாசமாய் என் நியாயங்களை—

ரா. கொஞ்சம் பொறு—உன்னுடைய நியாயங்களையெல்லாம் கேட்டபின்னும், என்மனம் மாறாவிட்டால்—நான் அனுமதிகொடுக்காவிட்டால்—என்னசெய்வாய் சொல்—என் அனுமதியின்றி ஒருத்தியையும் கலியாணம் செய்துகொள்வதில்லையென்று சீமைக்குப் போகுமுன் எனக்கு இந்த அறையில், உன்தாயார் முன்னிலையில் செய்துகொடுத்த பிரமாணத்தினின்றும், தவறுவாயா ?

சீ. உம்—மாட்டேன்—ஒருகாலும் மாட்டேன் !

ரா. [பெருமூச்செறிந்து] அப்பா ! சந்தோஷம். இனி நீ பிராம்மண குலத்துதித்து, பிராம்மணப் பெண்ணை க்கலியாணம் செய்துகொள்ளாமல்—ஒரு சூத்திரப்பெண்ணை நீ கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்பதற்கு, உன் நியாயங்களை யெல்லாம் சொல்—[தன் மேஜையின்பேரில் இருக்கும் டெலிபோன்மணி அடிக்கிறது] கொஞ்சம்பொறு—யார் பேசுகிறது ? நீயா ? என்னசமாசாரம் ? உம்—உம்—எலெக்ஷன் விஷயமாகவா ? உம்—நான் இப்பொழுது வரமுடியாதென்று சொல்—எந்த அவசரமான விஷயமானும் முடியாதுஎன்று சொல்—ஒருமுறை சொன்னால்—மறுபடி கேட்பதில் பிரயோஜனமில்லை யென்று சொல்—சரிதான் ! [டெலிபோன் குழாயைக் கீழேவைத்துவிட்டு] மன்னிக்கவேணும்—சொல் சீதாராமா.

சீ. நான் எனது நியாயங்களைக் கூறுமுன் இரண்டொரு சில்லரை விஷயங்களை உங்களைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

ரா. என்னகேள் ?

சீ. முதலில், இவ்விஷயத்தில் நீங்கள் தீர்மானம்செய்யும் வரையில் நீர் எனது தந்தையென்பதை மறந்துவிடும்—நீர் ஒருநியாயாதிபதி—நிஷ்பட்சபாதமாய் உமது தீர்மானத்தைச் சொல்லவேண்டும்.

ரா. அப்படியே ஆகட்டும்.

சீ. இரண்டாவது. உம்முடன் இவ்விஷயத்தைப்பற்றி பேசும் பொழுது உமது கொள்கைக்கு விரோதமாக நான் ஏதாவது எடுத்துப்பேசினல், உம்மை நான் ஏதோ அலட்சியம்செய்கிறேன் அல்லது அவமானம்செய்கிறேன் என்று எண்ணலாகாது—என் மனதிலிருப்பதை நான் தாராளமாக எடுத்துப்பேச உத்தரவு கொடுக்கவேண்டும்.

ரா. சீதாராமா, அப்படியேசெய். நீ பெரியவனானபிறகு நமது தர்மசாஸ்திரப்படி நான் உன்னை என் தோழனுகவே பாவிக்கிறேன் என்பது நீ அறியாதவிஷயமல்லவே. "தோளுக்குமிஞ்சினல் தோழன்" என்னும் பழமொழியின் குணத்தை நான் என்றும் மறந்தவனல்ல. நான் உன்னுடைய சிநேகிதன் என்று நினைத்துக்கொண்டுபேசு — தாராளமாக !

சீ. [அவர் கையை எடுத்து முத்தமிட்டு] அப்பா—எந்தெந்த ஜன்மத்திலும் நீரே என் தந்தையாக வாய்க்கவேண்டும்!

ரா. ஏனடா, நியாயத்தைச்சொல் என்ருல்—இந்தவழிக்கெல்லாம் போகாதே !

சீ. இல்லை இல்லை ! முதலில் உம்மை ஒருகேள்வி கேட்கப் போகிறேன்—என்னுடைய தாயாரை நீர் கலியாணம் செய்துகொள்ளாமல், உம்முடைய சிற்றப்பா உம்மை பலவந்தித்ததாக நீர் கூறிய—அந்த அம்மாள் பெயர் என்ன ?—அம்புஜமா ?—கலியாணமான ஒரு வருஷத்திற்கெல்லாம் தன் கணவனைவிட்டு—தேசாந்திரம் போனர்களென்று சொன்னீரே, அந்த அம்மாளை—நீர் கலியாணம் செய்துகொள்ளும்படி நேரிட்டிருந்தால்—நீர் என்ன செய்திருப்பீர் ? உம்முடையகதி என்னவாயிருக்கும் ? உம்முடையவாழ்வு எத்தகையதாயிருக்கும் ?

ரா. ஏனடா ! இதையெல்லாம் உன்னை யார் ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கச் சொன்னது ?

சீ. நீங்கள்!-நீங்கள் ஏன் இதையெல்லாம் என்னிடம் சொன்னீர்! நான் கேட்டகேள்விக்கு பதில்சொல்லும்.

ரா. நீ என்ன அடிமடியில் கையைப்போட ஆரம்பித்துவிட்டாய்!—இப்பொழுது நாம் பேச ஆரம்பித்தது என்னுடைய கலியாணத்தைப்பற்றியா? உன்னுடைய கலியாணத்தைப்பற்றியா? உன்னுடைய விவாகத்தைப்பற்றி ஏதாவதுபேசு.

சீ. இந்தக் கதையெல்லாம் எனக்கு நன்ருய்த தெரியும்! கோர்ட்டில் உமது எதிரிகளை, அவர்கள் ஆட்சேபனைகளை மறக்கச்செய்து, வேறுவழிகளில் திருப்புகிறீர்களே அம்மாதிரி என்னிடம் சாயாது! கேட்டகேள்விக்கு பதில்சொல்லும்—பிறகு என்நியாயத்தை எடுத்துக் கூறுகிறேன்.

ரா. உம்—மிகவும் வருத்தப்பட்டிருப்பேன்.

சீ. அதெல்லாம் உதவாது—வாஸ்தவத்தைச் சொல்லும்? ஒன்றும் என்னிடம் ஒளியாதீர்.

ரா. [பெருமூச்செறிந்து] ஆம்!—என்உயிரை மாய்த்துக்கொண்டிருப்பேன்.

சீ. [எழுந்து அவரது இருகரங்களையும் பற்றி] அப்பா! அவ்வளவு காதல்கொண்டிருந்தீர் என் அன்னையின்மீது! அன்றுமுதல் இன்றளவும்—ஷஷ்டி பூர்த்தியாகியும்—அக்காதல் ஒரு அணுவளவும் குறையவில்லை என்பதை நான் அறிந்துள்ளேன்! பகீரதப்பிரயத்னம் செய்து உமது காதலியையே மனைவியாகப்பெற்ற நீர்—அக்காதலின் பயனுகஉதித்த உமது குமாரனுக்கு—எனக்கு—நீர் பெற்றசுகத்தை மறுக்கலாமா? உம்முடைய ஏக புத்திரன் நான்—உம்முடையகுணம் என்னிடமும் இருக்கின்றதென நம்பும்! என்காதலின் திறத்தை என் கடித மூலமாக அறிந்துள்ளீர்! என் காதலியை என் மனைவியாகப் பெறுவிட்டால் நான்மாத்திரம் உயிரோடிருப்பேன் என்று எண்ணுகிறீரா? அப்பா! உம்முடைய

பந்துக்களெல்லாம் ஒன்றாய்சேர்ந்து ஒன்றுமில்லா ஏழையாகிய என் அன்னையை நீர் மணக்கலாகாது என்று மறுத்தபோது, உம்முடைய மன நிலைமை எவ்வாறிருந்ததென, இப்பொழுது ஒருக்ஷணம் யோசித்துப்பாரும். உம்முடைய மனம் அப்பொழுது எவ்வாறு தத்தளித்தது என்று நினைத்து, என்மீது சற்று தயைகூரும். நீர் அடைந்த பேரின்பத்தை நான் அடையக்கூடாதா? அதை யடையாவண்ணம் என் அருமைத்தந்தையாகிய நீரே தடுக்கலாமா? நான் அதிகமாகக் கேட்கவில்லை—நீர் உமது காதலியை மணந்தபோது அடைந்த சந்தோஷத்தைநானும் கொஞ்சம் அடையட்டும்! கொஞ்சம் மனமிரங்கும்—அப்பா—கொஞ்சம்—

ரா. [எழுந்து உலாவி—கண்களைத் துடைத்துக்கொண்டு] கண்ணே! சீதாராமா? உன்னுடைய சுகத்திற்குக் குறுக்காக நான் வருபவனோ? ஆயினும் இந்த முக்கியமான வித்யாசத்தை யோசித்துப்பார். உன்னுடைய தாயார் எவ்வளவுதான் ஏழையா யிருந்தபோதிலும் பிராம்மண குலத்துதித்த பெண்ணாயிருந்தாள்—கண்ணே, நான் சொல்வதைக்கேள்! நம்முடைய ஜாதியிலுதித்த மிகுந்த அழகுவாய்ந்தவளும், நன்றாய்ப் படித்தவளும், நற்குணமுடையவளுமான பெண்ணைப்பார்த்துச் சொல், அவளை எந்தக் கஷ்டப்பட்டாவது உனக்கு கலியாணம் செய்துவைக்கிறேன்.

சீ. அப்பா, என் தாயாரைப்போல் நம்முடைய ஜாதியில் அத்தனை அழகியை நீர் எப்பொழுதும் பார்த்ததில்லை என்று என்னிடம் எத்தனை முறை கூறியிருக்கிறீர்!

ரா. ஆம், அதற்குச் சந்தேகமில்லை.

சீ. நானும் என்னுடைய தாயாரைப்போல் அவ்வளவு அழகுள்ளபெண்ணை யடைந்தால் தான் நான் கலியாணம் செய்துகொள்ளப்போகிறேன் என்று உம்மிடம் எத்தனை முறை வேடிக்கையாகச் சொல்லியிருக்கிறேன்?—

ரா. ஆமாம்— இச் சூத்திரப்பெண் அவ்வளவு அழகாயிருக்கிறாள் என்று சொல்லுகிறாயோ—

சீ. அப்படிச்சொல்லவில்லை—நான் சொல்வதற்காக என்னை மன்னிக்கவேண்டும்—என் தாயாரை நான் தெய்வமாகக் கொண்டு பூசித்து வருகிறேன் என்பது உமக்குத் தெரியும்—ஆகவே அவர்கள் மீது குறை கூறுவதாக எண்ண வேண்டாம்—கற்பகம் என் தாயாரைவிட அழகி—அவர்களைப்போலவே அருங்குணமுடையவள்— அவர்களை விட—

ரா. கொஞ்சம் பொறுடா! எனக்குக் கோபம் வரும்படிச் செய்யாதே! இந்த முதலிப்பெண் உன் தாயாரை விட அழகென்ரு சொல்கிருய்? வேறு எதையாவது சொல், அவளை விடப் படித்தவள், பணக்காரி, ஏதாவது சொல்—நம்புகிறேன், அவளை விட அழகி என்று மாத்திரம் என்னெதிரிற் கூருதே! அதை மும்மூர்த்திகள் வந்து கூறின போதிலும் நம்பமாட்டேன்.

சீ. என் தாயார் மீது இன்னும் நீர் அத்தனை காதல் கொண்டிருப்பது எனக்கு மிகவும் சந்தோஷம் தான். அதிருக்கட்டும்—தர்மலிங்க முதலியார் பெண்—கற்பகத்தை நீர் பார்த்திருக்கிறீரா?

ரா. நான் பார்த்ததில்லை; நான் பார்க்கவும் வேண்டியதில்லை, நீ கூறுவது தவறு என்று நான் சொல்வதற்கு—காதல் கொண்டால் கண் மழுங்கிப்போம் என்கிருர்களே அம்மாதிரி உன் கண்கள் மழுங்கிப் போயிருக்கின்றன போலும். ஏதோ குரூபியான சூத்திரப்பெண்ணின் மீது மோகங்கொண்டு இவ்வாறு கூறுகிருயா!

சீ. அப்பா! நியாயம் பேசும் பொழுது வைய ஆரம்பிக்காதீர்; இது ஒழுங்கல்ல, இந்தப் படத்தை நன்ருய்ப்பார்த்துவிட்டு பிறகு எவ்வளவுவேண்டுமென்ருலும் வையும்!

[தனது வலது ஜேபியிலிருந்து ஒரு படத்தை எடுத்து அவர் கையில் கொடுக்கிருன்.]

ரா. [அதை சற்று நேரம் உற்றுப்பார்த்துநகைத்து] என்னடா! சீதாராமா! உனக்கென்ன கண் கிண் பொட்டையாய்

விட்டதா என்ன? இந்தப் பெண்ணையா—உன் தாயாரை விட அழகி என்று வாய் கூசாது என் முன்னிலையிற் கூறுகிறாய்? இந்தக் கண்ணும், மூக்கும், முகவாய்க் கட்டையும்!—சத்யநாராயண ஐயர் கூறியது வாஸ்தவம் தான்!

சீ. என்ன கூறினார் அவர்?

ரா. நீ ஏதோ இப் பெண் படித்து பி. ஏ. பரிட்சையில் தேறியிருக்கிறாளென்று மயங்கிப் போயிருக்கிறாயென்று.

சீ. அவருக்கு அவர் பெண்தான் உலகத்திலெல்லாம் அழகு!—குரங்கு தன் குட்டியைப் புகழ்வது போல்!

ரா. சீதாராமா! நீ அவர் பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொள்ளாமற் போனாற் போகிறது. அநியாயமாய் வையாதே!—நீ அவர் மகளைப் பார்த்திருக்கிறாயோ?

சீ. நன்றாய்ப் பார்த்திருக்கிறேன்—முகம் குரங்கைப்போல் தானிருக்கிறது. நீர் பார்த்திருக்கின்றீரா அப்பெண்ணை?

ரா. நான் சின்ன குழந்தையாயிருந்த பொழுது பார்த்தது. அவர் சொல்லுகிறபடி அவ்வளவு அதிக அழகாயில்லாவிட்டாலும், குருடன் கூடச் சொல்லிவிடுவான் அவள் உன்னுடைய—காதலியாகிய இந்த முதலியார் பெண்ணைவிட—பதின் மடங்கு அழகாயிருக்கிறாளென—

சீ. அப்பா! நீர் என்ன, நான் சூத்திரப் பெண்ணை விவாகஞ் செய்து கொள்ளலாகாது என்பதற்காக அவள் படத்தை இழித்துப்பேசி, இந்த சத்யநாராயண ஐயர் பெண்ணை உயர்த்திப் பேசுகிறீரா? இதோ உம்முடைய பிராம்மணப் பெண்ணின் அழகைப்பாரும்! முகத்தில் கொஞ்சமாவது பிராம்மண தேஜஸ் இருக்கிறதா பாரும்! [தனது இடது ஜேபியிலிருந்து ஒரு படத்தை அவர் எதிரில் எறிகிறான்.]

ரா. [அதைச் சற்று உற்றுப்பார்த்து] சீதாராமா! இது யாருடைய படமென்றாய்?

சீ. அசத்தியமே எப்பொழுதும் பேசிக்கொண்டுதிரியும்—உமது சத்திய நாராயண ஐயர் மகளின் படம்!

ரா. [அப்படத்தை நன்றாய்ப் பார்த்து] சீதாராமா, எனது மனதில் இருப்பதை ஒளியாது கூறுவதானால்-அசத்தியவான் என்கிற பெயரை உனக்குத்தான் வைப்பேன்! அந்த சூத்திரப் பெண்ணை எப்படியாவது மணக்கவேண்டுமென்று உனக்கு விருப்பமிருந்தால்—உன் கண் மழுங்கிப் போய்—அவளைப்பற்றி எவ்வளவாவது புகழ்ந்து பேசு கேட்கிறேன்! அதற்காக லட்சுமியைப்போல் விளங்கும் இந்தப் பிராம்மணப் பெண்ணைப்பற்றி அபத்தம் பேசாதே என் முன்னிலையில்! நான் சிறு வயதிற் பார்த்தபொழுது கொஞ்சம் ஒரு வாராகத்தானிருந்தாள்; அவள் பருவகாலத்தில் இவ்வளவு அழகியாய் வளருவாள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை—உன் தாயாரை நான் கலியாணம் செய்து கொண்ட பொழுது இவ்வளவு அழகியாகத்தான் இருந்தாள்—இவளை ஒப்பிடுவதைவிட்டு, போயும போயும் அந்த சூத்திரப் பெண் உன் தாயாரை விட அழகாயிருக்கிறாள் என்று புகழ்ந்தனையே! உனக்கென்ன கண் குருடாய் விட்டதா என்ன? இந்த முதலியார் பெண், இருக்கின்ற நகைகளையெல்லாம் மாட்டிக்கொண்டு படம் பிடித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, நானும் உன்னைப்போல் ஏமாந்து போவேன் என்று எண்ணி அவள் படத்தை எனக்குக் காட்டினயா? அல்லது—

சீ. அப்பா! கொஞ்சம் பொறுங்கள்—அந்தப்படத்தைக் காட்டுங்கள் [முதல் படத்தைப் பார்த்து] ஓ! இந்தப்படத்தையும் காட்டுங்கள்! [இரண்டாவது படத்தையும் பார்த்து] உம்! [திகைத்து நிற்கிறான்.]

ரா. சீதாராமா, நீ பேச ஆரம்பித்தது முதல் இதுவரையில் என்னிடம் விளையாட்டிற்கும் பொய் பேசியதில்லை. அந்த சூத்திரப்பெண்ணை என்னகாரணத்தினலோ நீ விவாகஞ் செய்து கொள்ள விரும்புவது ஒரு புறமிருக்கட்டும்—இந்த இரண்டு படங்களில் எது மிகுந்த அழகியது என்று என் முன்னிலையில் ஆராய்ந்து பார்த்துச்

சொல்—சந்திரபிம்பம்போன்ற இந்த முகத்தில் என்ன லட்சுமீகரம் விளங்குகிறது! இந்தக் கண்கள் ஒன்று போதுமேடா இவ்வுலகித்தினை யெல்லாம் விலைக்கு வாங்க! இதைவிட்டு, குருகிய கண்களும், சப்பை மூக்கு முடைய இந்த சூத்திரப் பெண் அழகாயிருக்கிறாள் என்கிறாயா?

சீ. அப்பா—நீங்கள் சொல்வது தெரிகிறது—

ரா. அதெல்லாம் உதவாது, என் ஆணை! சத்தியமாய்ச் சொல், இந்தப் பெண்ணின் காலில் கட்டியடிக்கவும், இந்தப் பெண்ணிடம் அழகிருக்கிறதா?

சீ. இல்லை.

ரா. அப்படியிருக்க இந்தப் பெண்ணைப்போன்ற அழகி இவ் வுலகத்திலேயே யில்லை, இவள்மீது நான் காதல்கொண் டிருக்கிறேன், இவளை நான் கலியாணம் செய்துக் கொள்ள அனுமதி கொடுங்கள், என்று எந்த முகத்து டன் என்னைக் கேட்கிறாய்? சீதாராமா! உனக்கென்ன பயித்தியம் பிடித்திருக்கிறதா?

சீ. அப்பா, நான்—இன்னது—சொல்லுவது—என்று— எனக்குத் தோற்றவில்லை—

ரா. சீதாராமா, இன்னும் நான் சொல்வதைக் கேள். நான் சாமுத்திரிகா சாஸ்திரம் நன்றாய்ப் படித்திருக்கிறேன் என்பதை அறிவாயல்லவா? இந்தப் படத்தைப்பார்க்கும் பொழுதே இப்பெண் மிகுந்த உத்தமகுண முடையவளா யிருப்பாளென்றும், இவளை மணப்பவனுக்கு மிகுந்த சந்தோஷத்தையும், சுகத்தையும், கீர்த்தியையும் கொடுப் பாள் என்றும் தோற்றுகிறது—இந்தப் பெண்ணைக் கலி யாணம் செய்து கொண்டாயோ, நம்முடைய குலம் அழிவதுமன்றி, எல்லோரும் நகைக்க ஆளாகி, அம் புஜத்தின் கணவன் கதி உனக்கு வாய்க்கினும் வாய்க்கும்! இதை ஏதோ உன் மனதைக் கலைப்பதற்குச் சொல்கி றேன் என்று எண்ணவேண்டாம். வாஸ்தவமாய் என்

மனதில் தோன்றியதை உனக்குச் சொன்னேன்—பிறகு உன்பாடு!

சீ. அப்பா! நீங்கள் இந்த இரண்டு படங்களையும் பற்றி கூறிய வார்த்தைகளை நான் உறுதியாய்—நம்புகிறேன்—என்னை—இப்பொழுது—என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்?

ரா. கண்ணே! சீதாராமா! [அவன் தோள்மேல் கையைவைத்து] உன் தாயார் மிகவும் காயலாயிருக்கிறாள் என்பது நீ அறிந்த விஷயமே, அவள் உயிருடன் இருக்கும் பொழுதே உனக்குச் சீக்கிரத்தில்—இந்தமாதத்திற்குள் கலியாணம் செய்து பார்க்க வேண்டுமென்பது என் கோரிக்கை. ஆகவே இந்தப் பெண் [கற்பகத்தின் படத்தைக்காட்டி] உனக்கு சம்மதியானால் உடனே அவள் தகப்பனுருக்குத் தெரிவித்து நாள் குறித்து விடுகிறேன். என்ன சொல்லுகிறாய்?

சீ. உமதிஷ்டப்படியே ஆகட்டும்.

ரா. அப்பா! என் வயிற்றில் பாலைவார்த்தாய்! நான் உடனே உன் தாயாரிடம் போய் இந்த சந்தோஷ சமாசாரத்தை சொல்லிவிட்டு வருகிறேன். [புறப்படுகிறார்.]

சீ. அப்பா! கொஞ்சம் பொறும்! [அவரைத் தடுத்து] என்னவென்று சொல்லப் போகிறீர்கள்?

ரா. சீதாராமன் விவாகத்திற்கு நாள் குறிக்கப்போகிறேன்—அவன் சம்மதித்து விட்டான்—சத்தியநாராயண ஐயர் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள—என்று கூறுகிறேன்.

சீ. அப்பா! என்னை மன்னிக்கவேண்டும்—தர்மலிங்க முதலியார் பெண்ணை—என்று கூறும்.

ரா. [திடுக்கிட்டு] என்னடா இது சீதாராமா!

சீ. உமது கையிலிருக்கும் படத்தைத் திருப்பிப்பாரும்—அது யாருடையதென்று!

ரா. [படத்தின் பின்புறத்தைத் திருப்பிப்பார்த்து] "மிஸ். கற்பகம் ஆஸ் (as) பங்கஜவல்லி!" சீதாராமா! இப்படி—நீ—என்னை மோசம் செய்யலாமா?

சீ. அப்பா! என்மீது கோபியாதீர்—நடந்ததைச் சொல்கிறேன்—பிறகு நான் உம்மை வேண்டுமென்று மோசம் செய்தேனோ இல்லையோ என்பதை நீரே தீர்மானியும்.

ரா. [தன் நாற்காலிக்குப் போய் உட்கார்ந்து] என்ன அது?

சீ. இந்த இரண்டு படங்களையும் எனது இரண்டு ஜேபிகளில் வைத்திருந்தேன். முதல் படத்தை எடுத்து உம்மிடம் கொடுத்தபொழுது அதுதான் கற்பகத்தின் படமென்றெண்ணி அதைப் பாராது உம்மிடம் சத்திய நாராயண ஐயரின் பெண்ணின் படத்தை அகஸ்மாத்தாய்க் கொடுத்தேன். பிறகு நீர் அதைப்பற்றி விரோதமாகக் கூறியபொழுது ஆச்சரியப்பட்டேன். அப்பொழுதும் அதைப் பார்த்தவனன்று பிறகு இரண்டாம் படத்தைக் கொடுக்க நேர்ந்தபொழுது, அதை நீர் புகழவே எனக்கு சந்தேகமுண்டாச்சுது. நீர் முதற்படத்திலிருக்கும் பெண் இருக்கிற நகைகளையெல்லாம் போட்டுக் கொண்டு படம் பிடித்திருக்கிறாள் என்று குறிப்பிட்டபோது, நான் படங்களை மாறுகக் கொடுத்திருக்கவேண்டுமென்று அறிந்தவனாய், அவைகளை வாங்கிப் பார்த்தபொழுதுதான், இம்மாதிரி தவறு நேரிட்டு விட்டது என்று உண்மையை யறிந்தேன்—அப்பா! நான் என்னை அறிந்த நாள் முதல் உம்மிடம் ஒரு பொய்யும் உரைத்தவனன்று என்பதை நீரே அறிவித்தீர்; ஆகவே இதுதான் சத்தியம் என்று நம்பும்படி உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். ஆயினும் என்மீது என்ன குற்றம் என்பதையும் சொல்லிவிடுகிறேன். பிறகு நீர் கற்பகத்தின் படத்தைக்காட்டி அவளை மணக்கவேண்டுமென்று என்னைக் கேட்டபோது, ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டேன்,

நான் படங்கள் மாறுபட்டதைக் கண்டறிந்தவுடன் உம்மிடம் அதைச் சொல்லாதது என்மீது தவறுதான்.

ரா. [கற்பகத்தின் படத்தை மறுபடியும் சற்று நேரம் உற்றுப்பார்த்து] சீதாராமா! உன் வார்த்தையை நம்புகிறேன்—ஆயினும் இப்பொழுது என்ன செய்யப் போகிறாய்?

சீ. உங்கள் அனுமதியைக் கேட்கிறேன் இவளை மணக்க—அப்பா—நீராக இப்பெண்ணை மணக்கும்படி உமது வாயாற் கேட்டது தெய்வாதீனமென எண்ணுகிறேன்—அவளது அழகையும் குணத்தையும் நீரே புகழ்ந்து கூறினீர்—அப்பா! உம்மை ஒரு கேள்வி கேட்கிறேன் அதற்கு வாஸ்தவமான பதில் தாம் உரைக்கவேண்டும்—இப்படி நான் சொல்வதும் தவறு—நீர் ஒருகாலும் உமது உள்ளத்திலில்லாததைக் கூறமாட்டீர் என்று எனக்குத் தெரியும். ஆயினும் எனது மனநிலைமை அப்படிச் சொல்லும்படி உந்துகிறது—கற்பகம் பிராம்மணகுலத் துதித்த பெண்ணாயிருந்தால் எனக்கு அவளை மணக்க உத்திரவு கொடுத்திருப்பீரா மாட்டீரா?—

ரா. ஈசனே! ஈசனே! [பெருமூச்செறிந்து] இவள் பிராம்மண குலத்திற் பிறந்திருந்தால் நீ வேண்டாமென்று வெறுத்தாலும், பலாத்காரம் செய்திருப்பேனே!

சீ. அப்பா! அவ்வளவு சொன்னது போதும்! அப்பா, அவள் பிராம்மண குலத்தில் உதிக்காதது அவள் தவறா? அது அவளைப் படைத்த ஈசன் தவறாகும்! அப்படியிருக்க அதற்காக அவளையும்—என்னையும்—தாம் தண்டிப்பது நியாயமா?

ரா. பரமேஸ்வரா! பரமேஸ்வரா!—கண்ணே சீதாராமா, இது நம்முடைய சநாதன தர்மத்திற்கு விரோதமாகுமே?

சீ. என்ன சநாதன தர்மம்? அதைப்பற்றி உம்மிடம் பேச வேண்டுமென்றே காத்திருந்தேன்—[அவர் எதிரில் உட்கார்ந்து] உம்முடைய சநாதனதர்மம் என்பது என்ன? சொல்லும் இப்பொழுது.

ரா. வேதத்திலும், ஸ்மிருதிகளிலும், தர்ம சாஸ்திரங்களிலும், இந்துக்கள் இன்னின்னபடி நடந்து கொள்ள வேண்டு மென்று ஏற்படுத்தி யிருக்கும் நியமங்கள்.

சீ. உம்முடைய வேதத்தை முதலில் எடுத்துக் கொள்வோம்; யஜுர்வேத சம்ஹிதையிலும் பிராம்மணங்களிலும் சொல் லியிருக்கிறபடி இப்பொழுதும் நடக்க வேண்டுமென்கிறீர் களா? " மஹிஷி அவயமேவ " என்னும் சூத்திரத்தின்படி நடக்க வேண்டு மென்கிறீர்களா? அல்லது பௌண்டரீக யாகத்திற்காகக்கூறப்பட்டிருக்கும் விவரப்படி நடக்க வேண்டுமென்கிறீர்களா?

ரா. இதையெல்லாம் உன்னை யாரடா படிக்கச் சொன்னது?

சீ. படிப்பது தவறாயின், அந்தப்படி நடப்பது எவ்வளவு தவ றாகும்?

ரா. விவாகத்தைப்பற்றிய விவாதத்தில் யாகத்தைப்பற்றிய விஷயங்களை ஏன் இழுக்கிறாய்?

சீ. சரி, அப்படியே விவாகத்தைப்பற்றியே பேசுவோம். வேதத்தில் எங்காவது பிராம்மணன் சூத்திர ஸ்திரீயைக் கலியாணம் செய்து கொள்ளலாகாது என்றிருக்கிறதா? உம்முடைய வேதங்களை யெல்லாம் வகுத்த வேத வியாசர் என்னும் மஹரிஷி, பிராம்மணருக்கும் செம்படவத்திக் கும் பிறந்தவரல்லவா?

ரா. அதெல்லாம் ரிஷிகளைப்பற்றிய சமாசாரம்; ரிஷி மூலம் நதி மூலம் ஆராயலாகாது என்று சொல்லுகிறார்களே?

சீ. ஆம்—இப்படிப்பட்ட கேள்விகளுக்கு தக்கபதில் உரைக்க வகையின்றி! நம்முடைய மனுதர்ம சாஸ்திரத்தில், பிராம் மணன், மற்ற ஜாதிப் பெண்களை விவாகம் புரியலாம் என்று சொல்லியிருக்கிறதா இல்லையா?

ரா. இருக்கிறது வாஸ்தவம் தான்! ஆயினும் அவ்வழக்கம் ஆயிரம் வருடங்களாக அனுஷ்டானத்திலில்லாமற் போச்சுதல்லவா? அது நசித்து விட்டதென்று நீ ஒப்புக் கொள்ளவேண்டு மல்லவா?

சீ. அது வழக்கமில்லாமல் நசித்துவிட்டதென்றால்— பிராம்மணன் என்பதே வழக்கத்திலில்லாமல் தற்காலம் நசித்து போய்விட்டதென்று நான் ரூபிக்கிறேன் —

ரா. என்னடா அது சீதாராமா? இப்பொழுது பிராம்மணர்களே இல்லையென்று ரூபிக்கப்போகிறாய்?

சீ. ஆம், வாஸ்தவமாய் பிராம்மணர்கள் ஆயிரத்தி லொருவர் கூட இல்லையென்றே நான் உறுதியாய் நம்புகிறேன்.

ரா. ஏன் அப்படி? நாம் எல்லோரும் பிராம்மணர்கள் அல்லவென்கிறாயா?

சீ. முதலில், பிராம்மணன் என்கிற பதத்திற்கு அர்த்தம் சொல்லும்.

ரா. நீதான் உன் அர்த்தத்தைச் சொல்லேன்.

சீ. சரி—என்னைக்கேட்டால், பிராம்மணன் என்பவன் பிரம்மக்ஞானமுடையவன்தான் என்பேன். அப்பா, உண்மையான பிரம்மக்ஞானமுடையவர்கள் எத்தனை பெயர்கள் இருக்கின்றனர் நமது தேசத்தில்?

ரா. அப்படிப் பார்த்தால் ஆயிரத்தில்—அல்ல பதினாயிரத்தில் கூட—ஒருவன் தேறமாட்டான். ஆகவே பிராம்மணர்களே இல்லையென்று சொல்லிவிடு, உன் அபிப்பிராயப்படி.

சீ. அப்படி நான் சொல்லமாட்டேன், யாராவது இராமற் போகமாட்டார்கள்—அது போகட்டும்—பிராம்மணன் என்பதற்கு உம்முடைய டெபனிஷன் (definition) என்ன சொல்லும். வாஸ்தவமாக யாரை, நீங்கள் பிராம்மணர் என்று ஒப்புக்கொள்வீர்கள்? நீர்தான் சநாதன சபைக்கு பிரசிடெண்டாச்சுதே—சொல்லுங்கள்.

ரா. பிராம்மண குலத்துதித்து, உபநயனம் முதலிய சம்ஸ்காரங்களைப்பெற்று, துவிஜனாகி, வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் நம்முடைய தர்மசாஸ்திரங்களிலும் பிராம்மணன் செய்யவேண்டியது இன்னது என்று சொல்லப்

பட்ட கர்மாக்களை சரியாக அநுஷ்டிப்பவன்—பிராம்மணன்.

சீ. அன்றியும் பிராம்மணனானவன் இன்னது இன்னது செய்யக்கூடாது என்று விலக்கியவற்றைச் செய்யாதிருப்பவன்தான் பிராம்மணன் அல்லவா?

ரா. ஆம்.

சீ. நீர் கூறியபடி முதலில் பிராம்மண குலத்துதிக்க வேண்டும் என்பது ஒரு புற மிருக்கட்டும்—மற்றவைகளைப்பற்றி ஆராய்ந்துப் பார்ப்போம்—

ரா. ஏன்? முதலில் அதற்கு பதில் சொல்லேன்.

சீ. ஓகோ! நீங்கள் பெரிய வக்கீல் என்பதை மறந்தேன்! அப்படியே ஆகட்டும். இதற்கு பதில் கூறமுடியாது என்று நினைத்துக்கொண்டிருக்கிறாற் போலிருக்கிறது. ஒரே வாக்கியத்தில் இதற்கு பதில் உரைக்கிறேன். "ஜன்மனாஜாயதேசூத்ரஹ" என்னும் வாக்கியத்தின் அர்த்தமென்ன யோசித்துப்பாரும். எதை ஹிந்துமதத்திற்கு ஒரு பெரிய ஆதாரம் என்று எல்லோரும் கொண்டாடுகிறார்களோ, அதனாலேயே, பிறப்பினால் ஒருவனும் பிராம்மணனாகவில்லை என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்த ஒரு நியாயம் போதும்—இன்னும் வேறு ஏதாவது வேண்டுமோ?

ரா. இன்னும் வேறு நியாயமென்ன இருக்கிறது?

சீ. அப்படி கேளுங்கள்! திவிஜன் என்கிற பதத்தின் அர்த்தத்தை யோசித்துப்பாரும்; உபநயனம் செய்து கொள்ளாவிட்டால் எவனாவது உண்மையில் துவிஜனாவானோ? அந்த பதத்தினாலேயே, பிறப்பினால் எல்லோரும் சமானமாகத்தான் பிறக்கிறார்கள் என்று அர்த்தமாகவில்லையா? இன்னொரு விதத்தில் கேட்கிறேன்—என்னை சீமைக்கு அனுப்பினீர்கள், அங்கே படிப்பதற்காக என்னைப் போல் வந்த பிராம்மண குலத்துதித்த ஒருபெண்ணை நான் கலியாணம் செய்துகொண்டேன் வேத விதிப்படி, எங்க

ளுக்கு ஒரு மகன் பிறந்தான் அங்கு,—என்று வைத்துக் கொள்வோம். அவன் அங்கேயே வளர்ந்து வருகிறான் அவன் ஆயுள் பரியந்தம்—உபநயனம் ஆகாது; அவனை பிராம்மணன் என்று நம்முடைய சாஸ்திரப்பிரகாரம் வாஸ்தவமாகக் கூறுவீரா?

ரா. மாட்டேன்.

சீ. ஆகவே, பிறப்பினால் பிராம்மணத்வம் கிடையாது—பிராம் மணர்களுக்குரிய கர்மாக்களை அனுஷ்டிப்பதினால்—பிராம் மணர்களாகின்றார்கள் என்றால்—மதுரையில் தற்காலம் வசிக்கும் ஆயிரக்கணக்கான சௌராஷ்டிரர்கள், அந்த கர் மாக்களை யெல்லாம் அனுஷ்டித்து வருகிறார்கள். அவர் கள் தங்களை பிராம்மணாள் என்று சொல்வது ஒரு புற மிருக்கட்டும்—நீர் அவர்களை பிராம்மணர்கள் என்று ஒப்புக் கொள்ளுவீரா? நான் ஒரு சௌராஷ்டிரப் பெண்ணை மணக்க விரும்பினால் உத்தரவு கொடுப்பீரா?— என்ன சும்மா இருக்கிறீர்கள்?

ரா. அவர்கள் பிராம்மணர்கள் என்று நான் ஒப்புக்கொள்ள முடியாது.

சீ. நீர் ஒப்புக்கொள்ளா விட்டாலும், அந்த ஜாதியார், மதுரையை யாண்ட ராணி மங்கம்மாள் காலத்தில், அந்த அரசி கூட்டிய கற்றறிந்த சாஸ்திரிகளுடைய பரிஷத்தில், அவர்கள் பிராம்மணர்கள் என்று தீர்மானித்ததாக பட்டயம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதற்கென்ன சொல்லுகிறீர்?

ரா. நான் ஒப்புக் கொண்டாலும் மற்ற பிராம்மணர்கள் இதை ஒப்பார்கள்.

சீ. வாஸ்தவம்! ஏன் பிராம்மணர்கள் ஒப்புக் கொள்ளமாட் டார்கள் என்று யோசித்துப்பாரும் சற்று. முக்கியமாக பிராம்மணர்கள் என்று தங்களுக்கிருக்கும் சுதந்தரமும் கௌரவமும் எல்லாம் குறைந்துபோகுமே யென்று!

ரா. ஆம், நீ கூறுவது ஒரு விதத்தில் நியாயம் தான். இந்த ஒரு ஜாதியாருக்கு இடங் கொடுத்தால் பிறகு எங்கு நிற்பது? பிறகு திரைவர்ணிகர்கள் என்று சொல்லப்பட்ட சாத்தாணிகளையும், பிராம்மணர்கள் என்று ஒப்புக்கொள்ள வேண்டிவரும்—இப்படி போய்க்கொண்டேயிருந்தால் பிறகு எங்கு முடிவது?

சீ. இந்த ஜாதிபேத மெல்லாம் அடியோடு நீங்கினால் தான் முடியும்! அக்காலம் வருமளவும் நமது தேசத்திற்கு விமோசனமில்லை! நமக்கு சுயராஜ்யம் வேண்டு மென்று நீர் மிகவும் கோருவது எனக்கு நன்றாய்த் தெரியும். இந்த ஜாதிபேதங்களெல்லாம் போமளவும் நமக்கு சுயராஜ்யம் கிட்டியும் என்னபலன்? இந்த ஜாதிபேத மெல்லாம் இருக்குமளவும், நமக்கு சுயராஜ்யம் ஈஸ்வரனுடைய ஆக்ஞையால் இட்சணம் கிடைத்தால், ஒருவருஷம் அந்த ராஜ்யம் நிலைத்திருக்கு மென்று நினைக்கிறீர்களா? ஹிந்து மகம்மதியர்கள் சண்டை யொருபுறமிருக்கட்டும், ஹிந்துக்களுக்குள்ளேயே ஐக்கிய மில்லாவிட்டால் என்ன முடியும்? மத விஷயத்தில் எப்பொழுதும் ஒன்றாய்ச் சேரும் மகம்மதியர்முன் ஹிந்துக்கள் அரை நிமிஷம் நிற்க முடியுமா? அச்சமயம் உம்முடைய சநாதனதர்ம மெல்லாம் பஞ்சாய்ப் பறந்து போகாதா? நீர் பி. எ. பரிட்சையில், சரித்திரத்தில் மெடல் வாங்கினவராயிற்றே, உம்முடைய சரித்திரம் இதற்கு என்ன பதில் சொல்லுகிறது சொல்லும்—உண்மையில் ஒன்றும் ஒளியாது.

ரா. என்னடா சீதாராமா? எப்பொழுது பார்த்தாலும் அடிமடியிலேயே கையைப் போடுகிறாய்? நீ சொல்வதெல்லாம் ஒரு விதத்தில் வாஸ்தவம் தான்—நமக்கு சுயராஜ்யம் கிடைப்பதற்கு இன்னும் வெகு நாளிருக்கிறது. நம்முடைய ஜன்மகாலத்தில் கிடைக்கு மென்று நான் நினைக்கவில்லை—அது கிடைக்கும்பொழுது பார்த்துக்கொள்வோம்—அதிருக்கட்டும்—சீதாராமா, உண்மையில் சரி

யான பிராம்மணர்கள் இல்லை யென்று ரூபிக்கின்றேன் என்று ஆரம்பித்தவன் இந்தக் கிளைக்கதைக்குப் போய் விடாதே.

சீ. இல்லை இல்லை! ஆகவே பிறப்பை ஒருபுறம் ஒதுக்கி வையும். பிராம்மணர்களுடைய கர்மானுஷ்டானங்களைப் பற்றி ஆராய்வோம்—உங்களுடைய சாஸ்திரப் பிரகாரம் பிராம்மணன் கட்டாயமாய் அனுஷ்டிக்க வேண்டிய நித்திய கர்மங்களில் முக்கியமானது சந்தியாவந்தனமல்லவா?

ரா. ஆம்.

சீ. சென்னையில் எத்தனை பிராம்மணர் அதைச்சரியாகச் செய்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள்?

ரா. நீ செய்யா விட்டால் மற்றயாவரும் செய்வதில்லை என்று தீர்மானித்து விடுகிறாயோ?

சீ. நீங்கள் சொன்னதில் இரண்டு தப்பிதங்கள் இருக்கின்றன. முதலில் என்னை உதாரணமாகக் கொண்டு மற்றவர்கள் செய்வதில்லை என்று நான் தீர்மானிக்கவில்லை. இரண்டாவது நான் இப்பொழுது சந்தியாவந்தனம் சரியாகச் செய்து வருகிறேன்.

ரா. ஆஹா! அது எத்தனை நாள் முதலாக?

சீ. நான் காயம்பட்டு உயிர் தப்பிப் பிழைத்தநாள் முதல்.

ரா. மிகவும் சந்தோஷம்—கெடுதியிலும் நன்மையிருக்கிறாற் போலிருக்கிறதே!

சீ. சந்தேகமென்ன!—அதிருக்கட்டும்—நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள். நூற்றில் ஐந்து பெயர் சரியாக விதிப்படி செய்கிறார்கள் என்று நினைக்கிறீரா?

ரா. உம்—நூற்றில் ஒன்றுதான் தேறும் என்று நினைக்கிறேன்.

சீ. ஆம், அப்படியிருக்க மற்ற தொண்ணூற்றொன்பது பெயரையும் பிராம்மணர்களாகத்தானே மதிக்கின்றீர்?

ரா. ஆனாலும்—அதற்குத்தான்—ஆவணி அவிட்டதினம் பிராயச்சித்தம் செய்கிறார்களே?

சீ. [சிரித்து] ஆம், நமது முன்னோர்கள் மிகுந்த புத்திசாலிகள் என்பதற்குத் தடையில்லை. நமக்குப்பின் வருபவர்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள்; ஆகவே இதற்கெல்லாம் பிராயச்சித்தம் ஒன்று ஏற்படுத்தவேண்டும் என்று யோசித்துச் செய்திருக்கிறார்கள்! அப்பா, உண்மையாய்ச் சொல்லுங்கள், எத்தனை பிராம்மணர்கள் எக்ஞியம், வைஸ்வேதேவம் அக்னிசந்தானம் முதலிய கர்மாக்களைச் செய்துவருகிறார்கள்? மாதத்திற் கொருமுறை செய்ய வேண்டிய பிதுர் தர்ப்பணங்களை விதிப்படி செய்யாதவர்கள் எத்தனைபெயர் இருக்கின்றனர்? வருஷத்திற்கொரு முறை செய்யவேண்டிய சிராத்தத்தை நியமப்படி செய்யாதவர்கள் எத்தனைபெயர் இருக்கின்றனர்? இதெல்லாமிருக்கட்டும்—வேதாத்யயனம் செய்யாதவனை பிராம்மணன் என்று ஒப்புக்கொள்ளும்படி எந்தசாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது? தற்காலம் ஆயிரம் பிராம்மணர்களை எடுத்துக்கொண்டால் எத்தனைபெயர் வேதாத்யயனம் செய்தவர்கள் இருப்பார்கள் அவர்களுள்? அப்படி அத்யயனம் செய்தவர்களுக்குள்ளும் அதன் அர்த்தம் அறிந்தவர்கள் எத்தனைபெயர் இருக்கிறார்கள்? சம்ஸ்கிருத எழுத்தே தெரியாத எத்தனை பிராம்மணர்கள் இருக்கின்றனர்?

ரா. ஆகவே நமது வேதம் முதலியவற்றை யெல்லாம் விட்டுவிடவேண்டுமென்று சொல்லுகிறாயா?

சீ. அப்படிக்குச் சொல்லவில்லை நான். நான் சொல்லவந்தது என்னவென்றால், அப்படிப்பட்டவர்களை யெல்லாம் பிராம்மணர்கள் என்று அழைப்பது தவறுஎன்று சொல்லுகிறேன்.

ரா. ஆமாம் சீதாராமா, பரமேஸ்வரன் நம்மில் சிலரை பிராம்மணர்களாகவும், சிலரை சூத்திரர்களாகவும், மற்றஜாதியார்களாகவும் பிறப்பித்திருக்கின்றாரே—ஓகோ! நீ பரமேஸ்வரன் ஒருவன் இருப்பதாக என்மனதில் ரூபிக்கப்

படுமளவும் நான் நம்பமாட்டேன் என்று நினைப்பவன் என்பதை மறந்தேன்.

சீ. பரமேஸ்வரன் இருப்பதாக எனக்கு அவர் ரூபித்து விட்டார்.

ரா. ஓ! அக்காயத்தினின்றும் உயிர்தப்பியது முதலோ?

சீ. ஆம்.

ரா. அவ்வளவாவது அவர்கருணை இருந்ததே!—சீதாராமா, நீ சொன்னதெல்லாம் பெரும்பாலும் வாஸ்வதம் என்று ஒப்புக்கொள்ளுகிறேன். ஆயினும் பிராம்மணர்களாய்ப் பிறந்தவர்கள் வேதவிதிப்படி அவர்கள் செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்யாவிட்டாலும் அவர்கள் பிராம்மணத்வம் எங்கே போகும்?

சீ. அதையும் கொஞ்சம் ஆராய்வோம்-கலியுகத்திற்கென்று ஏற்பட்ட ஸ்மிருதி என்று நீங்கள் ஒப்புக்கொள்ளுகிற பராசரஸ்மிருதியின்படி, பிராம்மணனாகப் பிறந்தவன், நித்ய கர்மானுஷ்டானங்கள் செய்யாவிட்டாலும், மற்ற ஜாதியாருடன் கூடிப் புசித்தாலும், மாம்ச போஜனம் செய்தாலும், மதுபானம் செய்தாலும், சமுத்திரத்தின் மீது யாத்திரை பண்ணினாலும், எண்ணெய் முதலியவைகளை விற்பன செய்தாலும், பதிதன் ஆகிறான் என்று சொல்லியிருக்கிறதல்லவா? சில பாபகர்மாக்களைச் செய்தால் சண்டாளனாகிறான் என்றும் சொல்லியிருக்கிறதல்லவா? அந்த ஸ்மிருதியில் விலக்கப்பட்ட காரியங்களைச் செய்பவர்களைக் கணக்கிட்டால் எத்தனை ஆயிரம் பிராம்மணர்கள், பதிதர்களாக எண்ணப்படவேண்டும்? அவர்களையெல்லாம் பிராம்மணர்களாகத்தானே எண்ணுகிறீர் நீர்? அவர்களுடன் நீர் பந்தி போஜனம் செய்வதில்லையா? அவர்களைத் தீண்டுகிறதில்லையா? அவர்கள் பெயரை ஒவ்வொன்றாகச் சொல்லிக்கொண்டு வரவா?

ரா. வேண்டாம்—

சீ. ஒரு உதாரணம் மாத்திரம் கொடுக்கிறேன். நேற்றைத் தினம் இரவு ஒரு—சாஸ்திரியாருடன் உட்கார்ந்து போஜனம் செய்தீரே! அவர் எப்படிப்பட்டவர் தெரியுமோ?

ரா. என்னடா அவருக்குக் குற்றம்?

சீ. அதை என் வாயினாற்கூறவும் எனக்கிஷ்டமில்லை. அவர் செய்த பாபத்தை காகிதத்தில் எழுதிக் காட்டுகிறேன்.

[மேஜையின் மீதிருக்கும் ஒரு கடிதத்தில் ஏதோ எழுதி அவருக்குக் காட்டுகிறான்]

ரா. அடே! உனக்கெப்படி தெரிந்தது இந்த ரகசியம்?

சீ. நீர் நினைத்துக்கொண் டிருப்பதுதான்—உமக்குத்தான் இந்த இரகசியம் தெரியுமென்று! அநேகம் பெயருக்குத் தெரியும். ஆயினும் அவர் உயர்பதவியி லிருக்கிறாரே என்று அதைச் சொல்லுவதில்லை—இந்த காகிதமும் இப்பாபத்தைத் தன்மீது எழுதினதற்காக என்னை யையும்—இதைச் சுட்டெரிக்கின்றேன்—

[ஒரு தீக்குச்சியினால் அதைக் கொளுத்தி விடுகிறான்]

இப்பொழுது உமது தீர்மானத்தைச் சொல்லும். உம்முடைய சனாதனத் தர்மத்தின்படி நிஷ்பட்சபாதமாய்ப் பார்த்தால், எத்தனை பிராம்மணர்களை வாஸ்தவமான பிராம்மணர்கள் என்று ஒப்புக்கொள்ளுவீர்கள்?

ரா. நீ சொல்வதை நான் ஒப்புகொண்ட போதிலும், மற்றவர்கள் சாஸ்திரத்திற்கு விரோதமாக நடக்கிறார்கள், ஆகவே நாமும் அப்படி நடக்கவேண்டு மென்கிறாயா?

சீ. என்ன சாஸ்திரத்திற்கு விரோதமாக நடப்பது?

ரா. பிராம்மணன் ஒரு சூத்திர ஸ்திரீயை விவாகஞ் செய்து கொள்வது.

சீ. மனுதர்ம சாஸ்திரத்தில் பிராம்மணன் சூத்திர ஸ்திரீயை மணக்கலாம் என்று சொல்லியிருக்கிறதா இல்லையா?

ரா. ஆம், ஆயினும் அவ்வழக்கம் ஆயிரம் வருடத்திற்கு மேல் நம்மால் விடப்பட்டதென்பதை நீ அறியாயா?

சீ. ஆனால், நமது தர்மசாஸ்திரத்தில் ஏதாவது ஒன்று சொல்லியிருந்தால், அதை நமக்கு இஷ்டமிருந்தால் அனுஷ்டிக்கலாம், இஷ்டமில்லாவிட்டால் விட்டுவிடலாம் என்றாவது சொல்லும்.

ரா. நீ போகிறவழி எனக்குத்தெரியும்—என்னவென்றாலும் சீதாராமா நம்முடைய ஆசாரமும்—அவர்களுடைய ஆசாரமும் ஒத்து வருமா?

சீ. அப்படிக் கேளுங்கள்! என்ன நம்முடைய ஆசாரம் அவர்களுடையதைவிட மேம்பட்டுவிட்டது? எந்த விஷயத்தில் அவர்களுடைய ஆசாரம் நம்முடையதைவிடக் குறைந்து விட்டது?

ரா. அவர்கள் மாம்சம் புசிக்கிறார்களல்லவா? என்னுடைய மாட்டுப் பெண்—

சீ. கொஞ்சம் நிறுத்துங்கள்! நான் சொல்வதைக் கேட்டு விட்டு அப்புறம் அவர்களைத் தூஷியுங்கள். தர்மலிங்க முதலியார் வம்சத்தினர் தொன்று தொட்டு சைவம் என்பதை நீர் அறியீர்போலும். நாமாவது காரிசன் கம்பெனியில் ஆதித்திராவிடர்கள் செய்த ரொட்டிகளையும் பிஸ்கோத்துகளைச் சாப்பிடுகிறோம்; அவர்கள் அதைக் கூடத் தீண்டார்கள்.

ரா. ஆம் ஆம்—இப்பொழுது எனக்கு ஞாபகம் வருகிறது—தர்மலிங்கம் என்னுடன் பள்ளிக்கூடத்தில் வாசித்த பொழுது, அவன் கொடிய வீரசைவம் என்று எல்லோரும் ஏளனம் செய்தது, எனக்கு ஞாபகம் வருகிறது.

சீ. என்ன அப்பா! நீங்களிருவரும் பள்ளிக்கூடத்தில் ஒன்றாய்ப் படித்தவர்களா?

ரா. ஆம், நான்குவருடம் ஒன்றாய்ப் படித்தோம். பச்சையப்பன் கலாசாலையில்—நாங்களிருவரும் மிகுந்த சிநேகிதர்களாயுமிருந்தோம்—பிறகு இவன் இந்த நான்-பிரா

மின் (Non-brahmin) பார்ட்டியைச்சேர்ந்து, பிராம்மணர்களை துவேஷிக்க ஆரம்பித்த பிறகு—விரோதிகளானோம்.

சீ. அவர் குணத்திலாவது, அவரது நடவடிக்கையிலாவது—ஏதாவது குறையினை அறிவீர்களா?

ரா. சீச்சீ! நான் தவறாக ஒன்றும் கூறமாட்டேன். இந்த பயித்தியம்தவிர அவனிடம் ஒருகுற்றமுமில்லை. மிகுந்த புத்திசாலி, நிரம்ப நியாயமாய் நடப்பவன்—விளையாட்டிற்கும் பொய் பேசமாட்டான், மிகுந்த தெய்வபக்தி யுள்ளவன்—என்னமாகவோ இந்த பிராம்மணத்துவேஷம் என்கிற பயித்தியம் மாத்திரம் அவனைப் பிடித்திருக்கிறது.

சீ. அப்பா, உங்களை இந்த ஒருகேள்வி கேட்கிறேன். இந்த பிராம்மணன்—பிராம்மணன் அல்லாதான் என்கிற கட்சி ஒன்று வந்திராவிட்டால், நான் கற்பகத்தை விவாகஞ் செய்துகொள்வதற்கு உத்தரவு கொடுப்பீரா மாட்டீரா?

ரா. [சற்று யோசித்து] சீதாராமா! அவளது படத்தைப் பார்த்தபின்—அவளது குணத்தைப்பற்றி நீ கூறியதைக் கேட்டபின்—நான் அவ்வளவாக ஆட்சேபித்திருக்கமாட்டேன்—ஆயினும்—மற்றெல்லா ஆட்சேபனைகளும் ஒருபுறம் இருக்கட்டும்—சீதாராமா! அநேக ஆயிரம் வருஷங்களாக நமது வம்சத்தில் பிராம்மண ரத்தமே ஓடிக்கொண்டிருக்கிறது, இப்பொழுதுபோய் அதில் சூத்திர ரத்தம் கலக்கவிடலாமா?

சீ. அப்பா, இந்தக்கேள்வி நீங்கள் என்னைக்கேட்டது, நீர் தினம் பூஜித்துவருகிறீரே அந்தப்பரமேஸ்வரன் கருணையினால் என்று நம்புகிறேன்—நீர் கேட்ட கேள்விக்கு இரண்டுபதில் கொடுக்கிறேன்—முதல் பதில் கேவலம் சாஸ்திர சம்பந்தமானது—நீர் பி. ஏ. பரிட்சைக்குப் போனபோது, ஆந்திரோபாலஜி (Anthropology) அல்லது மானிடசாஸ்திரம் படித்தீரல்லவா?

ரா. ஆம்.

சீ. அதன்பிரகாரம் தென் இந்தியாவிலுள்ள பிராம்மணர்களில் எத்தனைபெயருடலில் திராவிட ரத்தம் கலந்திருக்கிறது என்பதை அறியீரா? உமக்கு மைத்துனர் முறையாக வேண்டிய நம்முடைய சத்யநாராயண ஐயரையே எடுத்துக்கொள்வோம், அவர்முகம், கண்கள், மூக்கு, மோவாய்க்கட்டை, முதலியவற்றை பரிசோதித்துப்பார்த்தால் கொஞ்சமாவது ஆரிய பிராம்மணர்களுடைய சின்னங்கள் ஏதாவது தென்படுமா? சரியான ஆரிய பிராம்மணனாயிருந்தால் அத்தனை கருப்பாய் இருப்பாரா? இன்னும் இவரைப்போன்றவர்கள் நம்முடைய சொந்த பந்துக்களில் எத்தனை பெயர் இருக்கின்றனர்? என்ன ஆரிய பிராம்மணர்களுடைய ரத்தமே நமது வம்சத்தில் பரவியிருப்பது?

ரா. உம்—இரண்டாவது பதில் என்ன?

சீ. இதை உமக்குத் தெரிவிப்பதற்காக என்னை மன்னிக்க வேண்டும்—இந்தக்ஷணம் என்னுடம்பில் இருக்கும் ரக்தத்தில் பெரும்பாலும்—நீர் இழிவாகக் கருதும்—சூத்திர ரக்தமே!

ரா. [திடுக்கிட்டெழுந்து] என்ன!—எப்படி?—எப்படி?

சீ. ஒன்றும் பயப்படாதீர்கள்—சற்று நிதானமாய்க் கேளுங்கள்—நான் சில தினங்களுக்குமுன் மரணகாயம்பட்டு, ரக்தம் இழந்தபொழுது, புதியரக்தம் புகுவித்தல் (Transfusion of blood) என்னும் சிகிச்சையினால்தான் உயிர்தப்பினேன் என்பது நீர் அறிந்த விஷயமே. தன் ரக்தத்தைக் கொடுத்து என்னுயிரைக் காப்பாற்றியது யார் என்று நாம் கண்டுபிடித்து அப்படிக் கொடுத்தவனுக்குப் பிரதிசெய்ய பிரயத்னப்பட்டும், அந்த ரகசியம் அறியாமற் போனோமல்லவா? நேற்றைத்தினம் தான் அம்மஹோபகாரம் செய்து என்னுயிரைக் காத்த உத்தம பிராணி யார் என்று அகஸ்மாத்தாய்க் கண்டுபிடித்தேன்.

ரா. யார் அது?

சீ. கற்பகம்.

ரா. கற்பகம்!—தர்மலிங்க முதலியார்—பெண்!

சீ. ஆம்—என்னுடைய அபாயஸ்திதியை யறிந்து க்ஷணமும் தாமதியாது, தன் உடலிலுள்ள ரக்தத்தைக் கொடுத்து, என்னுயிரைக் காப்பாற்றியிராவிட்டால், உம்முடைய ஏகபுத்திரன் பரலோகம் போய்ச் சேர்ந்திருப்பான் அன்றே.

ரா. அந்த—அவளா—இதற்குத் துணிந்தாள்?

சீ. ஆம்—அதுவும் தன் உயிரை ஹானியிற்படுத்தி!—அவ்வாறு செய்ததினால் தன் உயிருக்கு அபாயம் நேரிட்டு, ஒருவாரம் வரையில் இருப்பாளோ இறப்பாளோ என்று வயித்தியர்கள் சந்தேகிக்கும்படியான ஸ்திதியிற் கிடந்தாள்.

ரா. இதெல்லாம் உனக்கு யார் சொன்னது?

சீ. எனக்கும், அவளுக்கும், அப்பொழுது சிகிச்சைசெய்த இரட்டையரே-வெங்கடேச முதலியாரும் சாம்பமூர்த்தி ஐயருமே.

ரா. அவர்கள் பொய் உரைக்கமாட்டார்கள்.

சீ. வாஸ்தவம்—அப்பா, நான் உயிர்தப்பி, பிரக்ஞை அடைந்தபொழுது முதன் முறை என்னை நீர் பார்த்தபொழுது, உனக்கு இவ்வாறுபகாரம் செய்த உத்தமனை எப்படியாவது கண்டுபிடி, அவனுக்கு நாம் தக்க பிரதி செய்ய வேண்டுமென்று கூறினீர்களல்லவா?

ரா. ஆம்.

சீ. எனக்கு இப்பேருதவி செய்தவள்—என் காதலி—என் கற்பகம்! அவள் என்னைக் கணவனாக வரிக்கிறாள்! அவள் கோரியதைக் கொடுத்து—என்னுடைய கடனையும் உம்முடைய கடனையும் தீர்த்துக்கொள்ளும்!

ரா. அவள்—இதை என்னிடம் சொல்லச் சொன்னாளா?

சீ. இல்லை இல்லை! இதை உம்மிடம் கூறவே கூடாது என்று ஆக்ஞையிட்டாள். நான் எதற்கும் நீர் இசையாமற் போனால், கடைசி நியாயமாக இதைக்கூற, மன்றாடி உத்தரவுபெற்றேன்!—அந்த உத்தமியிடம்.

ரா. [பெருமூச் செறிந்து] ஐயோ! அவள் ஒரு பிராம்மண குலப்பெண்ணாய்ப் பிறந்திருக்கலாகாதா?

சீ. அப்படிப் பிறவாததினால் உமக்கென்ன கெட்டுப்போகிறது?

ரா. அவள் என் மாட்டுப் பெண்ணாவாளாயின்—அவள் தீண்டியதை—நான்—புசிக்கவேண்டி வருமே—

சீ. என்ன சொன்னீர்!—வா, சுப்பராமா!

சுப்பராமன் ஒரு தட்டில் பலஹாரமும் தேத்தண்ணீரும் கொண்டு வருகிறான்.

ரா. உன்னை யாரடா இப்பொழுது வரச்சொன்னது?

சு. சரியாக நாலுமணிக்கு டிபின் (tiffin) கொண்டுவரச் சொன்னேகளே—அஞ்சி நிமிஷம் லேட்டா போச்சி, சத்ய நாராயண ஐயர் ஆத்திலிருந்து பலஹாரம் அனுப்பிச்சா, அதையும் சேர்த்துகொண்டு போகும்படி அம்மா உத்தரவு பண்ணுக—இது நம்மாத்துலே பண்ணது, இது அவா ஆத்திலேயிருந்து வந்தது.

ரா. சரிதான்—வைத்துவிட்டுப்போ—[சுப்பராமன் போகிறான்] சீதாராமா, முதலில் கொஞ்சம் பலஹாரம் செய்துவிட்டு பேசுவோம்—நீயும் சாப்பிடு—

[ராமகிருஷ்ண ஐயர் அந்தப் பலஹாரத்தில் ஒன்றை எடுக்கப் போகிறார்.]

சீ. கொஞ்சம் தீண்டாதீர்கள் இதில் எதையும்! நான் சொல்வதைக் கேட்டுவிட்டு பிறகு இதைத் தீண்டுங்கள்.

ரா. என்னடா சமாசாரம்?

சீ. நம்முடைய சுப்பராமன் சமாசாரம் தெரியுமா உமக்கு? சிலமாதத்திற்கு முன்பாக ஒரு சாராயக்கடையில் சாராயம் சாப்பிட்டுவிட்டு, அங்கு மாம்சம் விற்றுக்கொண்

டிருந்த பள்ளிச்சியிடம் மாம்சம் வாங்கி சாப்பிட்டு விட்டு அவளுக்குக் காசுகொடுக்காது வெளியே போக முயல, அதன்மீது அவள் காசு கொடுத்துவிட்டு போக வேண்டுமென்று நிர்ப்பந்திக்க, இருவரும் சண்டையிட்டு, அடிதடிலாக, அதற்காக போலீஸ் கோர்ட்டில் சார்ஜ் செய்யப்பட்டு, 5 ரூபாய் அபராதம் கொடுத்திருக்கிறான்!

ரா [எடுத்ததைத் தட்டில் வைத்துவிட்டு] இதை ஏன் என்னிடம் முன்பே சொல்லவில்லை?

சீ. என் காலில் வீழ்ந்து இனி அம்மாதிரி செய்வதில்லை என்று கேட்டுக்கொண்டான், அதற்காக மனமிரங்கி உம்மிடம் இதுவரையிற் கூறாது விட்டேன்

ரா. அந்தக் கழுதையை உடனே வேலையிலிருந்து நீக்கிவிடு கிறேன்!—இந்த க்ஷணமே!—இதைத் தீண்டாதே—சத்ய நாராயண ஐயர் வீட்டிலிருந்து ஏதோ அனுப்பியிருக் கிறார்களாம் அதைச் சாப்பிடுவோம்—

[அதை எடுக்கப் போகிறார்.]

சீ. அதையும் தீண்டாதீர்!

ரா. இதற்கென்ன ஆட்சேபனை?

சீ. இந்த சத்யநாராயண ஐயர் இரகசியமாக மாம்சம் சாப் பிடுகிறார் என்று உமக்குத் தெரியாதா? நான் என் கண் ணாரக்கண்டேன் தஞ்சாவூர் ரெயில் ஸ்டேஷன் ரிப்ரெஷ் மெண்ட் ரூமில் (Refreshment Room) இவரும் ராஜ கோபாலாச்சாரியுமாக ஆதிதிராவிடன் சமைத்த மாமி சத்தைப் புசித்ததை—அகஸ்மாத்தாய் நான் இதைக் கண்டுபிடித்து என்ன சாப்பிட்டீர் என்று கேட்க, "வேறொன்றுமில்லை, மச்சாவதாரம், கூர்மாவதாரம், வரா ஹாவதாரம் நான் சாப்பிட்டேன், இதில் என்ன தவறு நமது முன்னோர்களெல்லாம் கோமாம்சமே சாப்பிட வில்லையா?" என்றார்.

ரா. யாகத்தில் ஏதோ அவர்கள் சாட்பிட்டால்—இவரை—

சீ. கொஞ்சம் பொறுங்கள், அதையும் நான் கேட்டேன்—அதற்குப் பதில், நீ உத்தரராம சரித்திரம் படிக்கவில்லை போலும், அதில் கோவத் சத்தினுடைய மாமிசம் யாருக்காகச் சமைக்கப்பட்டதென்று படித்துப்பார் என்றார்.

ரா சிவ சிவ!

சீ. அதோடு நிற்கவில்லை—போனவாரம் செட்டியார் அவர்கள் டீபார்டியில்—செடிமறைவாக, ராமஸ்வாமி ஐயரை கொண்டுவரச்சொல்லி ஷேம்பென் (champagne) குடித்தாரா இல்லையா—நீரே கேட்டுப்பாரும்.

ரா. இதையெல்லாம் ஏன் என்னிடம் முன்பே சொல்லவில்லை?

சீ இதைச் சொன்னால் ஏதோ அவர் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை, அதற்காக அவர்மீது அவதூறாகக் கூறுகிறான் என்று எங்கு நினைக்கிறீரோ என்று சும்மா இருந்தேன்; அன்றியும் நம்முடைய சொந்த பந்துக்களே இப்படிச் செய்கிறார்கள் என்று அறிந்தால், சென்னை சநாதன தர்மசபையின் தலைவராகிய நீர் மிகவும் வருத்தப்படுவீர் என்று உமக்குத் தெரிவிக்காதிருந்தேன்.

ரா. பரமசிவம்! பரமசிவம்!

[அந்தத் தட்டோடு எடுத்து அதிலுள்ளதை அப்படியே ஜன்னல் வழியாக வெளியில் எறிந்து விடுகிறார்.]

சீதாராமா! என்னிடம் கூறிய இதை மற்றொருவரிடமும் கூறாதிருக்கும்படி உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன். இது வெளியாயின் என்னை மற்றவர்கள்—முக்கியமாக—நமது விரோதிகள்—என்ன ஏளனம் செய்வார்கள்! நான் எதையும் பொறுப்பேன் இவ்விஷயத்தில் ஏளனம் மாத்திரம் பொறுக்கமாட்டேன்.

சீ. இல்லை—நான் சொல்லவில்லை அப்பா—உமக்கு துக்கம் வேண்டாம்.

ரா. சந்தோஷம் [வெளியில் கதவைத் தட்டுகிற சப்தம்] யார் அது? [வெளியிலிருந்து "நான் தான் டெலிகிராப் பியூன்"] கொண்டுவா.

டெலிகிராப் பியூன் வீராசாமி வருகிறான்.

வீ. இந்தாங்க.

[ஒரு டெலிகிராம் கொடுத்து கையெழுத்து வாங்கிக்கொண்டு போகிறான், டெலிகிராம் கவரைப் பிரித்துப் பார்க்கிறார்.]

சீ. என்ன அப்பா விசேஷம்?

ரா. ஒன்றுமில்லை, என்னை காசியில் இம்மாசக்கடைசியில் சநாதன தர்ம கான்பரன்சுக்கு (conference) அக்கிராசனாதிபதியா யிருக்கும்படி கேட்கிறார்கள்.

சீ. சந்தோஷம். அப்பா, எனக்கு என்னபதில் சொல்லுகிறீர்—உம்முடைய தீர்மானம் என்ன?

ரா. [எழுந்திருந்து மிகவும் கலக்கத்துடன் உலாவிப் பெருமூச்செறிந்து] சீதாராமா, நான் உள்ளத்தில் ஒன்றுவைத்து வேறொன்று கூறமாட்டேன் என்பதை நீ அறிவாயல்லவா?

சீ. அதை நீர் எனக்குச் சொல்லவேண்டியதில்லை.

ரா. நீ கூறிய நியாயங்களுக் கெல்லாம் என்னால் பதில் சொல்ல முடியாது என்னிருதயமானது உனக்கு உத்தரவுகொடுக்கும்படிச் சொல்கிறது—என்மனமானது அதற்கு ஒப்பவில்லை! இத்தனை வருடகாலமாக சனாதன தர்மசபைக்குப் பிரசிடென்டாக விருந்து பெயர்பெற்றநானே இக்கலியாணத்திற்கு உடன்படுவேனாயின்—எனது விரோதிகள்—அவர்கள் எத்தனைபே ரிருக்கிறார்கள் என்று நீயே அறிவாய் நன்றாய்—என்னை என்ன ஏளனம் செய்வார்கள்!—அன்றியும் நமது எதிர்கட்சிக்காரர்களாகிய பிராம்மணர் அல்லாதார்—என்னைத் தூற்றிவிடுவார்கள்! அந்த அவமானத்தைப் பொறுக்க என்னால் முடியாது. அன்றியும் இதைக் கேள்விப்பட்டால், சோமயாகம்செய்து சோமயாஜியென்று பெயர் பெற்றவருடைய மகளாகிய உன் தாயார்—உயிர்துறப்பாள்-அவள் இறந்தால்—நான்

உயிர்வாழேன்—சீதாராமா! இதுதான் என் தீர்மானம். உனது தாய் தந்தையர் உனக்கு ஜீவித்திருக்கவேண்டு மென விரும்புகிறாயா? அல்லது உனதுகாதலியை மணக்கும் சுகத்தைப் பெறவேண்டுமென விரும்புகிறாயா?

சீ. அப்பா! [கண்களில் நீர்ததும்ப] அப்பா! நீர் இந்தக்கேள்வி என்னை இப்படிக் கேட்கும்படியாக நான் என்னபாபம் செய்தேன்! உங்களிருவரையும் எனது தெய்வமாகப் பாவிக்கிறேன் என்பதை மறந்தீரா? நீங்கள் உயிரோடிருந் தால்நான் எல்லாச்செல்வங்களையும் சுகங்களையும் பெற்றவனாவேன்!—அப்பா—நான் வருவதா?

ரா. சீதாராமா, என்மீது கோபம்வேண்டாம்—

[நாற்காலியில் உட்காருகிறார்.]

சீ. இல்லை அப்பா—இல்லை.

[அவரைக் கட்டி முத்தமிட்டு, பிறகு பாதத்தில் பணிந்து, பாதங்களுக்கு முத்த மிடுகிறான்.]

ரா. இதென்ன—இப்பொழுது—சீதாராமா—

சீ. நான்வருகிறேன் அப்பா! [திரும்புகிறான்.]

ரா. எங்கேபோகிறாய்?

சீ. ஒருகேள்வி கேட்கப்போகிறேன்—

ரா. யாரை?

சீ. [கதவருகிற்போய்த் திரும்பி] என்னைப் படைத்தவனை!

[சரேலென்று போகிறான்.]

ரா. என்ன! [திடுக்கிட்டு நிற்கிறார், வெளியில் கைத்துப்பாக்கிச் சப்தம் கேட்கிறது] கண்ணே! சீதாராமா! சீதாராமா!

[வெளியில் ஓடுகிறார்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி

இடம்—யூனியன் கிளப்பின் மேல்மாடி தாழ்வாரம்

வெங்கடேச முதலியாரும், சாம்பமூர்த்தி ஐயரும், வருகிருர்கள்.

வே. இங்குதான் கொஞ்சம் காற்றுவருகிறது—இதை விட்டு விட்டு அந்த அறைக்குள் எப்படி அடைபட்டிருக்கிறது!—பாய்!

கிளப் பையன் வருகிருன்.

கி. பையன். சார்!

வே. இரண்டு நாற்காலிகளைக் கொண்டு வந்து இங்கேபோடு—ஒரு டீபாயும் கொண்டுவா—அப்படியே ரிப்ரெஷ்மென்ட் ஐயரிடம் எங்கள் டோஸ்டும் (toast) காப்பியும் இங்கே கொண்டு வந்து வைக்கச் சொன்னேன் என்று சொல்— [பையன் போகிருன்.]

சா. வெங்கடேசம், நான் சொன்னேனேபார்—அறையிலிருப்பவர்களெல்லாம் ஒவ்வொருவராக இங்கு வரப்போகிருர்கள்பார்.

[கிளப்பையன் இரண்டு நாற்காலிகளையும் ஒரு டீபாயையும் கொண்டுவந்துபோடுகிருன், இருவரும் உட்காருகின்றனர்]

அண்ணுசாமி முதலியாரும், சத்யநாராயண ஐயரும், வருகிருர்கள்.

சத். ஆமாம் சார்! இங்கே காற்று கொஞ்சம் வாட்டமாய்த்தான் வருகிறது! அடே பையா, எங்களுக்கு கூட இரண்டு நாற்காலிகளைக் கொண்டு வந்து இங்கே போடு.

வே. சா. [தங்கள் நாற்காலிகளினின்றும் எழுந்திருந்து] நீங்கள் இப்படி உட்காருங்கள்.

அ. தாங்கள்— [அதில் ஒன்றில் உட்காருகிருர்.]

சத். [மற்ருென்றில் உட்கார்ந்து] எங்கே, வெளியே போகிறீர்களா என்ன?

சா. இல்லை, பையன் கொண்டுவருகிற நாற்காலிகளில் நாங்கள் உட்காருகிருேம்.

சத். [உட்கார்ந்து கொண்டே] செ! ஆனால் உங்கள் நாற்காலி களை நாங்கள் எடுத்துக்கொண்டது தப்பாகும்.

அ. நீங்கள் இரண்டு பெயரும் ஊரில் இல்லை, ஏதோ வெளி யூருக்குப் போயிருந்ததாகச் சொன்னார்களே, எப்பொ ழுது வந்தீர்கள்?

சா. ஆமாம், இப்பொழுதுதான் திரும்பி வந்தோம். இன் னும் வீட்டிற்குக் கூட போகவில்லை.

அ எங்கே போயிருந்தீர்கள்?

சா. கூனூருக்கு.

அ அது நல்ல இடமல்ல சார். என் பாமிலி (family) டாக்டர் கூட இந்த வெயில் காலத்திற்கு அங்கே போயிருங்கள் என்று சொன்னார். நாலுநாள் போயிருந்து பார்த்தேன். சகிக்கமுடியவில்லை வெயில்! உடனே திரும்பி வந்து விட்டேன் இரண்டு நாளைக்கு முன்.

வே. வெய்யிலா? மழை கொட்டு கொட்டு என்று கொட்டிக் கொண்டிருக்கிறதே!

சா. என்ன வெங்கடேசம்? நம்முடைய முதலியார் சமாசா ரம் தெரியாமல் பேசுகிறாயே! அவர் போய் வந்த ஊர்— கொண்ணூராயிருக்கும்—என்ன முதலியார்?

அ. ஆமாங்கள்! அது பெரிய சிமெடோரியம் என்று எல்லா ரும் புகழ்ந்தார்கள்.

சா. பார்த்தாயா வெங்கடேசம்!—முதலியார், நீங்கள் சொல் வது ஒரு விதத்தில் சரிதான். இன்னும் வீடுகள் அதிக மாக ஆனால் நீங்கள் சொல்கிற மாதிரிதான் ஆகும்—

ஒரு பிராம்மணப் பையன் டோஸ்டும் காப்பியும் கொண்டு வந்து அண்ணாசாமி முதலியாருக்கும், சத்யநாராயண ஐயருக்கும், மத்தியிலிருக்கும் ஒரு சிறு மேஜையின் மீது வைத்து விட்டுப் போகிறான்.

அ. எத்தனை நாழி இதைக் கொண்டுவர!

[என்று சொல்லிக்கொண்டே, டோஸ்டில் ஒரு துண்டை எடுக்கிறார்.]

சத். முதலியார்! இது எனக்கு வந்த டோஸ்டு!

அ. அடடா! எனக்கு வந்ததென்று நினைத்தேன்—மன்னிக்க வேண்டும்.

சத். உம்—பெரிதல்ல—நீங்களே சாப்பிட்டு விடுங்கள்—நான் வேறே எனக்கு வரவழைத்துக் கொள்ளுகிறேன்—பாய்!

ஒரு பையன் வருகிறான்.

பையன். சார்!

சத். அடே, கீழேபோய் எனக்கு இன்னொரு டோஸ்டும் காப்பியும் கொண்டுவரச் சொல் அந்த ஐயங்கார் பையனை.

பையன். ஆகட்டும்—கீழ உங்களைப் பார்ப்பதற்காக யாரோ வந்திருக்கிறார்—இந்த கார்டை உங்களிடம் கொடுக்கச் சொன்னார்.

சத். [அதை வாங்கிப் பார்த்து] இதோ வந்து விட்டேன் என்று சொல் [பையன் போகிறான்.] என்ன நகைக்கிறீர்கள் சாம்பமூர்த்தி ஐயர்?

சா. ஒன்றும் விசேஷமில்லை.

சத். இல்லை, ஏதோ விசேஷமிருக்க வேண்டும்; தயவு செய்து சொல்லுங்கள்.

சா. பிறகு என் மீது கோபித்துக் கொள்ளக் கூடாது?

சத். இல்லை இல்லை, நானாகச் சொல்லும்படிக் கேட்டு விட்டு, பிறகு உங்கள் மீது கோபங் கொள்வது நியாயமா?—சொல்லுங்கள்.

சா. வேறொன்றுமில்லை, அண்ணுசாமி முதலியார் இந்த டோஸ்டைத் தீண்டினார் என்று அதை ஒதுக்கினீரே, அந்த டோஸ்டு செய்யப்பட்ட ரொட்டியைச் செய்தவன், நம்முடைய காரிசன் கம்பெனி ஆதிதிராவிடனாச்சுதே என்று யோசித்தேன்.

அ. நல்லகேள்வி கேட்டீர்கள்! நல்ல கேள்விகேட்டீர்கள்!

சத். ஏன் ஐயா? அண்ணுசாமி முதலியார், நீங்களும் இது தான் சமயம் என்று கூடச் சேர்ந்தீர்களோ ? நேற்றைத்தினம் தான், நீர் புதிதாய்வந்த ஒருபாய், ஜாதியில் பள்ளி, அவன் என்னுடைய சோடாவைத் தீண்டிவிட்டான், அவனை டிஸ்மிஸ் பண்ணவேண்டும், என்று செகரிடெரியிடம் பிரியாது பண்ணீர்களே, அந்த ஸ்பென்சர் சோடா பாக்டரியில் முதலியார்கள் தான் வேலைசெய்கிறார்களோ? இருக்கின்றவர்கள் எல்லாரும் பெரும்பாலும் ஆதிதிராவிடர்கள்தான் போயப்பாரும். உமக்கு மாத்திரம் பறையன் செய்ததை பள்ளி தொடக்கூடாது ?

அ. அதை நான் கண்ணுல் பார்க்கவில்லையுங்கள் !

சத். இந்த ரொட்டியைச் செய்தவனையும் நான் கண்ணுற் பார்க்கவில்லை !

சா. நியாயம்—

வே. சரியாகப் போய்விட்டது !

[ஒரு பிராமணப் பையன் இன்னொரு டோஸ்டும் காப்பியும் கொண்டு வந்து சத்தியநாராயண ஐயர் எதிரில் வைக்கிறான்.]

பி. பையன். சுந்தரம் ஐயர் கீழே வந்திருக்கிறார். உம்மைச் சீக்கிரம் பார்க்கவேண்டுமென்கிறார்.

சத். என்ன ந்யூசென்ஸ் (Nuisance) ஆனால் சீக்கிரம் இங்கே வரச்சொல். அடே ! அவருக்கும் ஒரு டோஸ்டு காப்பி கொண்டுவா. [பி. பையன் போகிறான்.]

சா. எந்த சுந்தரம் ஐயர் ? —மாஜிஸ்ரேட் கோர்ட்டில்—

சத் இல்லை இல்லை—அந்த சுந்தரம் அல்ல. இவன் போஸ்ட் ஆபீஸில் உத்தியோகமா யிருக்கிறான்.

சுந்தரம் ஐயர் வருகிறார்.

வாடா அப்பா சுந்தரம், உட்கார்—காப்பிசாப்பிடுகிறாயா?

சு. இல்லை, சாப்பிட்டாச்சுது, நான் சீக்கிரம் போகவேண்டும். [சத்தியநாராயண ஐயர் காதில் ஏதோ ரகசியமாய் ஓதுகிறான்.]

சத். இப்படிவா [ஒருபுறமாய் அவனை அழைத்துக்கொண்டு போய்] எங்கே அந்தக் கடிதம்?—

சு. [ஒருபுறமாக] கொண்டுவந்திருக்கிறேன்—மிகவும் அர்ஜெண்ட் (urgent) என்று எழுதியிருக்கிறாள்.

சத். [ஒருபுறமாக] கொடு இப்படி அதை.

சு. கடைசி இரண்டு கடிதங்களுக்கும் எனக்குச் சேர வேண்டியது—இன்னும் கொடுக்கவில்லையே நீங்கள்.

சத். எல்லாம் கொடுக்கிறேன் பிறகு—கொடு இதை—மூன்றிற்கும் ஒன்றாய் வாங்கிக்கொள்.

சு. இல்லை—எனக்கு அவசரமாய்க் கொஞ்சம் பணம் வேண்டியிருக்கிறது.

சத். எல்லாம் கொடுக்கிறேன்—என்மீது அவ்வளவு அவநம்பிக்கையா ?

சு. போன தடவையும் அப்படித்தான் சொன்னீர்கள்—வேண்டாமென்றால்—இக்கடிதத்தை அனுப்பிவிடுகிறேன்.

சத். கெட்டிக்காரன் !—இந்தா—தொலைத்துக்கொள். [ஒரு செக் புஸ்தகத்தை எடுத்து அதில் ஒரு செக் எழுதி அவனிடம் கொடுக்கிறார்] கொடு அக்கடிதத்தை.

சு. [செக்கை மடித்து ஜேபியில் வைத்துக்கொண்டு உள்பையினின்றும் ஒரு கடிதத்தை எடுத்து அவர் கையில் கொடுத்து] இந்த செக்கில் போன செக்கைப்போல் கஷ்டம் ஒன்றும் இராதே ?

சத். உறக்கப் பேசாதே ! அதனப்பிரசங்கி ! எல்லாம் சரியாக மாறும் போ. [சுந்தரம் ஐயர் போகிறார்.]

[சத்தியநாராயண ஐயர் அக்கடிதத்தை அவசரமாய்ப் படித்துபார்த்து விட்டு.]

அண்ணாசாமி முதலியார், நான் வருகிறேன்—ஐயா இரட்டைப் புலவர்களே நான் வருகிறேன்

[விரைந்து போகிறார்.]

சா. சத்யநாராயண ஐயர்—தன் டோஸ்டையும் காப்பியையும் தொடாமல் விட்டுப் போகும்படியா யிருந்தால், அது மிகவும் முக்கியமான சமாசாரமாகத்தானிருக்கும்.

வே. போடா! எப்பொழுது பார்த்தாலும் சந்தேகப்பிராணி!

சா. நீயும் அப்படித்தான், நான் வாயைத்திறந்து சொல்கிறேன்—நீ மனதில் நினைத்துக்கொள்ளுகிறாய். வா போவோம் நாம்—முதலியார், நாங்கள் வருகிறோம்.

[இருவரும் போகிறார்கள்.]

அ. வாருங்கள்—அய்யோ! இந்த டோஸ்டும் காப்பியும் வீணாகப் போகிறதே. [அதையும் சாப்பிடுகிறார்.]

காட்சி முடிகிறது.

## இரண்டாம் காட்சி

தர்மலிங்க முதலியார் வீட்டின் மேல்மாடி.

கற்பகம், வெங்கடேச முதலியாரையும், சாம்பமூர்த்தி ஐயரையும் விரைவில் அழைத்துக்கொண்டு வருகிறாள்.

வே. என்ன அம்மா, அப்படிப்பட்ட அவசரமான சமாசாரம்?—இன்று காலையில்தான் காஞ்சீபுரத்திலிருந்து வந்தோம்.

சா. உன் காகிதத்தைப் பார்த்த உடன்—இங்கு விரைந்து வந்தோம்.

க. நான் விரைவிற் சொல்லுகிறேன் கேளுங்கள்—இன்னும் இராகு காலம் கழிய இரண்டு மூன்று நிமிஷங்கள் தான் இருக்கிறது; அது கழிந்தவுடன்—வண்டியில் உட்கார்ந்திருக்கும் அண்ணாசாமி முதலியார் இங்கு வந்து விடுவார்—

வே. வந்தால் என்ன?

க. அவருடைய பிள்ளைக்கு—என்னைக் கலியாணம் பண்ணிக் கொடுக்க வேண்டுமென்று பலவந்திக்கிறார் சில தினங்களாக—அதை நீங்கள் எப்படியாவது தடுக்கவேண்டும்.

சா. உன் தகப்பனார், அதற்கு சம்மதித்து விட்டாரோ?

க. அவர் சம்மதிப்பார் போல்—தான்—இருக்கிறது.

வே. அப்படியா!

க. ஆம்—டில்லி கவுன்சில் எலெக்ஷனில்—இவருடைய உதவி எப்படியும் தனக்கு வேண்டுமென்று—அதற்காக—இசைவார்போலிருக்கிறது—அதை நீங்கள் எப்படியாவது தடுக்கவேண்டும்—அவருடன் பேசி.

சா. உம்—சீதாராமனுக்கு என்னமோ—உடம்பு அசௌக்கியமில்லை என்று சொன்னார்களே ?

க. அதைப்பற்றியும்— உங்களிடம்—பேசவேண்டுமென்றே உங்களுக்கு அவ்வளவு அவசரமாக வரும்படி எழுதினேன்—சிலதினங்களாக— அவர் மிகவும் நோயாயிருக்கிறாராம், அவர் தகப்பனார் அவரை ஒருவருடனும் பேசவிடுவதில்லையாம்—அப்பா ! உங்களிடம் நான் ஒன்றும் ஒளிக்கக்கூடாது—நான் அவருக்கு எழுதிய கடிதங்களுக்கு—பதில் ஒன்றும் வரவில்லை—அதோ ஆயிரம் புளுகு முதலியார் வருகிறார்—நான் இனி இங்கு இருக்கலாகாது—உங்களிருவரையும்தான் நான் நம்பியிருக்கிறேன். [விரைந்து போகிறாள்.]

அண்ணாசாமி முதலியார் வருகிறார்.

வே. வாருங்கள்—முதலியார் அவாள்.

சா. உட்காருங்கள்—க்ஷேமந்தானே ?

அ. நீங்கள் யாரோ தெரியவில்லை.

[ஜேபியைத் தடவிப்பார்த்துக்கொண்டு]

வே. நான் தான் வெங்கடேசன்.

அ. ஓ ! வெங்கடேச ஐயரவாளா—மன்னிக்கவேணும் ! உங்கள் தம்பி சாம்பமூர்த்தி முதலியார் எங்கே ?

சா. இதோ—இருக்கிறேன்—சாம்பமூர்த்தி—ஐயர்.

அ. அடடா ! மன்னிக்கவேணும்—வந்த அவசரத்தில் கண்ணாடியை வீட்டில் வைத்து விட்டேன் போலிருக்கிறது—[ஜேபியைத்தடவி] ஆ ! இதோ இருக்கிறது அம்மட்டும்

[ஜேபியிலிருந்து பௌன்டன் பேனா உரையை எடுத்து அதிலிருந்து ஒரு பௌன்டன் பேனாவை எடுத்துத் துடைத்து மூக்கில் போட்டுகொள்ளப் பார்க்கிறார்.]

சா. முதலியார் அவாள்—இது பௌன்டன் பேனு!—மூக்குக் கண்ணாடியல்ல!

அ. ஆ! பார்த்தீர்களா—வந்த அவசரத்தில் மூக்குக்கண்ணாடிக்குப் பதிலாக—இதை எடுத்துக்கொண்டு வந்து விட்டேன்—கண்ணாடி இல்லாவிட்டால் என்ன கஷ்டம் பாருங்கள்.

வே. இதோ என் கண்ணாடியைப் போட்டுப் பாருங்கள் தெரிகிறதா என்று. [கொடுக்கிறார்.]

அ. [அதை வாங்கிப் போட்டுக்கொண்டு] ஆ! நன்றாகத் தெரிகிறது—என் கண்ணாடியைவிட பார்வை நன்றாகத் தெரிகிறதே!

வே ஆம்—சில சமயங்களில் கண்ணாடிகளை மாற்றுவது நல்லது தான்.

அ. உம்—உங்களிருவரையும் ஒரு கேள்வி கேட்பதற்காக மன்னிக்கவேண்டும்; நீங்கள் இருவரும் ஒரேமாதிரி யிருக்கிறீர்கள்—ஒரேமாதிரி உடுப்புப் போட்டுக்கொள்ளுகிறீர்கள்—உங்களில் யார் முதலியார்—யார் ஐயர் என்பது தெரிவது கஷ்டமாயிருக்கிறது—

சா. அது நல்லது தானே, முதலியார் ஐயர் என்கிற வித்தியாசம் இல்லாதிருப்பது.

அ. அப்படியிருக்கக் கூடாதுங்கள்—என்னவென்றாலும் முதலியார் முதலியார்தான், ஐயர் ஐயர்தான்.

சா. அப்படியானால் நீங்கள் தான் சொல்லுங்கள், எங்களில் யார் பிராம்மணன், யார் சூத்திரன் என்று.

அ. அது தான் கண்டுபிடிப்பது கஷ்டமாயிருக்கிறது, அதிலும்நீங்கள் இரண்டு பெயரும் மீசையை எடுத்துவிட்டிருக்கிறீர்களா? அதில் கண்டுபிடிப்பது கஷ்டமாயிருக்கிறது.

வே. ஆமாம், இந்த காலத்தில் முதலியார்களெல்லாம் மீசையை எடுத்து விடுகிறார்கள்.

சா. அதற்கு பதிலாக பிராம்மணர்கள் மீசையை வைத்துக் கொள்ளுகிறார்கள் !

அ. அது கூடாதுங்கள்—பிராம்மணன் சூத்திரன் என்கிற வித்தியாசம் தெரியவேண்டாமா ?

சா. நீங்கள்தான் அந்த வித்யாசமெல்லாம் கூடாதென்கிறீர்களே ?

அ. நான் எங்கே சொன்னேன்? அது எல்லாம்—எங்கள் தர்மலிங்க முதலியார் சமாசாரம்—அவர் வீட்டிற்கு இன்னும் வரவில்லை போலிருக்கிறது ?

வே. சீக்கிரம் வந்து விடுவார் என்று வேலைக்காரன் சொன்னான்.

அ. அவனை நம்பாதீர்கள்—அவன் ஒன்றரை மணி நேரமாக அப்படியே எனக்குச் சொல்லிக்கொண்டிருந்தான் கீழே நான் வண்டியிலிருந்தபோது.

சா. என்ன ! ஒன்றரைமணி நேரமாகவா—கீழே வண்டியில் காத்திருந்தீர்கள் ?

அ. என்ன செய்கிறது பாருங்கள் ! கிரஹசாரம் ! நான் ஒரு அவசரமான வேலையாக முதலியாரவாளைப் பார்த்து, ராகு காலத்திற்கு முன்பாக அதை முடித்துக் கொண்டு போகவேண்டுமென்று புறப்பட்டு வந்தால்—வந்த வழியில் என் காரின் மெஷீன் என்னமோ கெட்டுப் போய் விட்டது—அதை சரிப்படுத்திக்கொண்டு இங்கு வேகமாக வந்தால், அதற்குள் ராகுகாலம் வந்து விட்டது—ராகுகாலத்தில் நான் ஒன்றும் செய்வதில்லை என்பது உங்களுக்குத்தான் தெரியுமே—அதனால் அப்படியே தெருவில் வண்டியில் உட்கார்ந்திருக்க வேண்டி வந்தது.

வே. பழய வண்டிகளில் வருவதில் இது கஷ்டம் தான்.

அ. பழய வண்டிங்களா ! புதுசாக வாங்கினேனுங்கள்—பன்னீராயிரம் ரூபாயிக்கு ! ராயல் ரோல்ஸ் வண்டிங்க !

சா. ரோல்ஸ் ராயஸ் வண்டி தானே—நம்பர் 123 ?

அ. ஆமாம்—போனமாத்திரம் என்னமாகப் போகிறதென்கிறீர்கள் !

சா. வாஸ்தவம்—[ஒரு புறமாக வெங்கடேச முதலியாருக்கு] எட்டு வருஷத்திற்கு முன் அந்த செட்டியாருக்கு விற்றுமே ஆயிரம் ரூபாய்க்கு அந்த வண்டி !

வே. ஆனாலும்—எல்லாம் புதிசாக வர்ணம் பூசியிருக்கிறார்.

அ. ஆமாங்கள் ! அந்த வர்ணம் பூசிகிறதற்கு மாத்திரம் இரு நூறு ரூபாய் கொடுத்தேனுங்கள் !

சா. [ஒரு புறமாக] இந்தக் கதையில் போனல் முடியாது—முதலியார் அவாள், ஏதோ அவசரமாக வந்ததாகச் சொன்னீர்களே—என்ன விசேஷம் என்று கேட்கலாமோ ?

வே. அடேகிழவா, அதையெல்லாம் அவரையேன் கேட்கிறு யடா ? ஏதாவது ரகசியமிருக்கலாம்.

சா. ரகசியமாக இருந்தால் சொல்லவேண்டாம்.

அ. ரகசியம் ஒன்றுமில்லை—உங்களுக்கெல்லாம் தெரிந்து நடக்கவேண்டிய காரியம்தான்—என்பிள்ளைக்கு, முதலியாருடைய பெண்ணைக் கேட்கவந்திருக்கிறேன். நீங்கள் என்ன காரியமாக வந்திருக்கிறீர்கள் ?

வே. அடடா ! நாங்களும் அதே காரியமாகத்தான் வந்திருக்கிறோம் !

அ. உங்களுக்கு பிள்ளை ஏதாவது உண்டோ ? உங்களிருவருக்கும் விவாகமே ஆகவில்லையென்று கேள்விப்பட்டிருக்கிறேனே !

வே. இல்லை—எங்களுக்குத் தெரிந்த பிள்ளையாண்டான் ஒருவன் இருக்கிறுன்—அவனுக்காகக் கேட்கலாமென்று—

அ. அடடா ! அதெல்லாம் நீங்கள் வேறு எங்காவது பார்த்துக்கொள்ளவேண்டியது தான்—இது முடிவாகி விட்டது.

சா. என்ன! தர்மலிங்க முதலியார் வாக்குக் கொடுத்துவிட்டாரோ?

அ. கொடுத்தது போலத்தான்—அவர் இந்த விஷயத்தில் என்னை மீறி நடக்கமாட்டார்.

சா. அது ஏனப்படி? அவ்வளவு ஸ்திரமாகச் சொல்லி விடுகிறீர்களே?

அ. உங்களிடம் இந்த ரகசியத்தை சொல்வதற்கென்ன? இந்த வருகிற இம்பீரியல்கவுன்சில் எலெக்ஷனில், (Imperial Council Election) என் உதவியில்லாமல் அவர் ஜபம் சாயாது. அவர் பெண்ணை என் பிள்ளைக்குக் கொடுத்தாலொழிய, நான் அவர் பக்கம் சகாயம் செய்யமாட்டேன் என்பதை ஜாடையாகச் சொல்லியிருக்கிறேன்.

வே. ஓ! அப்படியா சமாசாரம்!

சா. சரிதான்—அப்பொழுது சந்தேக மென்ன?—எப்பொழுது கலியாணம்?

அ. அதற்குத்தான் ஒரு நாள் முடிவு பண்ணிக்கொண்டு போகலாமென்று வந்திருக்கிறேன்.

சா. ராகு காலத்தில்.

வே. அடெ! அதனப்பிரசங்கி! அவர் ராகுகாலம் கழித்து தானே வந்தார்.

சா. இல்லை—வரும்போது மோடார் வண்டி உடைந்தது—சகுன மெல்லாம் சரியாக இருக்கின்றதே—என்று சொல்ல வந்தேன்—முதலியார் அவாள், கலியாணத்திற்கு எங்களை யெல்லாம் மறந்து போகக்கூடாது.

அ. உங்களுக்குச் சொல்லாமலா!—பதினாயிரம் இன்விடேஷன் கார்டுகள் அனுப்பிக்கலாம் என்று யோசித்திருக்கிறேன்.

சா. பதினாயிரம் போதுங்களா? சென்னையில் மாத்திரம் ஐந்து லட்சம் ஜனங்களிருக்கிறார்களே! அவர்களில் ஆ—அண்ணுசாமி முதலியாரைத் தெரியாதவர்கள் யார்?

அ என் தலைப் பெயர் ஆ—அல்லா வுங்க—பொ—பொழிச்சலூர்.

சா. சரி—பொ என்பதற்கும் சரியாகத்தானிருக்கிறது.

வே உங்கள் பிள்ளையாண்டான்—ஏதாவது பாஸ்பண்ணி யிருக்கிறானுங்களா?

அ. பரிட்சைக்குப் போயிருக்கிறானுங்க—அது என்னமோ பரிட்சை—எஸ்,—எஸ்—ரெண்டு இரண்டு எஸ்—வரு கிறதே—

சா. ஆம் ஆம், எனக்குக்கூடத்தெரியும் இரண்டு எஸ் வருகிற பரிட்சை!

வே. அடே, சும்மா இரு கொஞ்சம்—அந்த பரிட்சை பாஸ் ஆய்விட்டதுங்களா?

அ. இன்னும் சமாசாரம் தெரியவில்லையாம்.

வே. நன்றாக ஆன்சர் பண்ணியிருக்கிறாரோ இல்லையோ? பாஸ் பண்ணி விடுவரோ இல்லையோ?

அ. நன்றாகத்தான் எழுதியிருக்கிறேன்—ஆனாலும் கொஞ்சம் சந்தேகமாயிருக்கிறது—இந்த எக்ஜாமினருங்க (Examiner) எல்லாம் பார்ப்பாருங்களா இருக்கராங்களாம்! அவர்கள் ஒருவேளை பெயிலாக்கி வைத்தாலும் வைப்பார்கள் என்று சந்தேகப்படுகிறான்.

சா. அடடா! இதில் கூட பார்ப்பார் வந்தார்களா?

வே. முதலியாரவாள்! நாம் அவர்களை பிராம்மணர் என்று கூறினால் என்ன கெட்டுப்போகிறது?

அ. அவர்கள் மாத்திரம் நம்மை சூத்திரன் என்று திட்டவில்லையோ?

சா. அப்படி அடக்குங்கள்! வெங்கடேசன் வாயை!—பிள்ளையாண்டானுக்கு என்ன வயதோ?

அ. இப்பொழுதுதான் பதினேழு ஆகிறதுங்கள்!

சா. பதினேழா?—கற்பகத்திற்கு—தர்மலிங்க முதலியார் பெண்ணுக்கு—பதினெட்டு வயதாகிறது என்று சொல்கிறார்களே?

அ. ஆமாம்! என் பிள்ளைக்கு இருபத்தேழு வயதாகிறது—வாய் தவறி பதினேழு என்று வந்து விட்டது.

சா. இருபத்தேழு வயதுக்குள்ளாக டபில்.எஸ். பரிட்சைக்குப் போயிருக்கிறார்! நிரம்ப புத்திசாலியா யிருக்க வேண்டும்.

அ. அதற்காகத்தான் சீக்கிரம் சீமைக்கு அனுப்பலாமென்று யோசித்திருக்கிறேன்.

சா. அங்கு என்ன பரிட்சைக்கு அனுப்புவது?—இங்கே எஸ். எஸ். பரிட்சை கொடுத்தான பிறகு? வேறென்ன இருக்கிறது அங்கே?

அ. ஐசி—எஸ்—ஸோ? யூசி—எஸ்—ஸோ? என்னமோ சொல்லுகிறார்களே, அதற்கு.

சா. ஐ சி. எஸ்ஸில். என்ன இருக்கிறது? யூ சி. எஸ். தான் மிகவும் கஷ்டம். அதில் எப்படியும் உங்கள் பிள்ளை பாஸ் பண்ணி வருவார்.

அ. பாஸ் பண்ணுமற்போனால் ஒன்றும் கெட்டுப்போகவில்லை. சீமைக்குப் போய் வந்தான் பிள்ளையாண்டான் என்கிற பெருமை இருக்கவேணும். அதற்காக அனுப்பலாமென்றிருக்கிறேன். கஷ்டப்பட்டு இந்தப் பரீட்சைகளெல்லாம் அவன் எதற்காகப் பாஸ் பண்ணவேண்டும்?—எனக்கிருக்கிற சொத்துகளைப் பார்த்துக்கொண்டிருந்தால் போதும்—உங்களுக்கு சொல்லுகிறேன்—எனக்குப் பட்டணத்தில் மாத்திரம் பதினறு வீடுகள் இருக்கின்றன. அவைகளிலிருந்து வாடகையில் மாத்திரம்—ஆயிரத்து எண்ணூற்று முப்பத்திரண்டு ரூபாய் வருகிறதுங்க மாசம்.

சா. [ஒருபுறமாக] வெங்கடேசம்—அவைகள் எவ்வளவுக்கு அடமானம் வைத்திருக்கிறார் கேட்கலாமா?

வே. சீ! பேசாமலிரு—அதனப்பிரசங்கி!

அ. என்ன தெரியவேண்டு மென்கிறார்?

வே. இல்லை, வெளியிலேகூட நிலம் கொஞ்சம் உங்களுக்கிருக்கிறதே என்று சொல்கிறார்.

அ. கொஞ்சம் என்ன? எனக்கு இருபத்தாறு கிராமங்களில் நிலங்களிருக்கிறது.

சா. கொஞ்சநாளைக்கு முன்னே முப்பத்திரண்டு என்று சொன்னாற் போலிருக்கிறதே?

அ. ஆம் அது வாஸ்தவம்தான்—அதில் ஐந்தாறு கிராமங்களை ஒன்றாகச் சேர்த்து விட்டேன்.

சா. பார்த்தாயா வெங்கடேசம்! முதலியாரால் முடியாத காரியம் ஒன்றுமில்லை. கிராமங்களையும் கிராமங்களையும் ஒன்றாய்ச் சேர்த்துவிடுவார்—நம்மாலே அது முடியுமா? [ஒருபுறமாக] வெங்கடேசம்—இவருக்கு சமுத்திரத்தின் கீழ் எவ்வளவு நிலம் இருக்கிறதென கேட்கலாமா?

வெ. சத் பேசாமலிரு!—என்னுங்கள்—பிள்ளையாண்டானை பார்த்ததில்லை—அழகாயிருப்பாரா?

அ. அழகுக்கென்ன குறைவு? நல்ல மானிறமாக இருப்பான்—என்னைப்போலவே?

சா. உங்களைப் போலவே!—பிறகு என்ன குறைச்சல்?

வெ. மாநிறம் என்றால் எனக்கு அர்த்தமாகவில்லை.

சா. பாருங்கள் முதலியார், இந்த வெங்கடேசனை என்ன மடையன் என்று சொல்லுவது! மானிறம் என்றால் அர்த்தம் தெரியவில்லையாம்—மாநிறம் என்றால் மரத்து நிறம் என்ற அர்த்தம், இந்த எபனி உட் (Ebony wood) இருகிறது பாருங்கள் அந்த நிறம்—இதோ தர்மலிங்க முதலியார் வருகிறார்போலிருக்கிறது.

தர்மலிங்க முதலியார் படியேறி வருகிறார், அவர் பின்னால் ஒரு பிராம்மணப் பிள்ளை வருகிறான்.

த. ஹலோ! வாருங்கள்—உட்காருங்கள்—இதோ வந்துவிட்டேன்—ஒரு நிமிஷம்—என்னை யேனடா அப்பா தொந்திரவு செய்கிறாய்?—உங்கள் பிராம்மணர்களிருக்கிறார்களே அவர்களிடம்போய் கேட்டு வாங்கிக்கொள்ளேன்! நீ போ.

பி. பி. இப்படிப் போவதானால், சமுத்திரத்திற்குத்தான் நான் போகவேண்டும்! எங்களவர்களை யெல்லாம் கேட்டுப் பார்த்தேன்—ஒருவரும் கொடுக்க முடியாதென்று சொல்லிவிட்டார்கள். இன்றுதான் கடைசி தினம்—பரிட்சைக்குப் பணம் கட்ட நீங்கள் கொடுத்தால், இந்தப் பரிட்சையில் தேறி—என் தாயார் முதலியோரைக் காப்பாற்றுகிறேன்-இல்லாவிட்டால் சமுத்திரக் கரைக்கு நேராகப் போகிறேன்.

த என்ன முத்துசாமி—விடாகண்டனாயிருக்கிறாய்—இந்தா [ஒரு செக்கை எழுதிக் கொடுத்து] போ—இதை நான் உனக்குக் கொடுத்ததாகச் சொல்லாதே. சொன்னையோ ஊரிலுள்ள பிராம்மணப் பிள்ளைகளெல்லாம் என்னிடம் வந்துவிடுவார்கள் நாளை!

பி. பி. கங்காதரீஸ்வரர் உம்மையும் உம்முடைய குடும்பத்தையும் காப்பாற்றுவாராக!—நமஸ்காரம். [போகிறான்.]

வே. யார் அது பிள்ளையாண்டான்?

த. வெள்ளாழத் தெருவிலிருக்கும் பிராம்மணப் பிள்ளை. இவன் தகப்பனரை என் சிறு வயது முதல் தெரியும். அவர் கிண்டிப் பந்தயத்தில் பெட் (bet) பண்ணுவதற்காக இருந்த ஆபீஸில் கைவைத்துவிட்டு, உத்தியோகம், போய்—கவர்ன்மென்ட் சிலவில் இரண்டு வருஷமாக சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்—பிள்ளையையும் பெண் சாதியையும் நடுத்தெருவில் அலையவிட்டு, இந்தப் பிள்ளை எப்படியோ கஷ்டப்பட்டு பிச்சையெடுத்து தன் குடும்பத்தைக் காப்பாற்றிக் கொண்டு, படித்துக் கொண்டு வருகிறான்-பத்துநாளாக என்னைத் தொந்திரவு பண்ணிக் கொண்டு வந்தான். பரிட்சைக்குப் பணம் என்று கேட்டால்— நான் எப்படி இல்லையென்று சொல்லிவிடுவது?

அ. நம்மால்தான் இந்த பாப்பாருங்க எல்லாம்—பிராமணர்களெல்லாம் கெட்டுப்போய் விடுகிறார்கள்—நம்மிடமிருந்து

பணம் வாங்கிப் படித்துவிட்டு, பாஸ் பண்ணிவிட்டு, நம்முடைய தலைமீது ஏறுகிறார்கள்!

வெ. நம்முடைய பிள்ளைகளை, நன்றாய் படித்து பாஸ் பண்ணி, அவர்கள் தலைமீது ஏறவேண்டாமென்று யார் தடுத்தது?

அ. நான் என்ன சொல்லவந்தேன் என்றால்—நாம் கொடுப்பானேன் ஐயர், பிராம்மணர்கள் படிப்பதற்குப் பணம்?

வெ. நம்முடைய முதலியார், தங்கள் ஜாதி பிள்ளைகள் யாராவது ஏழைகளாயிருந்தால் அவர்கள் படிப்பதற்காக, எவ்வளவு பணம் வேண்டுமென்றாலும் கொடுக்கிறேன் என்று தெரிவித்து, உதவிசெய்து வருகிறாரா இல்லையா?

த. அப்படி நான் தெரிவித்தும் எத்தனை முதலியார் பிள்ளைகள் படிக்கிறார்கள் கேளுங்கள்?

அ. அதற்கென்ன செய்வது? நம்முடைய பிள்ளைகள் பிச்சை எடுக்கமாட்டார்கள். அவர்கள் வந்து கேட்கவேண்டுமென்பதென்ன? நீங்களாகக் கொடுத்தனுப்புகிறது தானே?

த. வெங்கடேச முதலியார் கேட்டீர்களா நியாயம்? பிள்ளைகளை நான் நேரிற் பார்த்து விசாரித்துக் கொடுப்பது தவறாம், ஒன்றும் தெரியாமல் அவர்கள் வீட்டிற்கு நான் மணியார்டர் செய்யவேண்டுமாம்! வெட்கக்கேட்டை நானே சொல்லவேண்டி யிருக்கிறது. இந்த முதலியார் ஜம்பம் இருக்கிறவரையில் நம்மவர் உருப்படுவதெவ்விதம்! —என்ன சாம்பமூர்த்தி ஐயர்! எங்கள் சமாசாரம் எல்லாம் கேட்க உமக்கு நகைப்பாயிருக்கிறது!

சா. முதலியார் அவாள், வாஸ்தவமாகச் சொல்லுகிறேன்—என் வார்த்தையை நம்புங்கள், நான் நகைத்தது; இப்படி நீங்கள் பிராம்மணர்களுக்கு உதவி செய்தும், உம்மை பிராம்மணத்துவேஷி என்று எங்களவர்களில் பலர் வைகிறார்களே யென்று நகைத்தேன்.

த. அது என் தலைவிதி, நான் என்ன செய்வது அதற்கு? எப்படியாவது வர வர தாழ்ந்துகொண்டே போகும் எங்

களவர் முன்னுக்கு வரவேண்டுமென்று பாடுபடுகிறேனே யொழிய, எந்தப் பிராம்மணனையாவது நான் தூஷிக்கிறேனா? பிராம்மணர்களுடைய கோட்பாடுகள் பலவற்றை நான் எதிர்க்கிறேன் உண்மையே! ஆகவே பிராம்மணர் கோட்பாடுகளைத் துவேஷிக்கிறேன் என்று சொல்லும் ஒப்புக்கொள்ளுகிறேன், பிராம்மணர்களை தூஷிக்கிறேன் என்று கூறுதீர்; பிராம்மணர்களில் எனக்கு எத்தனை பெயர் அத்யந்த நண்பர்களாயிருக்கிறார்கள்—உம்மைப் போல்.

வே. என்ன முதலியார்—இவனைப்போல் என்கிறீர்களே! இவனை யார் பிராம்மணன் என்று சொன்னது? எத்தனை பிராம்மணர்கள் இவனை சூத்திரன் என்கிறார்கள்—சாம்ப மூர்த்தி முதலியார் என்றழைக்கிறார்கள்—நம்முடைய அண்ணுசாமி முதலியார் அழைப்பதுபோல்!

சா. ஆமாம் உன்னை உன் பந்துக்களெல்லாம்—இவன் பிராம்மணனாய் விட்டான், என்று சொல்லவில்லையோ? வெங்கடேச ஐயர் என்று ஏளனம் செய்யவில்லையோ?

த. [நகைத்து] ஐயா! நீங்கள் இரண்டு பெயரும் உங்கள் சண்டையைக் கொஞ்சம் நிறுத்துங்கள்! நீங்கள் சண்டை போட ஆரம்பித்தால் அது முடியாது! ஆயினும் நான் வாஸ்தவமாய்ச் சொல்கிறேன். சில சமயங்களில் உங்களிருவரில் யார் பிராம்மணன், யார் சூத்திரன் என்று சந்தேகப்பட வேண்டியவனாயிருக்கிறேன்.

சா. முதலியார் அவாள், கொஞ்சம் யோசித்துப்பாருங்கள். அப்படி சந்தேக மில்லாதிருப்பது மிகவும் நல்லதல்லவா? நம்முடைய தேசத்தாரெல்லாம், பிராம்மணன் என்றும் சூத்திரன் என்றும் பேதம் தெரியாதபடி யிருந்தால் நம்முடைய தேசத்திற்கு எவ்வளவு நலமாயிருக்கும்!—கொஞ்சம் ஆழ்ந்து யோசித்துப்பாரும்.

த. [சற்று யோசித்து] ஆம்—அப்படிச் செய்துகொள்வதற்கு—பிராமணர்களாகிய நீங்கள்தான் இடம் கொடுக்கமாட்டேன் என்கிறீர்கள்.

சா. பிராம்மணர்கள் இடங்கொடுப்பதென்ன? நீங்களாக் அந்த ஸ்தானத்தை வகியுங்கள்! ஏதோ இரண்டாயிரம் வருடங்களாக அவர்கள் கல்வி பயிற்சியை அதிகமாய் மேற்கொண்டமையாலும், சில ஆசாரங்களை அனுஷ்டித்ததினாலும், கல்வித்திறமும், ஒழுக்கமும் கொஞ்சம் இருப்பதாக எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். அவர்களைப்போல் மற்ற ஜாதியாரும் கல்விபயின்று, நல்லொழுக்கங்களை அனுசரித்து, அவர்களுக்கு சமானமாகவும், அவர்களுக்கு மேலாகவும் ஆகிறதுதானே! இரண்டு பிரிவினர் சமானமாவதென்றால் இரண்டு மார்க்கங்களிருக்கின்றன; ஒன்று, கீழே இருப்பவர் மேலிருப்பவர்களைத் தங்கள் ஸ்திதிக்கு இழியச் செய்யலாம்; மற்றொன்று, கீழ் இருப்பவர்கள் மேலிருப்பவர்கள் ஸ்திதிக்குத் தங்களை உயர்த்திக்கொள்ளலாம். இதில் எது மேலானது எது தாழ்ந்தது என்று தாங்களே சொல்லுங்கள்.

த. [சற்று யோசித்து] இன்னொருவழியில்லையா? மேலே இருப்பவர் கீழிருப்பவர்களைக் கைகொடுத்துத் தூக்கித் தங்கள் ஸ்திதிக்கு சமானமாக்கிக் கொள்ளலாகாதா?

சா. செய்யலாம்! அவர்கள் அதைச் செய்யமாட்டார்கள்! செய்தால் மிகவும் பெருந் தன்மையாயிருக்கும்! ஆயினும் செய்யமாட்டார்கள்! அப்படிச் சமானமாக்கிக் கொண்டால் தாங்கள் இரண்டாயிரம் வருடங்களாக அனுபவித்த உயர்ந்த பதவியும் அதனால் உண்டான பலவித லாபங்களும் அடியுடன் போய்விடுமல்லவா? அதற்காகத் தாங்களாக அவர்கள் இதைச் செய்ய இசைவார்கள் என்று எண்ணுவது உலக சரித்திரங்களில் நாம் அறிந்ததற்கெல்லாம் விருத்தமாகும்—தற்காலம் ஆங்கிலேயரை, இந்தியர்களை உங்களுக்குச் சமானமாகப் பாவியுங்கள், நீங்களே அவர்களை உங்களுக்குச் சமானமாக்கிக் கொள்ளுங்கள், என்றால் அவர்கள் அவ்வாறு செய்வார்கள் என்று கனவிலும் நினைக்கிறீர்களா?

த. உம்—அது வாஸ்தவம்தான்—

சா. ஆகவே, இதற்கு ஔஷதம் உங்கள் கையிலிருக்கிறது. அதை உபயோகியாமல் பிராம்மணர்களை வைவதினாலும், இழிபடச் செய்வதினாலும், உங்களுக்கென்ன லாபம்? நாமிருதிறத்தாரும் இவ்வாறு சண்டை போட்டுக்கொண்டிருந்தால், மூன்றாவது மனிதர்களுக்கு கண்குளிர்ச்சி, ஏளனம்! இந்த சச்சரவெல்லாம் இருக்கும் வரையில் நமது தேசம் ஐக்கியமாகுமென்று நினைக்கிறீர்களா? க்ஷேமப்படுமென்று நினைக்கிறீர்களா? அபிவிர்த்தியடையுமென்று நினைக்கிறீர்களா?

வே. என்னடா இது கிழவா? பெரிய பிரசங்கம் பண்ணுகிறாய்! உனக்கு பைன் போடலாமென்று யோசிக்கிறேன்.

சா. போடு—நான் கட்டிவிடுகிறேன்—என் மனதிலிருந்ததை நான் சொல்லிவிட்டேன், பிறகு உன்பாடு, முதலியார் பாடு—அண்ணாசாமி முதலியார்—

அ. [தூங்கிக் கொண்டிருந்தவர் திடுக்கிட்டு கண் விழித்து] நான் தூங்கவில்லையுங்கள்! நீங்கள் பேசினதையெல்லாம் கண்ணை மூடிக்கொண்டு கேட்டுக் கொண்டிருந்தேன்—முதலியார் அவாள் எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கிறது—கவர்ன்மென்ட் அவுசில் ஒரு என்கேஜ்மென்ட் இருக்கிறது—நான் காகிதம் அனுப்பினேனே வந்து சேர்ந்ததோ?

த. வந்தது.

அ. அதற்கு என்ன பதில்?

த உம்—சரி—உங்களிஷ்டப்படியே ஆகட்டும்.

அ. மிகவும் சந்தோஷம்! நீங்கள் ஒரு முறை வாக்குக் கொடுத்த பின் திரிமூர்த்திகள் வந்தாலும் மாறமாட்டீர்கள் என்று தெரியும் எனக்கு—அப்பொழுது ஒரு நாள் குறித்துக்கொண்டு தெரிவிக்கிறீர்களா, கூடிய சீக்கிரத்தில்?

த. இந்த நாள் முதலிய வெல்லாம நான் பார்க்கிறதில்லே, நீங்களே பார்த்து குறித்தனுப்புங்கள்.

அ. அப்படியே செய்கிறேன்—நான் வருகிறேன்—வெங்கடேச ஐயர், சாம்பமூர்த்தி முதலியார், நான் வருகிறேன். நான் சீக்கிரம்போகவேண்டியதிருக்கிறது கவர்ன்மென்ட் அவுசுக்கு.

சா. என்ன விசேஷம் என்று கேட்கலாமோ ?

அ. வேறொன்றுமில்லே, அங்கேபோய் எதோ கார்ட்வைத்து கையெழுத்து பண்ணவேண்டுமாம், இல்லாவிட்டால் கவர்ன்மென்ட் ஹவுஸ் பார்டிக்கு இன்விடேஷன் அனுப்பிக்க மாட்டார்களாம், அதற்காகப் போகிறேன்.

சா. அப்பொழுது சீக்கிரம் போங்கள்—அது முக்கியமான வேலே.

அ [போகும்போது] கலியாணத்திற்கு — கவர்னருக்குக்கூட ஒரு இன்விடேஷன் அனுப்பிக்கலாமென்றிருக்கிறேன். [போகிறார்.

வெ. எந்த கலியாணத்திற்கு முதலியார் ?

த. அவர் பிள்ளே கலியாணத்திற்கு.

சா. பெண் எங்கே ?

த. என் பெண்ணே—கேட்டிருக்கிறார்.

வெ. அதற்கு நீங்கள்—ஒப்புக்கொண்டீர்களோ ?

த. ஆம்—நீங்கள்தான் கேட்டுக்கொண்டிருந்தீர்களே ?—ஒப்புக்கொண்டேன்.

சா. என்ன முதலியார்? உங்கள் பெண் நன்றாகப் படித்து பரீட்சை கொடுத்திருக்கிறாள், அவளேப்போல் அழகி இவ்வுலகிலேயே நான் பார்த்ததில்லே-இவருடைய பிள்ளே ஒன்றும் படிக்கவில்லேயென்று அவரே சற்று முன் ஒப்புக்கொண்டார் எங்களுடன் பேசிக்கொணடிருந்தபோது—அன்றியும் அவரைப்போல் கறுப்பாயிருக்கின்றானும். ஏதோ பணக்காரர் என்று நினேத்து ஒப்புக்கொண்டீரா என்ன ? அவர் சொத்தெல்லாம் ஏறக்குறைய அடமா

னம் வைக்கப்பட்டிருக்கிற தென்பது நீர் அறியீர் போலும்!

த. தெரியுமெனக்கு—ஆயினும் நான் என்ன செய்வது? எங்கள் முதலியார் வகுப்பில் நான்கைந்து குடும்பங்கள் தானிருக்கின்றன—நான் சம்பந்தம் செய்யக்கூடிய தாக. அவைகளில்—இந்தப் பிள்ளைதான்—கூரையின் மீது கொள்ளிக் கட்டையைச் சுற்றும் குமாரனைப் போல்—மற்றவர்களைவிட கொஞ்சம் யோக்கியனாயிருக்கிறான்.

வே. முதலியார் அவாள், உங்கள் குடும்ப விஷயத்தில் நான் ஏதோ தலையிட்டுக் கொள்ளுகிறேன் என்று எண்ண வேண்டாம். இதென்ன ஜாதிக்குள் ஜாதி, பிரிவுக்குள் பிரிவா? நம்முடைய தேசத்தில், இந்துக்கள், மஹம்மதியர் என்கிற பிரிவேபோதும், நாம் ஒன்றாய் ஐக்கியமாகாதபடி நம்மைப் பாழாக்க! இந்த இந்துக்களுக்குள் நான்கு பெரும் பிரிவு, அந்த ஒவ்வொன்று ஜாதியிலும் கணக்கில்லாதகிளை ஜாதிகள்! சூத்திரர்களில் மாத்திரம் நமது தேசத்தில் எத்தனை பிரிவினர் இருக்கின்றனர் என்று சொல்லமுடியுமா? அவர்களில் ஒரு கூறாகிய முதலிமார்களில் எத்தனை கிளைகள்? கார்கார்த்தார், கொண்டை கட்டிகள், துளவ வேளாளர், இன்னும் எத்தனையோ? இந்தத் துளவ வேளாளர்களில், பூந்தமல்லியார், பொன்னேரியார், காஞ்சிபுரத்தார், ஆற்காட்டார்—இன்னும் ஒவ்வொரு ஊருக்கு ஒரு பிரிவுதான்! இப்படி பிரிந்துக் கொண்டுபோயிருந்தால் இதன் முடிவுதான் என்ன? வரவர ஐக்கியமாவதைவிட்டு வரவரப் பிரிவுகள் அதிமாகின்றன! வேறு விதத்தில் இதைப்பற்றி யோசிப்போம். இப்படி நாம் உள்ளுக்குள்ளேயே கலியாணம் செய்துக் கொள்ளப் பார்ப்பதினால்தான், பெண்களுக்குத் தக்க பிள்ளைகள் கிடைப்பதில்லை, பிள்ளைகளுக்குத் தக்க பெண்கள் அகப்படுவதில்லை! அன்றியும் நமது மரபுகளெல்லாம் தக்க சந்ததியின்றி அழிந்துபோகின்றன.

சா. அடே பெரிய கிழவா! என்னடா இது? என்னைப் பிரசங்கஞ் செய்வதாகக் கோபித்துவிட்டு, நீ பெரிய பிரசங்கம் செய்கிறுயே! உனக்கு இப்பொழுது நான் பயன் போட வேண்டாமா?

வே. போடு, நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. உன்னைப்போல் அதைக் கொடுக்க மூக்கால் அழமாட்டேன்.

சா. நான் தான் பயன் கொடுக்க மூக்கால் அழுகிறேனே?

வே. அன்றைக்கு அழவில்லையா நீ?

சா. நீ தப்பாகப் பயன் போட்டால்?

த. அடடா! வெங்கடேச முதலியார், சாம்பமூர்த்தி ஐயர் உங்கள் சச்சரவை ஆரம்பிக்காதீர்கள்! அது முடியவே முடியாதே இந்த யுகத்தில்.

சா. இல்லை, பாருங்கள் முதலியார், இந்தக் கிழம் சொல்வதைப் பாருங்கள், நான் செய்யக்கூடாதாம், இவன் மாத்திரம் பிரசங்கம் செய்யலாமாம்!—அதிகமாக!

வே. நான் சொன்னது தப்பு என்று—முதலியாரே—சொல்லட்டும்!

த. நீங்கள் சொல்வது நியாயம்தான்—ஒப்புக்கொள்ளுகிறேன்—ஆயினும் இந்த ஜாதிக் கட்டுப்பாடு என்று ஒன்றிருக்கிறதே—

வே. என்ன ஜாதிக் கட்டுப்பாடு?—நீங்கள் இவ்வாறு கூறுவது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது! பிராம்மணர்கள் நம்மைவிட என்ன மேலானவர்கள்? அவர்கள் ஏன் நம்மை இழிந்தவர்களாக நினைக்கிறார்கள்? நம்மையேன் அவர்களுக்கு சமானமாகப் பாவிக்கக்கூடாது? நம்முடன் உட்கார்ந்து ஏன் சாப்பிடக்கூடாது? என்று இவ்வாறு சண்டை போடுகிறீர்களே, நம்முடைய முதலியார்களுக்குள் எத்தனை உயர்ந்த பிரிவு தாழ்ந்த பிரிவு இருக்கிறது? எத்தனை பெயர் மற்றவர்கள் பார்த்தால் சாப்பிடமாட்டேன் என்கிறார்கள்? மற்றவர்களைத் தாழ்ந்தவர்களாக

நினைக்கிறார்கள் ? நமக்குள்ளிருக்கும் இந்த ஏற்றத் தாழ்ச்சிகளை யெல்லாம் போக்கி சமமாக்குவதன்முன், பிராம்மணர்கள் நம்மை சமானமாகப் பாவிக்கும்படி எந்த முகத்துடன் நாம் கேட்பது ?

த. வெங்கடேச முதலியார், நீங்கள் சொல்வதையெல்லாம் ஒப்புக்கொள்ளுகிறேன்— ஆயினும்—என்னை—இப்பொழுது என்ன செய்யச் சொல்லுகிறீர்கள் ?

வே. முதலில் இந்த விவாகத்தை நடக்கவொட்டாமல் நிறுத்தி வைக்கச் சொல்லுகிறேன், பிறகு உமது குமாரத்தியின் அருங் கல்விக்கும், குணத்திற்கும், அழகிற்கும் ஏற்ற—தக்க வரனைப்பார்த்து—அவன் எந்த ஜாதியானாலும் சரி—கலியாணம் பண்ணிக்கொடுக்கச் சொல்லுகிறேன்—

த. உம்—நான் அண்ணுசாமி முதலியாருக்கு—வாக்குக் கொடுத்து விட்டேனேயென்று யோசிக்கிறேன்.

சா. முதலியார் அவாள், அதைப்பற்றித்தான் கேட்கவேண்டுமென்றிருந்தேன், நீங்கள் யார் வாக்குக் கொடுப்பதற்கு? உம்முடைய பெண் என்ன சின்ன குழந்தையா ? மைனரா ? புத்தியில்லாதவளா ? படிக்காதவளா ? கலியாணம் செய்துக்கொண்டு ஒருவனோடு வாழவேண்டியவள் அவளா நீரா ? இந்தக் கலியாணம் அவளுக்குச் சம்மதிதானு என்று ஒரு வார்த்தை கேட்காமல் நீர் எப்படி ஒப்புக்கொள்ளுகிறீர் ?

த. ஆம்—நீர் கூறுவது நியாயம் தான்—என்ன தப்பிதம் செய்தேன்!—கற்பகத்தைக் கேளாது நான் ஒப்புக்கொண்டது தவறுதான்—

சா. என்னை மன்னிக்கவேணும்—உங்கள் மனமெல்லாம் நான் பிராமின் (Non-brahmin) பார்ட்டியிலும்—எலெக்ஷன்களிலும் இருக்கிறது—இதையெல்லாம் கவனிக்க உங்களுக்கு நேரமேது ?

த. [ஒருவாறு நகைத்து] உம்— வாஸ்தவம்தான் — அவளைக் கேட்டுவிடவேண்டும். அடே போயி !

போயி. [கீழிருந்து] இதோ ஒஸ்தினி!

போயி வருகிறான்.

த. அரே, கிந்த போயி, சின்ன அம்மனி ஒக நிமிஷம் இக்கட ரம்மனி செப்பு. [போயி போகிறான்.]

சா. வெங்கடேசம்—வா—நாம் வெராண்டாவில் இருப்போம். [புறப்படுகின்றனர்.]

த. இருங்கள் இங்கேயே—நீங்களிருந்தால் என்ன? கற்பகம் தான் உங்களிருவரையும் பெரியப்பா சிற்றப்பா என்று அழைக்கின்றாளே—சிறுவயது முதல்.

கற்பகம் வருகிறாள்.

க. அழைத்தீர்களாமே—அப்பா?

த. ஆம் அம்மா, உட்கார். உன்னுடைய பெரியப்பா, சிற்றப்பா எதிரில் நீ உட்காருவதற்கென்ன?

சா. வெ. உட்காரம்மா. [கற்பகம் உட்காருகிறாள்.]

த. கற்பகம்—உன்னை—அண்ணுசாமி முதலியார் பிள்ளைக்குக் கேட்கிறார்களம்மா—உன்—இஷ்டம் எப்படி?-என்ன சும்மா இருக்கிறாய்?—உன் மனதிலிருப்பதை தாராளமாய்ச் சொல்லம்மா—நான் ஒன்றும் கோபித்துக் கொள்ளமாட்டேன்.

சா. சொல் அம்மா, இதில் தவறொன்றுமில்லை.

வெ. இஷ்டமிருந்தால் இஷ்டமென்று சொல், இல்லாவிட்டால்—இல்லையென்று சொல்லிவிடேன்?

[கற்பகம் மௌனமாய்த் தலையைத் திருப்பிக்கொள்கிறாள்.]

த. என்ன அம்மா—உன் பதில் என்ன?

சா. என்ன முதலியார்? வாயைத்திறந்து பதில் சொல்ல வேண்டுமோ இன்னும்—இஷ்டமில்லை யென்று! உமக்கு இன்று கண் மழுங்கியிருக்கிறதா என்ன?

த. சரிதானம்மா—நான் ஒரு தப்பிதம் செய்துவிட்டேன்—உன்னைக் கேளாது, ஆகட்டும்; என்று ஒப்புக்கொண்

டேன்; அதற்குத்தான் என்ன செய்வது என்று யோசிக்கிறேன்.

க. அப்புறம்—உங்கள் இஷ்டம்—

[சரேலென்று கண்களில் நீர்ததும்பக் கீழேபோய்விடுகிருள்.]

சா. தர்மலிங்க முதலியார்—இப்படிப்பட்ட புத்திசாலியான பெண்ணை அண்ணுசாமி முதலியார் மகனுக்கு—தாரை வார்த்து கொடுக்கப் போகிறீரா நீர்?

வெ. அதைவிட—என் மகளாயிருந்தால்—யமனுக்கு—தாரை வார்த்துக் கொடுத்து விடுவேன்!

த. நீங்கள் சொல்லுவது எனக்கு அர்த்தமாகிறது—ஐயோ! என்ன தவறிழைத்தேன் நான்! வெஙகடேச முதலியார், சாம்பமூர்த்தி ஐயர்—உங்களைவிட எனக்கு அன்யோன்ய நண்பர்கள் இல்லை. இந்த தர்மசங்கடத்தினின்றும் நீங்கள்தான் என்னைக் காப்பாற்றவேண்டும், என்பெயர் கெடாதபடி; நானிதுவரையில் ஒருமுறை ஏதாவது வாக்குக் கொடுத்தபின், அதனின்றும் தவறினவனல்ல, எனும் பெயர் பெற்றிருக்கிறேன். ஆகவே நானாக,—அண்ணுசாமி முதலியாரிடம்—இந்தக் கலியாணம் நடவாது என்று சொல்லமாட்டேன்—நீங்கள் எப்பிரயத்னமாவது செய்து, இது நடவாதபடி தடுத்து விடுங்கள்—என்ன வேண்டுமென்றாலும் செய்யுங்கள்—உங்களுக்கு முழு அதிகாரம் கொடுக்கிறேன்.

சா. அவ்வளவு சொன்னது போதும்—நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்—

[சாம்பமூர்த்தி ஐயரும், வெங்கடேச முதலியாரும்—தர்மலிங்க முதலியார் கையைப்பிடித்துக் குலுக்குகின்றனர்.]

காட்சிமுடிகிறது.



## மூன்றாவது காட்சி.

இடம்—ராமகிருஷ்ண ஐயர் வீட்டில் ஓர் அறை.

காலம்—காலை.

*சீதாராமன் படுக்கையின்மீது உறக்கத்தில் புரண்டு கொண்டிருக்கிறான். அவன் தலையில் கட்டு கட்டியிருக்கிறது. அவன் மார்பின்மீது ஒரு மணப் பத்திரிகை யிருக்கின்றது.*

சீ. [உறக்கத்தில்] கற்பகம்! கற்பகம்! இப்படியும்—மோசம் செய்யலாமா? [கண் விழிக்கிறான், அறையிலிருக்கும் கடியாரம் ஏழு அடிக்கிறது; எழுந்திருக்கிறான்] ஆ! ஏழுமணி! அம்மட்டும் கொஞ்சமாவது தூங்கினேனே!—இது கனவா? ஐயோ! இல்லை! இல்லை! இதோ மணப்பத்திரிகை யிருக்கிறது! [அதை யெடுத்து] ஹா! இன்னொருமுறை வாசித்துப் பார்க்கிறேன்! "என் குமாரத்தி சிரஞ்சீவி சௌபாக்கியவதி கற்பகம்மாளுக்கும்"—உம்—"ம-அ-அ-ஸ்ரீ ஆபட்டு, பொழிச்சலூர். அண்ணுசாமி முதலியார், சீமந்த புத்திரர் சி. சூரியப்பிரகாச முதலியாருக்கும்"—[ஒருவிதமாக நகைத்துவிட்டு அதைக்கிழித்தெறியப் பார்க்கிறான்] தேதியைப் பார்த்துவிட்டு கிழித்தெறிவோம்—"ஜுன் மாதம் இருபதாம் தேதி காலை 9 மணிக்குமேல்" [அதைக் கிழித்தெறிந்து]-என் தலை சுழல்கின்றது! மறுபடியும் எனக்கு மூளைஜ்வரம் வரும்போலிருக்கிறதே! என் தந்தை தாயர் பொருட்டாவது நான் பிழைத்திருக்க வேண்டுமே!—எனக்குப் பயித்தியம் பிடித்தால் அவர்கள் கதிஎன்னவாகும்!-தகப்பனார் கூறுவது வாஸ்தவம்தான்— இந்த சூத்திரர்களை நம்பவே கூடாது!—அதிலும் முதலியார்களை—அதிலும் அவர்கள் பெண்களை! கற்பகம்! [படுக்கையிற் படுத்து தேம்பி அழுகிறான்] போயும் போயும் அந்த மடயனை மணக்க எப்படி சம்மதித்தாள்! என்னவென்றாலும் அவளுடைய தகப்பனார் மாத்திரம் பொய் உரைக்க மாட்டார். நமது முன்னோர்கள் கூறியது உண்மைதான். சீ! இவ்வுலகத்தில் ஒரு ஸ்திரீயையும் நம்பலாகாது—என் தாயாரைத் தவிர!—கற்பகம்! கற்பகம்! நீ உன் வார்த்

தையைக் காப்பாற்றாவிட்டாலும் நான் என் வார்த்தையைக் காப்பாற்றுகிறேன்!—அப்படியல்ல! இதுதான் தக்க யோசனை! என் தாயாரின் மனோபீஷ்டத்தையாவது நிறைவேற்றி—பிறகு இறக்கிறேன்!—யாரடா அங்கே? பாக்ஷியம்!

[மேஜையின் மீதிருக்கும் மணியை அடிக்கிறான்]

பா. [உள்ளிருந்து] வந்தேன்!

பாக்ஷியம் வருகிறான்.

கூப்பிட்டைங்களா?

சீ. பாக்ஷியம்—சுடச்சுட! ஸ்டிராங் கப் (Strong Cup) காபி—ஒருகப் கொண்டுவா! சீக்கிரம்.

பா. நீங்க காபி சாப்பிடுகிறதில்லையே!

சீ. அடே! அதனப்பிரசங்கி—சொன்னபடிசெய்—சீக்கிரம் கொண்டுவா.

பா. இன்னும பல் விளக்கவில்லையே!

சீ. எல்லாம் விளக்கியாயிற்று? கொண்டுவா சீக்கிரம்! [பாக்ஷியம் போகிறான்.] நானும் பொய்பேசக் கற்றுக்கொண்டேன்!—நான் மாத்திரம் ஏன் பொய் பேசக்கூடாது!

டாக்டர் பேரைரா வருகிறார்.

வாருங்கள் டாக்டர்! வாருங்கள்! உட்காருங்கள்.

பே. உட்கார சாவகாசமில்லை—நான் சீக்கிரம் போகவேண்டும்-[தலைக்கட்டை யவிழ்த்து] ஏறக்குறைய எல்லாம் ஆறிவிட்டது! [வேறுகட்டைக் கட்டுகிறார். பாக்ஷியம் ஒரு வெள்ளிப் பாத்திரத்தில் காபிகொண்டுவந்துக் கொடுக்க அதை சீதாராமன் சாப்பிடுகிறான்] நாளைக்கு கட்டையவிழ்த்து விடலாம். இனி நான் வரவேண்டியதில்லை. ஒரு தைலம் அனுப்புகிறேன். அதை மாத்திரம் தடவிக்கொண்டு வாருங்கள்-குட்மார்னிங்!-என்ன கை நடுக்குகிறாற் போலிருக்கிறதே?

சீ. அதெல்லாம் ஒன்றுமில்லை டாக்டர்! சுடச்சுட காபி சாப்பிட்டேனே அது தான், வேறொன்று மில்லை—

டாக்டர்—ஒருவார்த்தை—பாக்கியம் நீ போடா [பாக்கியம் போகிறான்.] டாக்டர்! நான் கேட்கும் கேள்விக்கு உண்மையில் பதில் சொல்லவேண்டும். என் தாயார் இனி பிழைப்பது கடினம் என்று நான் நன்றாய் அறிவேன்—அவர்கள் இன்னும் எத்தனை நாள் ஜீவித்திருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்?

பே. இதைப்பற்றி நாங்கள் சொல்லக்கூடாது என்று ஒரு கோட்பாடுண்டு.

சீ. பெரிதல்ல—எனக்குமாத்திரம் சொல்லுங்கள்—நான் வேறு யாருக்கும் சொல்வதில்லை.

பே. இன்னும் பத்து பதினைந்து நாட்களுக்குமேல் தாங்குவது கடினம்—காலில் கொஞ்சம் வீக்கமும் கண்டிருக்கிறது.

சீ. சரி!—நீங்கள் வாருங்கள்—

பே. இதை அவர்களிடம் கூறுதீர்—இதைக் கேட்டால் பத்து நாளிருக்கிறது இன்றைக்கே போய்விட்டாலும் போய்விடும்.

சீ. இல்லை, இல்லை! நான் சொல்லமாட்டேன். குட்மார்னிங்!

பே. குட்மார்னிங்! [போகிறார்.]

சீ. இன்றைக்கென்ன தேதி? பதினைந்தோ?—இன்னும் ஐந்து நாளிருக்கிறது—நான்கு நாள் கலியாணம்—உம்! கலியாணம்!—அப்பா! அப்பா!—நம்முடைய ஏற்பாட்டிற்கு சரியாயிருக்கும்.

[இரண்டு வேலைக்காரிகள் சக்கரம் வைத்த நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் மரகதம்மாளைத் தூக்கிக் கொண்டு வருகின்றனர்]

அம்மா! உங்களுக்கேன் இன்னும் இந்த கஷ்டம்? எனக்கு உடம்பெல்லாம் சவுக்கியமாய் விட்டது; நான் வருகிறேன் உங்கள் அறைக்கு வேண்டிய பொழுது.

ம. கண்ணே!—டாக்டர் வந்து பார்த்து விட்டுப்போனாரா?

சீ. ஆமாம், இப்பொழுதுதான் போனார்.

ம என்ன சொன்னார்?

சீ. இந்தக்கட்டைக்கூட நாளைக்கு அவிழ்த்து விடலாம்—எல்லாம் சரியாகி விட்டதென்றார்.

ம. கண்ணே, உன்னை ஒன்று நான் கேட்கப்போகிறேன், அதற்கு நீ என் மனம் குளிரும்படியான பதில் சொல்ல வேண்டும். இன்று காலை டாக்டர் என்னைப்பார்த்த பொழுது அவர் முகம் ஒரு வாறு மாறியது—அதனால் நான் இன்னும் சில தினங்களுக்குமேல் உயிருடன் இருக்க மாட்டேன்—என்று நினைக்கிறேன்-நான் இறந்து போகு முன்—உனக்குக் கலியாணம் பண்ணிப்பார்க்கவேண்டு மென்னும் ஆசை யொன்றிருக்கிறது—அதை நீ பூர்த்தி செய்வாயா? [அவன் முகவாய்க்கட்டையைப்பற்றி]

சீ. உம்—கலியாணம் தானே பண்ணிக்கொள்ளவேண்டும்? அப்படியே ஆகட்டுமம்மா!

ம. என் வயிற்றில் பாலை வார்த்தாய்! கண்ணே! இது விஷய மாக உன் தகப்பனாருடன் நேற்றிரவு பேசிக்கொண்டி ருந்தேன். நீ ஏதோ ஒரு சூத்திரப் பெண்ணைக் கலி யாணம் செய்துக்கொள்ள விரும்புவதாக எனக்கு ரகசி யமாய்த் தெரிவித்தார். முற் காலத்தில் பிராம்மணர்கள் சூத்திர ஸ்திரீகளை விவாகம் புரிந்ததாக நான் படித்திருக் கிறேன். நாமும் ஏன் தற்காலம் செய்யலாகாது? உன் னிஷ்டப்படியே செய், எனக்கொரு ஆட்சேபணையு மில்லை, எப்படியாவது நான் கண்ணை மூடிக்கொள்ளு முன், உனக்குகொரு கலியாணம் செய்து பார்க்கவேண்டு மென்பது தான் என் கோரிக்கை.

சீ. அடடா! இப்படியா இருந்தது! [ஒருவாறு நகைத்து] உம்! அம்மா, எனக்குக் கலியாணம் பண்ணிப்பார்க்கவேண்டு மென்பதுதானே உமது கோரிக்கை? யாரை மணந்தா லும் சரிதானே?

ம. உனக்கு இஷ்டமான பெண்ணைக் கலியாணம் செய்து கொள், உன் பெண்சாதியுடன் வாழப்போகிறவன் நீ—உன்னுடைய இஷ்டத்தையல்லவோ நாங்கள் பார்க்க வேண்டும்.

சீ. ஐயோ! இந்த புத்தி, ஆடவருக்கில்லாமலிருக்கிறதே! அம்மா, நான் நேற்றிரவு முழுவதும் இதைப்பற்றி யோசித்துப்பார்த்தேன்—என்ன வென்றாலும் பிராம்மணப் பெண்கள் பிராம்மணப் பெண்கள் தான்—சூத்திரப் பெண்கள் சூத்திரப்பெண்கள் தான்! இந்த சூத்திரப் பெண்களை—நம்பக்கூடாதம்மா!—நான் ஒரு பிராம்மணப் பெண்ணையே கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்தேன்—ஆயினும் ஒரு வேண்டுகோள்-கலியாணம் மாத்திரம் ஒருவாரத்திற்குள் நான் குறிக்கும் தினமே ஆகவேண்டும்.

ம. அதற்கென்ன? அப்படியே ஆகட்டும்—ஆயினும் ஒரு வாரத்திற்குள்—சரியான பெண் குதிரவேண்டுமே? நம்முடைய சத்யநாராயண ஐயர் தினம் வந்து என்னை நிர்ப்பந்திக்கிறார்—அவருடைய பெண்ணை உனக்குக் கட்டிக் கொள்ளும்படி—அதற்கென்ன சொல்லுகிறாய்?

சீ. ஆம் அம்மா! அவள்தான்—சரியான பெண்—நானிருக்கும் ஸ்திதியில்!—இதை முடிவு செய்து விடுங்கள்—எப்படியும் சத்யநாராயண ஐயர்—இன்று வருவார்! கலியாணம்மாத்திரம் இந்த மாதம் 20 தேதி யிருக்கவேண்டும்!

ம. சந்தோஷம்! ஆயினும் அந்தநாள் பெண் வீட்டாருக்கு-சரிப்படுமோ என்னவோ?

சீ. எல்லாம் சரிப்படும்!—அவர்களுக்கு எந்த நாளும் சரிப்படும்—இல்லாவிட்டால் இந்த விவாகத்திற்கு நான் ஒப்புக்கொள்ளமாட்டேன் என்று சொல்லும்!

ராமகிருஷ்ண ஐயர் ஒரு மணப் பத்திரிக்கையுடன் விரைந்து வருகிறார்.

ரா. இது என்னடா இது? சீதாராமா! கற்பகத்துக்கு—
[மரகதம்மாள் அங்கிருப்பதைப் பார்த்து
திடீரென்று அசைவற்று நிற்கிறார்.]

ம. வாருங்கள்!—சரியான சமயத்திற்கு வந்தீர்கள்? உங்களைத் தான் பார்க்கவேண்டுமென்றிருந்தேன்—சீதாராமன் என் வேண்டுகோளுக்கிரங்கி கலியாணம் செய்துகொள்ள ஒப்புக்கொண்டான்—சத்யநாராயண ஐயர் பெண்ணை—

ரா. யாரை!

ம. நம்முடைய சத்யநாராயண ஐயர் பெண்ணை—அவரும் தினம் வந்து என்னைத் தொந்திரவு செய்து கொண்டிருக்கிறார்; இன்றைக்கு அவர் வந்தவுடன் இதை முடிவு செய்து விடுவோம்—கலியாணம் மாத்திரம் சீக்கிரம் ஆக வேண்டுமென்கிறான்—எனக்கும் அப்படித்தான் தோற்றுகிறது. நான் இன்னும் எத்தனைநாள் இருக்கப்போகிறேனோ? [கண்ணைத் துடைத்துக்கொண்டு] சீக்கிரம் இந்த மாதம் 20 தேதியே வைத்துக்கொள்ளவேண்டுமென்கிறான்.

ரா. சீதாராமா!—இதென்னசமாசாரம்?

சீ. அப்பா!—என்னை ஒன்றும் கேளாதீர்—எனக்கு மறுபடியும் மூளைஜ்வரம் வராதிருக்க வேண்டுமென்றால்—உடனே அம்மா சொல்லுகிறபடி ஏற்பாடு செய்து விடும்! அந்த காகிதத்தை என்னிடம் கொடும். [அதை வாங்கிப்பார்த்து] லக்னம் ஒன்பது மணிக்கு வைத்துக்கொள்ளும்! சத்ய நாராயண ஐயர் இன்றைக்கு எப்படியும் வருவார்—

சத். [உள்ளிருந்து] ஐயரவாள்! நான் வரலாமோ?

சத்தியநாராயண ஐயர் வருகிறார்.

நம்முடைய சீதாராமனுக்கு உடம்பு எப்படியிருக்கிறது? டாக்டர் எல்லாம் தாவளையாகி விட்டதென்று சொன்னார்—வழியில் பார்த்தபொழுது.

சீ. [முகத்தைத் திருப்பிக்கொண்டு] எல்லாம் தாவளையாகி விட்டது.

[சீதாராமன் மணப்பத்திரிகையை மறைத்து வைத்துக்கொள்ளுகிறன்.]

ம. எல்லாம் சரியாக வருகிறது! உன்னுடன் தான் பேச வேண்டுமென்றிருந்தேன்—சரியான சமயத்திற்கு நீயும் வந்தாய்! உன்னிஷ்டப்படியே உன் பெண்ணை சீதாராமனுக்கு, கலியாணம் பண்ணிக்கொள்ளுகிறேம்—சீதாராமனும் ஒப்புக்கொண்டான்.

சத். நிரம்பசந்தோஷம்! ஏன் மாப்பிள்ளை? இனிமேலாவது நான் மாப்பிள்ளை என்று கூப்பிடலாமோ யில்லையோ?

சீ. உங்களிஷ்டத்திற்கு—என்ன குறைவு.

ம. ஆனல்—ஒன்று—நாராயணு, கலியாணம் மாத்திரம் சீக்கிரம் வைத்துக்கொள்ளவேண்டும்—இந்த மாசம் இருபதாம் தேதியே.

சத். ஆம் அதற்கென்ன தடை? முன்பே நான் நாள் பார்த்து வைத்திருக்கிறேன்—இந்த மாசம் இருபதாம் தேதி மிகவும் உத்கிருஷ்டமான தினம்.

சீ. பார்த்தீர்களா அம்மா, நான் முன்பே சொல்லவில்லை.

சத். காலை 9 மணிக்கு திவ்வியமான லக்னம்.

சீ. ஆம்—சரியான லக்னம்.

சத். அப்பொழுது நான் போய்—எல்லா வற்றிற்கும்—ஏற்பாடு செய்யவேண்டும்—இடையில் கொஞ்சநாள் தானிருக்கிறது பாருங்கள்.

சீ. ஆமாம்—சீக்கிரம்—புறப்படுங்கள்.

சத். ஒருசமாசாரம்—மாப்பிள்ளைக்கு மூவாயிரம் ரூபாயில் ஒரு கடுக்கன் வாங்கலாமென்றிருக்கிறேன்—அவராகப் போய் பார்த்துவாங்கிக்கொள்கிறரா?

சீ. அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்! நகை கிகைபோடுவதென்றல்—இந்த கலியாணமே வேண்டாம் என்பேன்!

சத். இல்லை—மாப்பிள்ளை—நீ கோபித்துக்கொள்ளாதே! நீ சீமைக்குப் போய் வந்தவன் என்பதை மறந்தேன்.

சீ. அம்மா-அப்பா, டாக்டர் நான் நிம்மதியாயிருக்கவேண்டு மென்று சொல்லியிருக்கிறார்—நீங்கள் எல்லாம் போய் ஏற்பாடு செய்யுங்கள்—

சத். ஆம் ஆம்! கலியாணத்திற்குள்-உடம்பு—எல்லாம்—இன் னும் நன்றாய்த் தேறவேண்டாமா? வாருங்கள் போவோம் அறையை விட்டு—யார் அங்கே வேலைக்காரி—

வேலைக்காரிகள் வருகிறார்கள்.

அம்மா நாற்காலியை அப்படியே தூக்கிக்கொண்டு வாருங்கள்.

[தானும் அதைப்பிடித்து மரகதம்மாளை அறைக்கு வெளியே கொண்டு போகி றார்.]

ரா. இதென்ன விபரீதம்! சீதாராமா!

சீ. அப்பா, நான் உயிருடன் இருக்கவேண்டுமென்றிருந் தால்—என்னை ஒன்றும் கேளாது—நான் சொன்னபடி ஏற்பாடு செய்யும்—20 ஆம் தேதி—9 மணிக்கெல்லாம்!

ரா. சரி! நீ பிடிவாதம் பிடித்தால்!—பரமேஸ்வரன்தான் காப்பாற்றவேண்டும்! [மெல்ல போகிறார்.]

[அவர் போனவுடன் சீதாராமன் எழுந்திருந்து தன் தலையணையின் கீழ் ஒளித்து வைத் திருந்த மண ஓலையை, ஸ்பிரிட்லாம்பில் கொளுத்தப்பார்த்து]

சீ. சீச்சீ!—தவறு! இதற்கு வேறு வேலை இருக்கிறது—

[ஒரு விதமாய் நகைக்கிறான்.]

காட்சி முடிகிறது.



## நான்காவது காட்சி

இடம்—தேனும்பேட்டையில் ஹார்டிகல்சரல் தோட்டத்தில் ஒரு மூலை; ஒரு பக்கமாக நான்கு பெயர் உட்காரக் கூடிய விசிப்பலகை இருக்கிறது

**சாம்பமூர்த்தி ஐயர் சீதாராமனை அழைத்துக்கொண்டு வருகிறார்.**

சா. சீதாராமா, இப்படி சற்று உட்காருவோம்வா, உனக்கிருக்கும் பலஹீனத்தில் நீ அதிகமாய் நடக்கலாகாது. [இருவரும் உட்காருகின்றனர்.] என்ன சீதாராமா, நீ இதையெல்லாம் எனக்கு முன்பே தெரிவித்திருக்கலாகாதா ?

சீ. எனக்கு சந்தர்ப்பம் ஒன்றும் வாய்க்காமற் போயிற்று.

சா. அதுவும் வாஸ்தவம்தான்; உன் பேரிலும் தவறில்லை—இதோ பார்—இவ்வுலகத்தில்— இரண்டு—சிநேகிதர்களுக்குள்—சண்டை சச்சரவு வருவதெல்லாம்—ஒருவருக்கொருவர் தங்கள் மனதிலிருப்பதை வெளியிடாதிருப்பதே ! மனதிலிருப்பதை மறைத்து வைக்காமல் வெளிப்படையாகக் கலந்துபேசுவார்களாயின், உலகில் நூற்றில் தொண்ணூற்றென்பது மனஸ்தாபங்கள் அடியுடன் அற்றுப்போம்—இந்த இரண்டு மூன்று நாட்களாக எனக்கும்—உன் பெரியமாமா இருக்கிறானே—பெரியகிழம் அவனுக்கும் ஓயாத சண்டை—

சீ. உங்களுக்குள்—என்ன சண்டை ?

சா. வேறென்ன ? அவன் உன் பேரில் தான் தப்பிதம் என்றான்—நான் கற்பகத்தின் பேரில் தான் தப்பிதம் என்றேன். ஆயினும் அவன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம், நான் நடந்த உண்மையை யறியாதபடியால் உன்பட்சம் எடுத்துப்பேச சக்தியற்றவனாயிருந்தேன். இப்பொழுது நீ விவரமாய்க் கூறின பிறகுதான் தெரிந்தது. அதோ அவன் வருகிறான் போலிருக்கிறது. வரட்டுமிங்கே—அவன் வாயை அடக்குகிறேன்!

தூரத்தில் வேங்கடேச முதலியார் கற்பகத்தை அழைத்துக்கொண்டு வருகிறார்.

சீ. யார் அது, பெரியமாமாவுடன் கூட? கற்பகம்!—என்ன இளைத்துப் போயிருக்கிறாள்! சின்னமாமா!—நான் போகிறேன். இங்கிருக்க எனக்கிஷ்டமில்லை! அவளுடன் பேச எனக்கிஷ்டமில்லை—பார்க்கவும் என் மனம் பொறுக்கவில்லை—

சா. சீச்சீ—உட்கார்—நீ ஒரு ஆண்பிள்ளையல்ல? உட்கார், உனக்கென்னபயம்? அன்றியும் இப்பொழுது உன்னிடமிருந்து உண்மையை யறிந்தபின்—உன்மீது குற்றமில்லை என்று எனக்குத்தோன்றுவதுபோல்—அவள் சமாசாரத்தையும் கேட்டால்—அவள்மீதும் குற்றமில்லை யென்று—நமக்கு—தோன்றினாலும் தோன்றும்.

[சீதாராமன் உட்காருகிறான் பலகையின் ஓரமாக.]

வேங்கடேச முதலியார் கற்பகத்தை அழைத்துக்கொண்டு அருகில் வருகிறார்.

வே. நீவா அம்மா—உனக்கென்னபயம்? உன் பேரில் ஒரு தப்புமில்லை—யென்று எனக்கு முன்பே தெரியும். சமாசாரத்தை யெல்லாம் விசாரித்தறியாமல்—இந்த சின்னகிழம் உன் பேரில் தப்பு என்று எப்படிச் சொல்வான்! நேரில் கேட்கிறேன்! [விசிப்பலகையின் நடுவில் போய் உட்காருகிறார்] நீயும் உட்காரம்மா—உனக்கிருக்கும் பலஹீனத்தில் நீ அதிகமாக நடக்கக்கூடாது.

[கற்பகம் மௌனமாய் தலைகுனிந்து நிற்கிறாள்]

சீ. நான் உட்கார்ந்திருக்கும்—பென்சில்—தான் உட்காரக்கூடாதென்றிருக்கிறாற் போலிருக்கிறது—நான் நிற்கிறேன்—உட்காரச் சொல்லுங்கள்.

சா. இதென்னம்மா இது? நீ இந்தப்பக்கம் மூலையில் உட்காரேன்.

க. [மனவருத்தத்துடன்] அவர்—எனக்காக—நிற்கவேண்டியதில்லை—அவரை உட்காரச்சொல்லுங்கள் முன்பு.

வே. என்னடா! சீதாராமா! சட்! உட்கார் [சீதாராமன் உட்காருகிறான்]

சா. நீ இப்படி உட்காரம்மா! [கற்பகம் உட்கார்ந்து முகத்தைத் திருப்பிக்கொள்ளுகிறாள்] ஏனடா! பெரிய கிழம்! இரண்டு நாட்களாக என்னுடன் சண்டை போட்டுக்கொண்டிருந்தாயே! என்னடா சீதாராமன் பேரில் தப்பு சொல்?

வே. தப்பேயில்லை! ஒரு பெண்ணிடம் உன்மீதே காதல் கொண்டிருக்கிறேன்—என் உயிர் போனாலும் உன்னையன்றி வேறொரு பெண்ணை மணம்புரிவதில்லை என்று பிரமாணம் செய்துவிட்டு—மற்றொருபெண்ணை விவாகம் புரிவது—தப்பில்லை! நிரம்ப சரி!

சா. கொஞ்சம் நிறுத்து! அவசரப்படாதே! அந்தப் பெண் மாத்திரம்—உம்மை யன்றி வேறொருபுருஷனை நான் கலியாணம் செய்துகொள்வதில்லை என்று பிரமாணம் செய்துகொடுத்து விட்டு வேறொரு புருஷனைக் கலியாணம் செய்துகொள்ள இசையலாமோ?

வே. அப்படிகேள்! கேட்டாலல்லவோ விவஹாரம் பிறக்கும்! அந்தப்பெண் வேறொரு புருஷனை மணக்க இசைந்தாள் என்று யார் உனக்குச் சொன்னது?

சா. அவள்—இசையாவிட்டால்—அவள் அனுமதியின்றி கலியாணப்பத்திரிகை அச்சிட்டு அனுப்பினார்களோ—சீதாராமனுக்கொன்று—அவன் தகப்பனுக்கொன்று!

க. [கண்களில் நீர்ததும்ப] பெரியப்பா! நான் அப்பொழுதே சொல்லவில்லையா உம்மிடம்—இம்மாதிரி—ஏதோ சூது நடந்திருக்கவேண்டுமென்று?

வே. நீ கொஞ்சம் பொறு அம்மா!—ஏண்டாகிழவா! உனக்கு எங்கேயடா போச்சுது புத்தி? வரவர நிரம்ப கிழவனாகிப் போகிறாய் நீ! யாரடா அந்த கல்லியாணப் பத்திரிகை அனுப்பியது? அவள் தகப்பனார் ஏதாவது அனுப்பினாரா?

சா. என்ன சீதாராமா? யார் அனுப்பியது அந்தப்பத்திரிகை?

சீ. [திகைத்திட்டு] உம்—வாஸ்தவம்தான்! எங்களுக்குக் கிடைத்தப் பத்திரிகை அண்ணுசாமி முதலியார் அனுப்பியது.

க. ஆயிரம்புளுகு—அண்ணுசாமி முதலியார்!

வே. நன்றாய்ச் சொன்னாயம்மா! அதிருக்கட்டும் சீதாராமா, நீ நிரம்ப படித்தவன், ஐ. சி. எஸ். பரிட்சையில் எல்லோரையும் தோற்கடித்து முதலாகத் தேறியிருக்கிறாய், தெரியுமெனக்கு—நான் ஒன்றும் படிக்காத ஒரு டாக்டர் தான்—அதுவும் சரியாகவும் பிராக்டிஸ் (practise) பண்ணுகிறதில்லை!—இருந்தபோதிலும் உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன்—நீ என் மீது கோபித்துக்கொள்ளக்கூடாது; நான் மைசூர்மஹாராஜாவின் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன் என்று ஒரு பத்திரிகை அனுப்பினால், அன்றைத்தினம் மைசூர் மஹாராஜாவின் அரண்மனைக்குப்போய் உட்கார்ந்து கொள்வாய்போலும்? அது வாஸ்தவமா என்று விசாரிக்க வேண்டாமா? கற்பகத்தின் தகப்பனார் மைசூர் மஹாராஜாவுக்குச் சமானம் என்று சொல்லவில்லை—ஆயினும் இதை நம்பு முன் பெண் வீட்டு கலியாணப் பத்திரிகை வந்ததா என்று விசாரிக்கவேண்டாமா?

சீ. [பரபரப்புடன்] ஆனால் நாளைய நன்றைக்கு—கலியாணமில்லை?

வே. இருக்கிறது! நாளையநன்றைக்கு—உனக்கும்—

க சத்யநாராயண ஐயர் பெண்ணுக்கும்!

சீ. பெரியமாமா! வாஸ்தவமாகவா சொல்லுகிறீர்கள்?

வே. என்ன சீதாராமா! இதில் மாத்திரம் முண்டமாயிருக்கிறாய்? நாளைய நன்று தர்மலிங்க முதலியார் பெண்ணுக்கு கலியாணம்—இன்னும் பத்திரிகைகள்கூட—அவள் தகப்பனார் போடவில்லை! வீட்டில் பந்தக்காலும் நடவில்லை—நீ தான் அதே தெருவிலிருக்கிறாயே மூன்றாவது வீட்டில்—அந்தப் பத்திரிகையைத் தன் உத்தரவின்றி அச்சிட்டதற்காக அண்ணுசாமி முதலியார் மீது

கோபித்துக்கொண்டு அதை ரத்து செய்து விட்டார் தர்மலிங்க முதலியார் உடனே

சீ. எல்லா ஏற்பாடும் செய்தாய் விட்டது என்று சொன்னாரே ?

வே. யார்—நம்முடைய அசத்திய நாராயண ஐயரோ?

சீ. ஆம்.

க, பெரியப்பா ! நான் சந்தேகித்தபடியே இருக்கின்றது பார்த்தீரா ?

வே. ஆமாம்மா ! நேரில் பேசும் பொழுதுதானே உண்மை வெளியாகிறது ! ஒவ்வொருவரும் — மனதில்—அடக்கி வைத்துக்கொண்டிருந்தால் என்ன பிரயோஜனம் ?

க. நான்தான்—மூன்று கடிதங்கள் எழுதினேனே !

சீ. எனக்கு ஒரு கடிதமும் வந்து சேரவில்லை.

க. ஒன்றிற்கு இரண்டு கடிதம் தபாலில் போட்டேன்—நடந்த உண்மையெல்லாம் கூறி—பதில் வராதிருக்கவே—ஒருகடிதம் நேராக திருநாவுக்கரசு மூலமாக அனுப்பினேனே !

சீ. எனக்கு—ஒன்றும் வந்து சேரவில்லை—சத்தியமாக—பெரிய மாமா—கற்பகத்தை என்வார்த்தையை நம்பச் சொல்லுங்கள்.

வே. ஆமாம் அம்மா—நீ அனுப்பினாய் வாஸ்தவம் தான்—அவைகள் சீதாராமனிடம் போய்ச் சேர்ந்தது என்பது என்ன நிச்சயம் ? இவ்வளவு தூரம் சூது செய்தவர்கள் அதையும் ஏன் செய்திருக்கக் கூடாது ?

க. ஆம் பெரியப்பா ! இப்பொழுது எனக்கு ஞாபகம் வருகிறது. அவர் கையில் அந்தக் கடிதத்தை கொடுத்தாயா என்று திருநாவுக்கரசைக் கேட்டபொழுது அவன்——அவர் உடம்பு அசௌக்கியமாயிருக்கிறார்—அவரிடம் நான் கொடுக்கிறேன் என்று சொல்லி—சத்தியநாராயண ஐயர் வாங்கிக்கொண்டதாகச் சொன்னான்.

சீ. சரிதான்! அவர் வேலைதான் இதெல்லாம்! அந்தக்கடி தங்களில் என்ன எழுதி இருந்தது என்று கேட்கலாமா நான்—மாமா?

க. பெரியப்பா, உங்களுக்குத் தெரியாத ரகசியம் ஒன்றும் இல்லை; அண்ணுசாமி முதலியார் அச்சிட்ட மணப்பத்திரி கையைப் பார்த்து ஒருவேளை என்மீது சந்தேகப்பட வேண்டாம், இந்தக்கலியாணம் இருபதாம் தேதி நடக்கப் போகிறதில்லை—எது எப்படியாயினும் நான் என் வாக்கி னின்றும் தவறமாட்டேன்—அப்படி ஏதாவது நிர்ப்பந் திக்கப்பட்டால் என் உயிரை விட்டாலும் விடுவேனே யொழிய—உம்மை யன்றி வேறொரு புருஷனைக் கலியா ணம் செய்துகொள்ளேன்—என்று எழுதி யிருந்தேன்.

சீ. ஐயோ! என்ன தப்பிதம் செய்தேன்! அப்பத்திரிகையை நம்பி—பயித்தியம் பிடித்தவனாய்—நான் சத்யநாராயண ஐயர் பெண்ணைக்கலியாணம் செய்துகொள்ள இசைந் தேனே!

க. எனக்குக் கொடுத்த பிரமாணத்தினை மறந்து!—

சீ. ஆம் ஆம்! தவறு! தவறு! அந்த உண்மையையும் நீங்கள் எல்லாம் அறியவேண்டியதுதான். என் தாயார் இன்னும் பத்துநாளைக்கு மேல் தாங்கமாட்டார்கள் என்று வயித் தியர் கைவிட்டபோது—அவர்கள் இறப்பதன் முன் எனக்குக் கலியாணம் செய்து பார்க்கவேண்டு மென்று தன் கடைசிவேண்டு கோளாக என்னை வேண்டியபோது— என் கற்பகத்தின் மனதைத் திர்ப்தி செய்ய முடியாத பாபியானலும், என் தாயார் வேண்டுகோளையாவது முடித்து—கலியாணமானவுடன்—அவர்கள் இறக்கும் தினம்—நானும் இறக்கவேண்டுமென்று தீர்மானித்தேன்— இது சத்தியம்! என் வார்த்தையை—நீங்கள் எல்லோரும் நம்பும்படி வேண்டுகிறேன்—

[முகத்தைத்திருப்பிக் கொண்டு துக்கிக் கிருன்.]

க. என் விதியிவ்வாறு இருந்ததுபோலும்!

[மற்றொரு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு துக்கிக்கிறாள்.]

சா. அடே கிழவா. [கண்ணால் சைகை செய்கிறார்.]

சீ. [கண்களில் நீருடன்] பெரியமாமா கற்பகம்—என்னை மன்னித்ததாக ஒரு வார்த்தை சொல்லச் சொல்லுங்களேன்!

வே. அப்பா! உங்கள் சமாசாரத்தில் நான் பிரவேசிக்கமாட்டேன் அப்பா—ஏனடா சின்ன கிழம், நாம் இதில் எல்லாம் பிரவேசிக்கலாமா?

சா. சீச்சீ! அது தவறு—அவர்கள்பாடு.

வே. அடேகிழவா! அதோ கவர்னர் ப்ளவர் ஷோ (Flower Show) பார்க்க வந்து விட்டார்போலிருக்கிறது—காட் சேவ்திகிங் (God Save the King) வாசிக்கிறார்கள்பார்—நான்போய் அவருக்கு என் பிரைஸ் ரோஜாச் செடிகளைக் காட்டவேண்டும்.

சா. ஓ! நான், என் ஸ்பெஷல் பிரைஸ் குண்டுமல்லி செடியைக் காட்டமாட்டேனா!

[இருவரும் விரைந்து போகிறார்கள்.]

சீ. கண்ணே!—கற்பகம்!—என்ன தப்பிதம் செய்தேன் நான்! என்னை மன்னிப்பாய் என்று கேட்கவும்—என்நா எழவில்லையே!

க. கண்ணைத்துடைத்துக்கொள்ளுங்கள்—யாராவது பார்க்கப் போகிறார்கள்!—மன்னித்தேன்.

சீ. அவ்வளவு போதும்! நான் பாக்கியசாலிதான்! [அவள் கரத்தைப்பற்றுகிறான்.] கண்ணே! போனதெல்லாம் போகட்டும்-இப்பொழுது நான் என்ன செய்யவேண்டும் சொல், அப்படியே செய்கிறேன்.

க. உமக்கு—எது யுக்தமெனத்தோற்றுகிறதோ—அப்படிச் செய்யும்.

சீ. கண்ணே! கற்பகம்! இன்னும் என்மீது கோபமா?

க. அப்படியல்ல—வாஸ்தவமாகச் சொல்லுகிறேன்—உங்கள் தாயார் இந்த ஸ்திதியிலிருக்கும் பொழுது அவர்கள் மனதை நீங்கள் புண்படுத்துவதா என்று யோசிக்கிறேன்.

சீ. கற்பகம்! அதைச்சொல்லமறந்தேனே—என் தாயார் நான் உன்னை மணப்பதற்கு ஆட்சேபனையில்லை என்று என்னிடம் நேராகக் கூறினார்கள்.

க. வாஸ்தவமாகவா!

சீ. சத்தியமாக—என் வார்த்தையை நம்பு; நீ யாரோ ஒரு சூத்திரப்பெண்ணை விவாகம் செய்துகொள்ள விரும்புகிறாயாமே, அப்படி உனக்கு இச்சை யிருக்குமாயின், எனக்கு ஆட்சேபனையில்லை, எப்படியாவது நான் இறப்பதன்முன் உனக்குக் கலியாணம் செய்து வைத்துப் பார்க்கவேண்டுமென்பதுதான் என்கோரிக்கை, என்று கூறினார்கள்.

க. அம்மட்டும் சந்தோஷம்—ஆயினும் உம்முடைய தகப்பனார் சம்மதிக்கவேண்டுமே?

சீ. இந்தக்கலியாணம்—ஒரு இழவு—வந்திராவிட்டால் சம்மதித்திருப்பாரென்றே நினைக்கிறேன்! இது அல்லவோ ஒன்று இடையில் வந்து சேர்ந்தது! ஆத்திரப்பட்டு என்ன தப்பிதம் செய்தேன் நான்! ஆராய்ந்து பாராமல் அவசரப்பட்டு ஒரு காரியத்தைச் செய்வதின் பயனை அனுபவிக்கிறேன்! ஒரு முறை வாக்குக் கொடுத்தபின் அவர் பின் வாங்கமாட்டார், இந்த தர்மசங்கடத்திற்கு என்ன செய்வது?

க. என் வரைக்கும்—இன்ன செய்வதென்று நான் யோசிக்க வேண்டியதில்லை—உங்களை இன்று நான் சந்திக்கா விட்டால் நான் என்ன செய்யத் தீர்மானித்திருந்தேனோ—அதைச் செய்து—முடித்து விடுவேன்; உங்களுக்காகத் தான்—யோசிக்கிறேன்.

சீ. கண்ணே! கற்பகம், நீ மரித்தால் நான் அரைக்ஷணம் அதன் பிறகு உயிர் வாழ்வேன் என்று நினைக்கிறாயா?

க. அதற்காகத்தான்—யோசித்துப்பார்க்கிறேன் — எனக்கு ஒருவழியும் புலப்படவில்லை.

சீ. கற்பகம்—நாம் டெனிஸ் பந்தயங்களுக்குப் போகும் போது—முன்பெல்லாம்—இன்றைக்கு எப்படியும் ஜெயிப்போம் என்று எனக்குத் தோன்றுகிறது, இன்றைக்குத் தோற்றுப் போவோம் என்று தோன்றுகிறது—என்று ஜோசியம் பார்த்துச் சொல்வாயே! அது அப்படியே நடந்துவந்ததல்லவா? இப்பொழுது ஜோசியம் பார்த்துச் சொல்-நாமிருவரும் மணந்து சுகமாய் வாழ்வோமா? பரமேஸ்வரன் அருளால்!

க. [சற்று யோசித்து] கடைசிவார்த்தை சொன்னது தான்—எனக்கு தைரியம் கொடுக்கிறது. அப்படியே நடக்குமென என் புத்தியிற் படுகிறது—ஆயினும் அதற்கு முன் நாம் மிகவும் கஷ்டப்படவேண்டிவரும்! இருந்த போதிலும் கடைசியில் எல்லாம் நமதிஷ்டப்படியே சுகமாய் முடியுமெனத் தோற்றுகிறது, நீர் சொன்னபடி—ஈசன் அருளால்!

சீ. கண்ணே! என் கற்பகமே! கற்புடைய உன் மனதில் படுவது எப்படியும் நிறைவேறும்—ஈசன் அருளால்! எவ்வளவு கஷ்டம் நேரிட்டாலும் நேரிடட்டும்! பெரிதல்ல—கடைசியில் நமது கோரிக்கை கை கூடினால் போதும்! நீ இவ்வளவு கூறியது போதும்; என்மனம்—பூரண உவகை ஏற்றது! நான் ஏதோ பூர்வ ஜன்மத்தில் புண்ணியம் செய்திருக்கவேண்டும். [அவள் கைக்கு முத்தமிடுகிறான்.]

க. [புன்சிரிப்புடன்] என்வாய், பூர்வஜன்மத்தில் ஏதோபாபம் செய்தாற்போலிருக்கிறது!

சீ. [நகைத்து] ஓ!—சீச்சீ! மறந்தேன். அந்த வாய்தான் எனக்கு உயிரைக் கொடுத்ததே!

[வாய்க்கு முத்த மிடுகிறான்.]

தூரத்தில் வேங்கடேச முதலியாரும் சாம்பமூர்த்தி ஐயரும் வருகிறார்கள்.

க. விடும் என்னை!—அவர்கள் அதோவருகிறார்கள்!

[அவனிடமிருந்து பிரிந்து]

சீ. எல்லாம் அவர்களுக்குத்தெரியும்—அவர்களை நேரிற் கேட்போம்—இந்த தர்மசங்கடத்தினின்றும் தப்பி, நாம் மணக்கும் மார்க்கம்.

க. நானும் அதைத்தான் சொல்லவாயெடுத்தேன்.

[அவர்கள் அருகில் வருகிறார்கள்.]

வே. அடே சீதாராமா!-இதென்ன இது? இவளை — சத்ய நாராயண ஐயர் பெண்ணென்று நினைத்துக் கொண்டாயா என்ன?

சீ. மாமா, இப்பொழுது விளையாடுவதற்குக் காலமில்லை' அந்தப் பெண்ணின் பெயரையும் இனி என் முன் கூற வேண்டாம்-நான் சொல்வதைக்கேளுங்கள் — எங்களிருவருடைய உயிரும் உங்களிருவருடைய கையில் இருக்கிறது! எப்படியாவது நாளை விவாகத்தைத்தடுத்து எங்கள் தகப்பனார்களுடைய சம்மதியைப் பெற்று எங்களிருவர்களையும் கலியாணம் செய்துவைக்க வேண்டியது உங்களிருவருடைய பாரம்.

சா. என்ன அம்மா இது, கற்பகம்?

க. சிற்றப்பா! நீங்கள் இருவரும் மனம் வைத்தால் இது எப்படியும் முடியும்! வேறொருவராலுமாகாது, நாங்களிருவரும் உயிரோடிருக்கவேண்டுமென்று இருந்தால்-அவர் கேட்கிறபடி செய்யுங்கள்.

சா. இல்லாவிட்டால்?

க. எங்களிருவரையும்—நாளை இரவு—பிணமாய்க்காண்பீர்கள்.

சா. ஜகதீசன் உங்களை காப்பாற்றுவாராக! அப்படி அபசகுனமாகச் சொல்லாதேயம்மா!—அடே! பெரிய கிழவா! இதற்கு என்னடா செய்கிறது! ஏதாவது யுக்தி சொல் பார்ப்போம்.

வே. எனக்குத்தெரியாது! கற்பகம் உன்னைத்தானே முதலில் கேட்டது! உன்பாடு—நீதான் சொல்.

க. பெரியப்பா! நீங்களிருவரும் மனம் வைக்கவேண்டு மென்று சொன்னேனே இல்லையோ? என்மீது கோபம் வேண்டாம்.

வே. உன்மீது கோபமில்லையம்மா! நீ வருந்தாதே!—இந்த சின்ன கிழம் தான் ரொம்ப புத்திசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறது—அதற்காகச் சொன்னேன்.

சா. நீ மாத்திரம் ரொம்ப புத்திசாலியோ?

க. அப்பா—எங்களைக்காப்பாற்றும் வழியைப்பாருங்கள்!—உங்கள் சண்டையை அப்புறம் தீர்மானிக்கலாம்.

சா. கற்பகம்—நீ சொன்னதிலிருந்து எனக்கு—ஒரு யுக்தி தோன்றுகிறது! அந்தப்படிச் செய்தால் எல்லாம் சரியாகப்போய்விடும்—நாளை காலை அதையெல்லாம் பூர்ணமாக யோசித்துச் சொல்லுகிறேன்.

வே அடே! கிழவா—நாளைக்கு நாம் திருவொற்றியூர் சமாதிக்குப் போகவேண்டுமேயடா' மறந்து போனாயா? நாளை சாயங்காலம் வரை நமக்கு மௌன விரதமாயிற்றே—

சா. அடடா! அதை மறந்தேன்! இந்த பெரிய கிழத்திற்குக் கூட கொஞ்சம் புத்தி யிருக்கிறதம்மா! இப்பொழுதே சொல்கிறேன் அந்த யுக்தியை—அடடா! சீதாராமா! அந்தப்பக்கம் போனது யார் அங்கே?

சீ. என்னைப் பிடித்தசனி!—இங்கும் வந்திருக்கிறாற் போலிருக்கிறது!

சா. ஆம் ஆம் அவர்தான்—உன்னைத் தேடிக்கொண்டுதான் வந்திருக்கிறார்போலிருக்கிறது. வாருங்கள் விரைவில்—இந்தப்பக்கமாக அவர் கண்ணிற்படாதபடி வெளியே போவோம். வீட்டுக்குப் போகிறபொழுது வண்டியில் உங்களிருவருக்கும் என்யோசனையைச் சொல்கிறேன்.

[எல்லோரும் விரைந்துபோகின்றனர்.]

காட்சி முடிகிறது.



# மூன்றாம் அங்கம்

## முதற் காட்சி



இடம்—சத்தியநாராயண ஐயர் பங்களாவின் பின்பக்கம்.
பிராம்மண ஸ்திரீகள் முதலியோர், பரிசாரகர்கள், போய் வந்து கொண்டிருக்கின்றனர். பங்களாவின் முன்புறம் நாகஸ்வரம் வாசிக்கிறார்கள்.
மூன்று சாஸ்திரிகள் பின்புறத்தில் நின்று பேசிக்கொண்டிருக்கின்றனர். ஒரு பால்காரன் "ஐயா சாமி! சாமி!" என்று கத்திக் கொண்டிருக்கிறான்.

மு.சா. ஏனையா, கனபாடிகளே, சாப்பாடாக நேரமாகும் போலிருக்கிறதே?

இ.சா. ஆமாம்—மாப்பிள்ளை இன்னும் ஜானுவாசத்துக்கே பொறப்படலையாமே' அதாயி அப்புறம் நிச்சயதார்த்தமாயி தான்—நமக்கு சாப்பாடு போலிருக்கு.

மு.சா. பிள்ளைக்கு வரதக்ஷிணை எவ்வளவோ?

இ.சா. வரதக்ஷிணையா! மாப்பிள்ளை தகப்பனார், ரொம்ப சிஷ்டாசாரனாச்சே! ஒரு காசும் வாங்கமாட்டேன் என்றாராம். மாப்பிள்ளைக்கு மாமனார் மூவாயிரம் ரூபாயில் கடுக்கன் போடுகிறேன் என்றால், அதுவும் வேண்டாமென்றாராம். பிள்ளையிண்ணா அப்படி யல்லவோ இருக்கணும்! நம்மாத்துப் பிள்ளைகளைப்போலல்லாமல்! என்னான்னாலும் சீமைக்குப்போய் வந்ததில்—

மு சா. மாப்பிள்ளை சீமைக்கா போய்வந்தான்?

இ.சா. சாஸ்திரிகளே! நீர் எந்த ஊர்? இது கூடவா தெரியாது?

மு சா. நான் காஞ்சீபுரத்தை அடுத்த கிராமம்.—ஆனால் பிராயச்சித்தம் ஏதாவது ஆச்சுதோ?

இ.சா. சாஸ்திரிகள்! நீங்கள் என்ன ஜதர் கலாபனை காலத்து மனுஷன் போலிருக்கே! இப்பொ, யாரையா சீமைக்குப் போய்வந்தா பிராயச்சித்தம் பண்ரா ? அந்த ஆசாரமெல்லாம் அப்பொழுதே மலையேறிப்போய் விட்டது.

மு.சா. ஆனுகே—

இ.சா. என்ன ஆனுகே?

மு.சா. இல்லே—இந்த 'ஆத்திலே எப்படி சாப்பிடரது—இண்ணு யோசிக்கிறேன்.

[உள்ளிருந்து ஒரு பரிசாரகன் விரைந்துவருகிறுன்.]

பரி. ஏண்டா! சூத்திரப்பயலே! நான் தான் வர்ரேண்ணு சொன்னேனே! இதுக்குள்ள வரட்டுத் தப்பளேயாட்டம் வாள் வாள் இண்ணு கத்திண்டு இருக்கரையே? உனக்கென்னடா,வேணும்?

பால்கா. பத்தரை ரூபாய் வேணும் சாமி.

பரி. பத்தரை ரூபாய் யென்னமாடா?

பால்கா. இருவத்தோருபடி பால் வாங்கினிங்களே?

பரி. அதிலே எவ்வளவு தண்ணி ஊத்தனெ?

பால். என்ன சாமி இது! நீங்களா கிட்ட இருந்து கரந்து வாங்கினு—

பரி. அதெல்லாம் ஒதவாது—பத்து ரூபாதான் கொடுப்பேன்! அதுவும் கத்தாமலிருந்தா!

[உள்ளே போகிறுன்.]

பால். அரை ரூபாய் கமிஷன் ஐயருக்கு!—போவட்டும்.

மு.சா. இருபத்தோரு படி பாலு என்னத்துக்கு வாங்கினு?

இ.சா. கீர் பாயசத்துக்கு! சாப்பாடெல்லாம் இந்த ஆத்துலே பலமாத்தானிருக்கும்.

மு.சா. ஆனு—மாப்பிள்ளேக்கு இன்னேக்கு—இங்கே—சாப்பாடு இல்லயே? இன்னேக்கு ராத்திரிக்கு மாத்திரம் இங்கே சாப்பிடலாம் என்றிருக்கிறேன்.

இ சா. ஏய்! பிராம்மனு! நான் சொல்ரத்தே கேளும். இதிலெல்லாம் என்னேயா இருக்கு! நாளே காலேமுதல் பட்சணங்கள் எல்லாம் விசேஷமாயிருக்கும். ஏதோ வெளியூரா யிருக்கேன்னு நான் சொல்லவேண்டியத்தே சொன்னேன்—அப்புறம் உம்மபாடு.

மு.சா. அதான் —யோசிக்கிறேன்— நமக்கெல்லாம் ஒரு பக்கமா தானே சாப்பாடுபோடுவா?

இ.சா. உமக்கிஷ்டமான பந்தியில் உட்காரலாம்.

மு.சா. சரி—அப்படியே செய்ரது—

[ஒரு பிராம்மண விதவை வருகிறாள்.]

பி.வி. அடே! சூத்திரப்பயலே! எட்டி நில்லுடா! நான் உள்ளே போகணும்.

பால். சூத்திரப்பயலா! அந்த ஐயர் திட்டியாச்சு!—ஏம்மா நீங்களும் திட்டணுமா?

பி.வி. வாயேப் பாரு! கசமாலம்!

பால். ஏம்மா என்னெதிட்ரைங்க? நான் என்ன சொன்னேன்?

பி.வி. வழியிலே நிக்கரெயேடா!

பால். வழியிலே நிக்கரேனு! நீங்க உள்ளே போரத்துக்கு இவ்வளவு வழியிருக்குதே அம்மா!

பி.வி. ஆமாம்—உன்னே தீண்டிகினு போவணுமோ! எட்டி நில் கழுதெ!

இ.சா. அடே அந்தம்மாளோடெ வாயெ கொடுக்காதெயடா— இன்னும் கொஞ்சம் ஒதுங்கிதான் நில்லேன்.

பால். என்னசாமி நீங்ககூட கேக்கரைங்களே! அந்த அம்மா போக எவ்வளவு இடம் இருக்குது!

இ.சா. இன்னும் கொஞ்சம் பக்கமாத்தான் போயேண்டா, உனக்கென்ன கெட்டுப்போறது?

பால். அப்படிகேட்டா—காததூரம் போய் நிக்கரேன்! அத்தெ உட்டேட்டு திட்டலாமா சாமி? [மிகவும் ஒதுங்கி நிற்கிறான்.]

இ.சா. அம்மா, நீங்கபோங்க உள்ளே—அவனோடெ உங்களுக்கென்ன பேச்சி.

பி.வி. இல்லே சாஸ்திரிகள், வரவர கலிமிஞ்சிபோச்சு! இந்த சூத்திரப் பயல்களுக்கெல்லாம் கொழுப்பு அதிகமாப் போச்சு! [உள்ளே போகிறாள்.]

பால். பாத்தைங்களாசாமி நாயம்?

இ.சா. அடெ! போடா! ஏதோ பொம்மனுட்டி! அதிலெயும் கம்மினுட்டி!

பால். இந்த வாயிருக்கத் தொட்டுதான் இப்படி ஆனுபோலி ருக்குது! இந்த வழியா எத்தனிபேரு சுமங்கிலிங்க—போனுங்க—யாராவது ஒரு பேச்சு பேசனுங்களா!

மு.சா. அவனேடு பேச்சென்னகனபாடிகளே! நாம் உள்ளே போய் எத்தனி மணிக்கு சாப்பாடு போடுவா இண்ணு விசாரிக்கலாமா? நேரமாகிறதா இருந்தா ஏதாவது பலகாரம் பண்ணலாம்.

இ.சா. ஓய்! யஜ்வா! அப்பொழுதெ கேக்கணும் இன்று இருந் தெ—உங்களுக்கு சாப்பாடு இங்கேதானெ?

மு.சா. அதென்ன அப்படி கேக்கிறீர்? வெறெங்கே? பிள்ளை ஆத்திலே போயி சாப்பிடச் சொல்ரைகளா?

இ.சா. இல்லே இல்லே—அதுக்காக அல்ல—போனமாசம் நான் நரசிம்ம ஐயர் ஆத்திலே சாப்பிடென்னு கோவிச்சி கினீரே, இங்கே மாத்திரம் எப்படி சாப்பிடரீர்?

மு.சா. அதென்ன அப்படி கேட்கிறீர்? சத்யநாராயண ஐயர் என்ன அசாஸ்திரீகமா நடந்தாரா என்ன? இவா மச்சின னுக்கு ஏதாவது விதவையைக் கலியாணம் பண்ணிவைத் தாரா என்ன?

இ.சா. அப்படிச் செய்யவில்லே! ஆயினும் பெண்ருதுவாகி நான்கு ஐந்து வருஷம் பொறுத்து தான் கலியாணம் பண்ணுகிறுர்!

மு.சா. அது நேக்கு தெரியும்—தெரிஞ்சாலும்—இதெல்லாம் நாம் தப்பு இண்ணு சொல்லக்கூடாது. இந்தக்காலத்தி லே—சாரதா ஆகடு ஒண்ணு பாஸ் பண்ணியிருக்கிறுர் களே ராஜாங்கத்தார்! ராஜாங்கத்தார் எப்படி சொல்லு கிறுர்களோ அப்படி நாம் நடக்கவேண்டியவாதானே. இது தப்பு இண்ணு சொல்லக்கூடாது. அதுவுமன்றி,

முன் காலத்திலெல்லாம் நம்மபெண்கள் ருதுவான பிறகு தான் கலியாணம் செய்யப்பட்டார்கள் என்று இந்த கலியாணமந்திரங்களினலேயே நான் ருஜுப்படுத்து கிறேன்—வேணுமின்ன !

இ சா. சரிதான்—என் தம்பி சொன்னது வாஸ்தவம்தான்!-ஆத்திலே உம்ம மூத்தபெண் ருதுவாயிருக்கிறாற் போலிருக்கிறது.

மு சா. [ஒரு புறமாக] ஓய்! இதெல்லாம் நாலுபெயர் எதிரில் இழுத்து விடாதீர்!

இ.சா. ஏனையா! கலியாணப் பெண்ணுக்கு பதினெட்டு வயசா?

மு.சா. ஆமாம்—இன்டர்மிடியெட் கூட பாஸ் பண்ணியிருக்காள்!

இ.சா. உம்! பணக்காரர்களுக்கெல்லாம் ஒரு நியாயம்—நம்மைப் போன்ற ஏழைகளுக்கெல்லாம் ஒருநியாயம்! நான் இந்த மாதிரி நடந்தேனென்ருல் என்னை உடனே ஜாதிப்பிரஷ்டம் பண்ணிவிடுவார்கள்!

மு.சா. ஓய்!—என்னவோ ராஜாங்கத்தார் சரியென்ருல் நாமும் ஒப்புக்கொள்ளவேண்டுமென்றீரே! ராஜாங்கத்தார் விதவை விவாகம் சரிதான் என்று ஒரு சட்டம் பாஸ் பண்ணியில்லையோ? ஆகையினலே உம்ம நியாயப் பிரகாரம் அதில் தப்பில்லையே? அந்த கலியாணத்திற்குப் போய் தட்சிணை வாங்கினதற்காக என்னை யேன் அப்பொழுது வைதீர்?

இ சா. ருதுவான பெண்ணைக் கலியாணம் செய்துகொடுப்பதும், விதவையைக்கலியாணம் செய்து கொடுப்பதும், ஒன்ருகுமோ? அதற்கும் இதற்கும் அஜகஜாந்திரம்!

மு சா. அப்படித்தானிருக்கும் உமக்கு இப்பொழுது! உம்முடைய வீட்டில்—ஒரு பால்ய விதவை யிருந்தால் அப்பொழுது இந்த நியாயம் எல்லாம் மாறிப்போம்.

இ.சா. ஓய்! கனபாடிகளே! அபசகுனயாக அப்படி ஒன்றும் பேசாதீர் காணும்.

மு.சா. அப்படி நான் ஒன்றும் கோரவில்லை! நம்முடைய தற்கால நிலைமையைச் சொன்னேன்! சாஸ்திரங்களெல்லாம் பேசலாம், நம்முடைய கையைக்கடிப்பதானுல் எல்லாம் மாறிப் போய்விடும்! அப்பொழுது முற்காலத்தில் விதவைகளுக்குக் கலியாணமாகவில்லையோ? அபரக்கிரியை மந்திரங்களைக்கொண்டு முற்காலத்தில் விதவைகள் கலியாணம் செய்துகொண்டார்கள் என்று ரூபிக்கிரேன்பாரக்கிறீரா!

ஒரு வயோதிகனும் ஒரு வாலிபனுமாக இரண்டு பறையர்கள் இரண்டு வாஷிங்டன் விளக்குகளை தூக்கிக்கொண்டு வருகிறார்கள்.

வா.ப. ஐயா! சாமி! இத்தெயாரானு கொஞ்சம் புடிச்சி எரைக்கரைங்களா?

இ.சா. அடேய்! இத்தையேண்டா இந்தபக்கம் தூக்கிநாந்தைங்க?

வ.ப. ஊட்டுக்கரா எசமான்தா, பின்பக்கம் வெளிச்சம் இல்லே, ரெண்டே கொண்டுப்போய் அங்கே வையுங்க இண்ணு சொன்னாரு—

வா.ப. ஐயா, நீங்களாவது கொஞ்சம் புடிச்சி இரைக்குங்கையா?

பால். அடெய்! அவுங்கல்லாம் பாப்பாருங்கடா தீண்டமாட்டாங்க! [தான் பிடித்து இறக்குகிறான்.] அடெ! பறக்கழுதை! துணியே இழுத்துக்கோடா! எம்மேலே படுது பார்!

வ.ப. சாமி! கோவிச்சிகாதைங்க! அது புது துணிதான்! இண்ணைக்கி தான் வாங்கினான் பையன்.

பால். புதுதுணியானுமாத்திரம் பரவாயில்லையோ? நீ தொட்டதை நான் தொடணுமோ?

வா ப. சாமி! கோவிச்சிகாதைங்க, நானு ஒரு பேச்சிகேக்கரென்— இத்தே வாங்கனப்போ, எத்தனி துணி நாணயம்பார்த்து வாங்கனென்நானு? அத்தை யெல்லாம் நீங்க வாங்கிம் போய் கட்டிகலையோ?

பால் முடாராவாயெ! பறக்கழுதை! இன்னும் என்னமாநு பேசனு ஒதைப்பேன்!

வா.ப. அப்பொமாத்திரம் தீண்டலாமோ! போய்யா!

வ.ப. அடே! பையா! அவங்களோடெ என்னாத்துக்குடா நம் புளுக்கு பேச்சி?

வா.ப. இல்லெதாதா! அந்த ஐயா, நம்பளே திட்டரத்தேபாரு!- நம்பபறையருங்க இண்ணு எளக்காரம்! அதுக்குத்தான் நம்ப கிறிஸ்தவங்களா பூடலாம் இண்ணு சொன்னு நீ கேக்கமாட்டே இண்ரே? நம்ப கிறிஸ்தவங்களாபோனு இப்படி திட்டுவாங்களா நம்பளே?

வ.ப. அடே பையா! திட்டிகினு போகட்டுண்டா! நம்பளுக்கெ ன்னுடா கெட்டுப்போச்சி! பொறுத்தவங்கதாண்டா பூமி ஆளுவாங்கா! இதுக்கோசரம் நம்பொ பொறந்த மதத்தெ உட்டுட்டு, வேறே மதத்துலே போயி உய்ந்துடலாமா?

வா.ப. அது சரிதான் தாதா! இப்பொ இவுங்க அநியாயமா— திட்டராங்களே இதுக்கு என்னு செய்யரது?

வ.ப. அல்லாருக்கும் மேலே—சாமி ஓர்த்தர் இருக்காருடா! அவர் பார்த்துகிருரு!

பரிசாரகன் மறுபடியும் உள்ளிருந்து வெளியே வருகிறான்.

பரி. எங்கே அந்த வரட்டுத்தப்பளே?—இந்தாடா உம் பத்து ரூபாய். [ஒரு நோட்டை அவன் முகத்தில் எறிகிறான்.]

பால். இன்னும் அரை ரூபாய் சாமி?

பரி. இன்னும் அரை ரூபாயா? பேசனு ஒதைப்பேன்—பூடு கழுதை! இன்னம் ஒரு ரூபாய் புடிச்சிகினு இருக்கணும்! பத்து ரூபாய் கொடுத்தது தப்பு!

[உள்ளே போகிறான். முன்புறம் வாசித்துக் கொண்டிருந்த நாகஸ்வரம் திடீரென்று நிறுத்தப் படுகிறது, பலர் கலவரத்துடன் பேசும் சப்தம் கேட்கப்படுகிறது.]

இ.சா. என்ன கூச்சல் அது?—திடீரென்று நாகஸ்வரக்காரன் நிறுத்திவிட்டான் பாட்டு மத்தியிலே!

மு.சா. என்னமோ சமாசாரம் தெரியலே—நீர் போய் கேட்டுப் பாருமே! [இரண்டாம் சாஸ்திரி உள்ளே போகிறார்.]

வேறே இரண்டு பிராம்மணர்கள் வருகிறார்கள்.

மு.பி. ஐயரவாள்! கொஞ்சம் பெரிய மனசு பண்ணுங்க! நீங்க கேக்கர அவ்வளவு தொகை என்னாலே கொடுக்க முடியாது; ஆயிரம் ரூபாய் கொடுத்தூடரேன்! அது தான் என்னாலே முடியும். அதுக்கும் என் நெலத்தெ வச்சி வாங்கணும். எனக்கு கலியாண சிலவு ஒரு ஆயிரம் ரூபாயாவது பிடிக்கும். கொஞ்சம் பெரியமனசு பண்ணுங்க!

இ.பி. அதெல்லாம் முடியவே முடியாது. கண்டிப்பாய் இரண்டாயிரம் ரூபாய் நிட்சயதார்த்துக்கு முன்னே ரொக்கமாக வைச்சாகணும், இல்லாப்போனா மாப்பிள்ளெ எழுந்து பூடுவான்!

மு.பி. என்னாலே முடிஞ்சா கொடுக்கமாட்டேனா! வஞ்சகமா? எனக்கிருக்கிறது இது ஒரே கொழந்தே! அப்படி சொல்லி விடாதைக!—இதோ பாருங்க—இந்த ஆத்துக்கு வரப்போகிற மாப்பிள்ளே—ஒரு காசும் தனக்கு வேண்டாமிண்ணு சொல்லி விட்டாராம்.

இ.பி. ஏனையா அதிகமா பேசரீர்! அவாளெல்லாம் பணக்காரர்கள்! பிரபுக்கள்! நேச்கு என்ன இருக்கிறது? இன்னும் எனக்கு கலியாணமாகவேண்டிய ரெண்டு பெண்கள் இருக்கரா! அவா எழவுக்கு யார் அழரது?

மு.பி. உம்!-சிவசிவ! அப்படி சொல்லாதைங்க உங்கவாயால்—ஒரு ஐந்நூறு ரூபாயாவது கொறைச்சிங்களே! நான் எப்படியாவது பார்த்து—

இ.பி. அதெல்லாம் ஒத்தே ரூபாயும் கொறைக்க முடியாது! இது என்ன கத்தரிக்கா பேரமா? வேறெங்கயாவது பிள்ளே பார்த்துகும்!

இரண்டாம் சாஸ்திரி வெளியில் வருகிறார்.

இ.சா. ஐயா கனபாடிகளே! நாம் எழுந்தவேளெ இன்னைக்கு நண்ணாயில்லேபோலே இருக்குதெ! கலியாணம் என்னமோ நின்று போகும்போலிருக்குது. மாப்பிள்ளேயே

காணமாம்! ஏதோ இந்தக் கலியாணம் தனக்கு இஷ்ட மில்லையென்று ஒரு காகிதத்தை எழுதிவைத்துவிட்டு எங்கேயோ போய்விட்டாராம்! அவன் தகப்பனார் எல்லாம் எங்கும் தேடுகிறார்களாம்.

மு·சா. அடடா! என்ன விபரீதம்! இந்தக் கலியாண வரும்படியெல்லாம் போனதுதான்.

இ·சா. இண்ணைக்கி—சாப்பாட்டுக்கு—ஏதாவது?—

மு சா. ஓய்! பிராம்மணா! அதுக்கு பயப்படாதீர். சமைச்ச அன்னம் நமக்கு போட்டாகணுமே யில்லையோ?

இ சா. வரதட்சிணைகூட வேண்டாமிண்ணு ஒப்புக்கொண்ட மாப்பிள்ளே இப்போ ஏன் வேண்டாம் இண்ராராம்?

மு·சா. என்னமோ! ஆச்சரியமாயிருக்கு! ஆளுக்கு ஒருவிதமா பேசரா!

இ·சா. அதென்ன சமாசாரம்? போயி கேட்டுப்பார்க்கலாம் வாருங்க. [மூவராக உள்ளே போகின்றனர்.]

இ பி. பார்த்தைங்களாங்காணும்! என்னமோ இந்த ஆத்து மாப்பிள்ளே வரதட்சிணையே வேண்டாமின்னு சொல்லிவிட்டான் இன்றீரே! பார்த்திகளா? அந்த வரதட்சிணை விஷயமாகத்தான் மாப்பிள்ளை கோபித்துக் கொண்டிருக்கிறான் என்று நினைக்கிறேன்.

மு·பி. அப்படியிராது! பிள்ளையாண்டான் ரொம்ப படிச்சவன்! சீமைக்குப்போயி என்னமோ பரிட்சை பாஸ்பண்ணியிருக்கிறானும், சீக்கிரம் கலெக்டர் உத்தியோகம் ஆகணுமாம்.

இ பி. அதாம் அதிகமாக வரதட்சிணை கேட்கிறாப்போலிருக்கிறது.

மு பி. அப்படி இராது! நாமும் போய் உள்ளே விசாரிக்கலாம் வாருங்க. [இருவரும் உள்ளே போகிறார்கள்.]

வா.ப. தாதா! கேட்டையா கதையே! இந்தப் பொராமணாள் மாத்திரம் கண்ணாலத்துக்கு ரூபா கேக்கராங்களே! என்னெ மாத்திரம் சும்மா கண்ணாலம் பண்ணிகச் சொல்ல

ரையே! நானுகூட —எனக்கு ஒருநூறு ரூபாய் கொடுத்தா தான்—கறுப்பாயியே கண்ணாலம் பண்ணிக்கபோறேன்.

வ ப. அடே! அப்பா! அவங்களெ பார்த்து கெட்டுப்பூடாதே! பொராமணுள் என்னு ஒணும்ஞலும் செய்யலாம்! நம்ப ஜாதி வழக்கம் இல்லேடா அது? நம்போ பணம் கேட்டா நம்ப ஜாதியிலே நாலுபேரு காரி துப்புவாங்கடா!

வா ப. தாதா! அந்தப்பக்கம்! பலெ கூச்சலா இருக்குது! நம்பளும் போய் வேடிக்க பாக்கலாம் வா.

[இருவரும் சுற்றிக்கொண்டு போகிறார்கள்.]

பால். அடடே! இந்த பத்து ரூபாயோட சரிபோலே இருக்குதே நமக்கு! இன்னும் நாலுநாளேக்கி சொன்னபாலு கான்சல்தான் போலேயிருக்குது! அப்பவே நினேச்சேன்! இந்த வெள்ளெ வேட்டியம்மா உள்ளே நொழையும் போதே நெனேச்சேன், என்னமாணு நடக்கும் இண்ணு! சரியாப்போச்சு! என்ன பெரிய கூச்சலாயிருக்கிறது அந்தபக்கம்—நம்பளும் போயி வேடிக்கெ பார்க்கலாம்.

[சுற்றிக்கொண்டு போகிறான்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி

இடம்—திருவொற்றியூரில் நூதனமாகக்கட்டப்பட்ட ஒரு பங்களாவின் மேல்மாடியில் ஓர் அறை.

சீதாராமனும் கற்பகமும் ஒரு சோபாவின் மீது உட்கார்ந்திருக்கின்றனர்.

சீ. என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய் கண்ணே?

க. ஒன்றுமில்லை—என் தகப்பனார் வீட்டை விட்டு வந்தது முதல் எனக்கேதோ மனதில் திகிலாயிருக்கிறது.

சீ. நான் அருகிலிருக்கும்பொழுது உனக்கு பயமென்ன! தைரியமாயிரு! எல்லாம் சரியாகிவிடும் நம்முடைய இரட்டையர்கள் சீக்கிரம் வருவார்கள்.

க. [அங்கிருக்கும் கடியாரத்தைப்பார்த்து] அவர்கள் வருவதாகச் சொன்ன மணிகடந்து விட்டதே!

சீ. எப்படியும் சீக்கிரம் வந்து விடுவார்கள்—வழியில் என்ன அசந்தர்ப்பமோ? அவர்கள் மோடார் வண்டி, ஏதாவது கஷ்டம் கொடுத்ததோ என்னவோ? அதுவும் அது நிரம்ப பழய வண்டி, அதை மாற்றி வேறொன்று வாங்கு கிறதுதானே என்று எவ்வளவும் சொல்லியும் அவர்கள் கேட்கிறதில்லை.

க. உங்கள் தகப்பனுர் நம்முடைய விவாகத்திற்கு உத்திரவு கொடுப்பார் என்று நினைக்கிறீர்களா நீங்கள்?

சீ. நான் என்னவோ உறுதியாய் நம்புகிறேன்-நான் அன்று எனக்கிருந்த பயித்தியத்தில் சத்யநாராயண ஐயர் மக ளைத்தான் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று நிர்ப்பந்தித்தபொழுது—அவர் முகம் மிகவும் வாடியது. அவர் ஏதோ மறுக்கவாயெடுத்தார் இருமுறை, நானி ருந்த பயித்தியத்தில் அவரை வாயெடுக்கவொட்டாத படி தடுத்தேன். அன்றியும் என் தாயார் தனக்கு ஆட் சேபணையில்லை யென்று கூறினுர்கள் என்பதை உனக்கு முன்பே சொன்னேனே! என்தாயார் வார்த்தைக்கு என் தகப்பனுர் குறுக்கு சொல்லமாட்டார்கள். அதற் காகத்தான் என் தாயாரிடம் முன்பு பேசும்படி சின்ன மாமாவிடம் சொன்னேன்.

க. உம்முடைய தாயார் வார்த்தைக்கு குறுக்கு சொல்ல மாட்டாரோ—உங்கள் தந்தை?

சீ. நான்தான் சொன்னேனே! என் தாயார் மீது அவருக் குள்ள காதல் அளவற்றது. இவ்வளவு வயதாகியும் அவர் கள் பாலியகாதலர்கள் போலவே நடந்து கொள்ளுகிறுர் கள். ஷஷ்டிபூர்த்தியாகி சில வருஷங்கள் ஆயினபோதி லும், இன்னும் என் தகப்பனுர் வெளியேபோவதென்றுல் அவர்களுக்கு முத்தம் கொடுத்துவிட்டு அவர்கள் உத்தி ரவைப்பெற்று தான் போகிறுர் தினம்! வரும்போதும்,

வந்தவுடன் முதல் வேலை என் தாயார் நோயாளியாயிருக்கும் அறைக்குப்போய் அவர்களுக்கு முத்தம் கொடுத்து விட்டு, தேகஸ்திதியை விசாரித்து விட்டு பிறகு தான் எந்தவேலையையும் பார்ப்பார்!

க. அப்படி என் மீது காதல் கொண்டிருப்பீராநீர்—எப்பொழுதும்?

சீ. கண்ணே! கண்ணே! [அவளை முத்த மிட்டு] அதைக் குறித்து நீ சந்தேகப்படவேண்டாம். அதைவிட பதின் மடங்கு அதிகமாய்க் காதல் கொண்டிருப்பேன்—நான் சாமளாவும்— இன்னும் ஏன் அந்த முகத்துடன் இருக்கிறாய்? இன்னும் என்ன கவலை உனக்கு?

க. வேறொன்று மில்லை, உங்கள் தகப்பனார் சம்மதித்தபோதிலும்—என் தகப்பனாரும் இதற்கு என்ன சொல்லுகிறாரோ என்று அஞ்சுகிறேன்.

சீ. அவர் சமாசாரம்—உனக்குத்தான் நன்றாய் தெரிய வேண்டும்—அவரிடம் பெரியமாமா பேசுவதாகச் சொல்லியிருக்கிறாரே, அவருடைய வேண்டுகோளைமறுப்பாரா?

க. மறுக்கமாட்டார் என்று நினைக்கிறேன்—பெரியப்பாவிடம் அவருக்கு மிகவும் கௌரவம் உண்டு. என்னுயிரை அந்த ஆபரேஷனுக்குப்பிறகு காப்பாற்றியது முதல், அவர் என்ன சொன்னாலும் அதற்குக் குறுக்காகச் சொல்வதில்லை—அன்றியும் நான் அவருக்கு எழுதி வைத்த கடிதத்தில் மிகவும் வேண்டியிருக்கிறேன்—என் வேண்டுகோளையும் மறுக்கமாட்டார் என்று நினைக்கிறேன். இருந்தபோதிலும்—என் மனதில் மாத்திரம் ஏதோ பெரியபயமாயிருக்கிறது—ஏன் இன்னும் அவர்கள் வரவில்லை?—

சீ வந்துவிடுவார்கள் பயப்படாதே! ஒருவேளை நம்முடைய தகப்பன் மார்களை இசையச் செய்வதற்கு நாழிகை பிடித்திருக்கலாம்.

க. ஒருவேளை—அவர்கள்—இசையமாட்டேன் என்றால்?

சீ. எந்தநியாயத்திற்கிசையாவிட்டாலும், 'நாங்கள் காப்பாற்றிய சீதாராமன் உயிரை எங்களுக்கு தானமாகக்கொடும்' என்று கடைசியாகக் கேட்கிறேன் என்றாரே சின்னமாமா, அதற்கு என் தகப்பனர் எப்படியும் இசைவார்—பயப்படாதே!

க. அப்படியே தான்— என் தகப்பனரிடம், பெரிய அப்பாவும் கேட்பதாகச் சொன்னார். இந்த பிராம்மணன்—சூத்திரன் என்ற கஷ்டமில்லாவிட்டால்—

சீ. கற்பகம்! இந்த வார்த்தையை யெடுத்தால் எனக்கு நீ பைன் (fine) கொடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறேனே இல்லையோ?

க. ஆமாம்—ஏதோ வாய்தவறி வந்துவிட்டது! மன்னியுங்கள்.

சீ. அதெல்லாம் உதவாது—நீ ஒப்புக்கொண்டபடி—பைன் கொடுத்துதான் ஆகவேணும்.

க. இந்தாருங்கள் பைன்.

[அவனுக்கு ஒரு முத்தம் கொடுக்கிறாள், அங்கிருக்கும் கடியாரம் $8\frac{1}{2}$ மணி அடிக்கிறது.]

எட்டரைமணியாயிற்றே! இன்னும் வரவில்லையே!

சீ. எனக்கும்—கொஞ்சம்—யோசனையாகத்தானிருக்கிறது! அவர்கள் சொன்னபடி எப்பொழுதும் வருவார்களே! ஒரு நிமிஷம்கூட மாறமாட்டார்களே?

க. அவர்கள்—வராவிட்டால்—நாம் என்ன செய்வது?

சீ. சும்மா இருப்பது—அவர்கள் வருகிறவரையில்.

க. அதற்குள்—வேறு யாராவது நம்மை இங்கு கண்டு பிடித்து விட்டால்?

சீ. ஒருவரும் கண்டுபிடிக்கமாட்டார்கள்! பயப்படாதே!

க. ஒருவேளை—எப்படியாவது—சத்தியநாராயண ஐயர்-நீர் இங்கிருப்பதை அறிந்து வருவாராயின்? நம்மிருவரையும் இங்கு—காண்பாராயின் ?

சீ. அந்தச் சனியின் பேச்சை இங்கு ஏன் எடுக்கிறாய் ?

க. என்னவோ—எனக்கு—ஒருவிதமாய் பயமாயிருக்கிறது !

சீ. ஒன்றும் பயப்படாதே! அந்தச்சனி இங்கு வரவே வராது.

க. ஒருவேளை—வந்தால்?

சீ. [ஒருவிதமாக நகைத்து] வந்தால்—சாம்பமூர்த்தி ஐயர்—வேடிக்கையாகச் சொன்னதை-உண்மையில் நிறைவேற்றுவோம் !

க. வீட்டிற்கு இந்தப்புறம் இருக்கும் கிணறுதானே—சிற்றப்பா சொன்னது ?

சீ. ஆம்.

க. அது மிகவும் ஆழமாயிருக்குமல்ல ?

சீ. ஆம்—அதைப்பற்றி உனக்கென்ன யோசனை ? அவர் என்னமோ வேடிக்கையாகச் சொன்னால்.

க. உங்களை நான்—ஒன்று வேண்டிக்கொள்ளுகிறேன்—ஒருவேளை நாம் அதில் வீழ்ந்து இறக்கவேண்டி வந்தால்--நாமிருவரும் ஒன்றாய் இறக்கவேண்டும்—என்னை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு—ஒரே குதியாய் குதித்து விடுங்கள்—

சீ. கற்பகம்! உனக்கென்ன பயித்தியமா ? இதையெல்லாம் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறாய்—அப்படி ஒன்றும் நேரிடாது ! வேறு ஏதாவது பேசு !

க. எனக்கென்னமோ !—மனதில்—திகிலாகவே யிருக்கிறது.

சீ. கண்ணே! நானருகிலிருக்கும்போது உனக்கென்ன பயம்?

க. ஆம், என் அருகிலேயே இரும்—என்னைவிட்டுப் பிரியாதீர்கள்—இறக்கும்போதும்!

சீ. சிச்சீ! இப்படி பேசிக்கொண்டிருந்தால்—உனக்கு பயித்தியம் பிடித்துப்போகும்—வேறு ஏதாவது பேசுவோம்—கற்பகம், நீ என்மீது—எப்பொழுது முதல் முதல்—காதல் கொண்டாய்?

க. உம்!—எத்தனை முறை அதைச் சொல்வது? நான் சொல்ல மாட்டேன்.

சீ. இல்லை இல்லை— நீ என்னமோ சொன்னாய் அன்றைக்கு—அது எனக்கு நன்றாய் ஞாபகமில்லை, இன்னொருமுறை சொல்.

க. இதுதான் கடைசிமுறை — இன்னொருமுறை நான் சொல்லமாட்டேன்!

சீ. அப்படியே—சொல்—உன் வாயிலிருந்து கேட்டால் அதில் எனக்கு கொஞ்சம் சந்தோஷம்.

க. நான் ஐந்து வயதாயிருந்தபொழுது-ஒருநாள்-அண்ணாசாமி முதலியார் பையன்—என் கையிலிருந்த மாம் பழத்தை பிடுங்கப் பார்த்தபொழுது, அவனை அடித்துத் துரத்தினீரே—அதுமுதல்!

சீ. ஆம், ஆம்—இதைப்பற்றி நீ சொன்னது ஞாபகமிருக்கிறது! ஆயினும் நான் எவ்வளவு ஞாபகம் பண்ணிப் பார்த்தும், நான் அவ்வாறு செய்தது—எனக்கு ஞாபகம் வரவில்லை!

க. எனக்கு ஒரே ஞாபகம்! ஆகவே ஞாபகமிருக்கிறது—உங்களுக்கு அநேக—ஞாபகம்—அதில் ஞாபகமில்லை.

சீ. கற்பகம்! இன்னும் அவள்மீது—உனக்கு பொறாமை போகவில்லையா? அவளை நான் கனவிலும் நினைக்கிறேன் என்று நினைக்கிறாயா!

க. இல்லை! இல்லை! கோபித்துக் கொள்ளாதீர்கள்! ஆயினும் அவள் ஒருநாள் கூறிய வார்த்தை என்மனதிலிருந்து—நான் சாமளவும் போகாது!

சீ. என்ன கூறினள் அப்படி? அதை இதுவரையில் என்னி டம் சொல்லவில்லையே?

க. நமக்கு—கலியாணமாகிற வரையில்—அதை உமக்குச் சொல்லக்கூடாதென்றிருந்தேன்-ஆயினும் இப்பொழுது சொல்லிவிடுகிறேன், இனி யென்ன பயம்? ஒருநாள் நாங்களிருவரும் குயின்மேறிஸ் காலேஜில் (Queen Mary's College) படித்துக் கொண்டிருந்தபொழுது "நீ சூத்திரச்சி! நீ பிராம்மணனை கட்டிக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறாயா? இந்த ஜன்மத்தில் நடவாது" என்று சொன்னாள்.

சீ. அப்படியா? எந்த சந்தர்ப்பத்தில்?

க. நாங்களிருவரும் அதுவரையில் காலேஜில் மிகவும் அன்யோன்ய சிநேகிதர்களாயிருந்தோம். ஒருநாள் பீச்சில் இரவில் உலாவிக்கொண்டிருந்தபொழுது "உனக்கு யாரைக் கட்டிக்கொள்ள வேண்டுமென்று விருப்பம் அடி, எனக்கு ரகசியமாகச்சொல்" என்று கேட்டாள். நானும் அவள் சூதையறியாது, நம்முடைய உயிர்த் தோழியா யிருக்கிறாளென்று—உங்களைத்தான் கலியாணம் பண்ணிக்கொள்ள இஷ்டம் என்று உண்மையைத் தெரிவித்தேன்—அப்பொழுது இந்த வார்த்தையைச்சொன்னாள்—சொல்லிவிட்டு—

சீ. சொல்லிவிட்டு—இன்னும் என்ன? இன்னும் என்ன சொன்னாள்—

க. "நான் பிராம்மணத்தி—நான்தான் அவரைக் கலியாணம் பண்ணிக்கொள்ளப் போகிறேன் எப்படியாவது"—சபதம் செய்தாள்!

சீ. ஓகோ! அப்படியா சமாசாரம்! அதற்காகத்தான் அவள் தகப்பனார் இவ்வளவு பாடுபட்டார்போலிருக்கிறது!

க. இருக்கலாம்—அவள் சொல்லுகிறபடியே அவள் தகப்பனார் ஆடுவார்! அதெல்லாம் மிகவும் கெட்டிக்காரி!

சீ. இவள் கெட்டிக்காரத்தனத்திற்கு—இவளுக்கு ஒரு—சூத்திரன் அகமுடையனாக வாய்க்கவேணும்!

க. உங்கள் வாயால் அப்படிச் சொல்லாதீர்கள்!

சீ. நான் அதைத் தப்பாகச் சொல்லவில்லை. இவள்—சூத்திரச்சி பிராம்மணத்தி என்று சொல்வதற்கு—இவளுக்கு ஒரு சூத்திரன் கணவனாக வாய்த்தால், அப்பொழுது இந்த அகம்பாவமெல்லாம் அடங்குமல்லவா என்று சொல்லவந்தேன்.

க. ஆமாம்—அதிருக்கட்டும்—நான்மாத்திரம் இந்த பிராம்மணன் சூத்திரன் என்கிற பேச்செடுக்கக்கூடாதென்றீர்களே—நீங்கள் மாத்திரம் எடுக்கலாமோ?

சீ. இல்லை இல்லை! தவறுதான்! அதற்காகப் பைன் கொடுத்து விடுகிறேன்!

[அவளுக்கு ஒரு முத்தம் கொடுக்கிறான். பங்களாவின் கேட்டருகில் மோட்டார் வண்டி சப்தம் கேட்கிறது.]

அதோ வந்துவிட்டார்கள்!

க. யார்? [இருவருமாக ஜன்னலருகிற்போய் வெளியே பார்க்கின்றனர்] ஐயோ! அது நம்மவர்கள் வண்டியல்லவே! ஏதோ புதிய வண்டியாயிருக்கிறதே!

சீ. ஆம், ஆம்! [உற்றுப்பார்க்கிறான்] சத்தியநாராயண ஐயர் வண்டி!

க. நினைத்தேன்! நினைத்தேன்! ஐயோ! நம்மை அவர் கண்டுபிடித்துவிட்டால் என்னசெய்வது? என்கதி எப்படியாவது ஆகிறது, நீங்கள் தப்பிப்பிழையுங்கள்—நான் அக்கிணற்றுக்குப் போகிறேன்!

சீ. கற்பகம்! என்னை அப்படிப்பட்ட பாதகன் என்று எண்ணினாயா? நாமிருவரும் இப்படிவழியாக இறங்கிப் போவோம் வா விரைவில்! காவற்காரன் கதவைத்திறந்துவிட்டான்!—அதோ வருகிறார்!—பங்களாவுக்கு!

க. இதுதானோ நம்முடைய கதி! [தேம்பி அழுகிறாள்.]

சீ. கண்ணே! கற்பகம்! அழாதே—ஒரு க்ஷணமும் தாமதிக்கலாகாது! வா! சீக்கிரம்! [அவள் கரத்தைப்பற்றி அழைத்துக்கொண்டு] ஒன்றாய் மடிந்து, சுவர்க்கத்திற்குப்போவோம்—அங்கு பரமேஸ்வரர் எதிரில் நாம்—மணப்போம்!

க. அவர் கருணையினால்!

[இருவரும் விரைந்து பின்பக்கத்துப் படிவழியாக போகின்றனர்.]

முன்பக்கத்துப் படிவழியாக சாம்பமூர்த்தி ஐயரும் வெங்கடேச முதலியாரும் விரைந்து வருகின்றனர்.

சா. எங்கே இவர்கள்? எங்கேயோ ஒளித்துக்கொண்டிருக்கிறார்கள், சீதாராமா! கற்பகம்! இந்தக்கதை என்னிடம் உதவாது! காவற்காரன்தான் எனக்குச் சொன்னானே!

வெ. இருவர்களும் ஜன்னலருகில் நின்றுகொண்டிருந்ததை நான் பார்த்தேன்!

சா. நீங்களாக வெளியில் வருகிறீர்களா? இல்லாவிட்டால் நாங்களிருவரும் இப்படியே உங்களை விட்டு விட்டு—

[பின்புறம் கிணற்றில் யாரோ விழும் பெரிய சப்தம் கேட்கிறது]

வெ. சாம்பமூர்த்தி! என்ன சப்தம் அது!

[காவற்காரன் கீழேயிருந்து "ஐயா! ஐயா! கிணற்றில் வீழ்ந்து விட்டார்கள்! கிணற்றில் வீழ்ந்துவிட்டார்கள்! வாருங்கள்! வாருங்கள்! என்று" கத்துகிறான்.]

சா. ஓகோ! நான் வேடிக்கையாய் கூறியது வினையாய் முடிந்தாற்போலிருக்கிறதே! வெங்கடேசம்! ஓடிவா! ஓடிவா!

[விரைந்து கீழே பின்புறம் படிவழியாக இருவரும் போகின்றனர்.]

காட்சி முடிகிறது.



## மூன்றும் காட்சி

இடம்—அதே இடம்.

ஹாலின் நடுக்கதவைத் திறந்துகொண்டு பாலசுப்பிரமணியம் வருகிறான் விரைவாக.

பா. [கீழே தோட்டத்தை நோக்கி] அடே! தோட்டக்காரப் பையா! இன்னும் கொஞ்சம் தணல் வேண்டுமாம்—சீக்கிரம் கொண்டுவா!

நடு அறையின் உள்ளிருந்து சத்தியநாராயண ஐயரும் அண்ணாசாமி முதலியாரும் மெல்ல வருகிறார்கள்.

ச. [தலையசைத்து] போனது போனதுதான்! போன உயிர் திரும்பி வருமா என்ன? இவர்கள் பிரயாசை செய்வது வியர்த்தம்தான்.

அ. எப்படி விழுந்தார்களாம்—இருவரும் கிணற்றில்?

ச அந்தப் பெண் கிணற்றண்டை போனபோது—ஏதோ கால் தவறி விழுந்து விட்டாற் போலிருக்கிறது. அவளைத் தூக்க—நம்ப பிள்ளையாண்டான் போய்—இவனும் விழுந்து விட்டானாம்—என்று பேசிக்கொள்ளுகிறார்கள்.

அ. ஒரு வேளை வேண்டுமென்று விழுந்திருப்பார்களோ?

ச. பயித்தியமா? அவர்கள்தான் கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று புறப்பட்டவர்களாச்சுதே! கலியாணம் கருமாந்திரமாக முடிஞ்சுது! வேணுமென்றால்! தகப்பனார் தாயாருக்கடங்காத பிள்ளை இருந்தென்ன இறந்தென்ன!

அ. அப்பொழுது—உம்முடைய—மகள்—கலியாணம்—நாளை காலை—

ச. அந்தமட்டும் அவள் புண்ணியம்பண்ணினவள்! இது தாலி கட்டின பிறகு நடந்திருந்தால்—

அ. வாஸ்தவம்தான்! கலியாணத்திற்காக எல்லாம்—ஏற்பாடு செய்து விட்டு—அந்த செலவெல்லாம்-வீணாகத்தானே போகுது!

ச. உம்—அதுதான் யோசிக்கிறேன்! பிராரப்தம்! ஏறக்குறைய ஐயாயிரம் ரூபாய் ரொக்கமாய் செலவாயிருக்கிறது இது வரையில்! என்ன துர் அதிர்ஷ்டம்!-உமக்கும் இந்த கதிதான் போலிருக்கிறதே! நீரும் ஏதோ, அந்தப் பெண்ணை உம்முடைய பிள்ளைக்குக் கட்டிக்கொள்வதற்காக, ஏற்பாடு செய்தாற் போலிருக்கிறதே—

அ. ஐயரவாள்! எனக்கொருயோசனை தோணுகிறது. அதை வண்டியில் போகும்போது பேசிக்கொள்வோம்—வாருங்கள்—இங்கு நமக்கென்ன வேலை?

ச. ஆம்—நமக்கென்ன வேலை? வாருங்கள் போவோம்.

[கீழே இழிந்து போகிறார்கள்.]

சா. [நடு அறையிலிருந்து] பாலு! அந்த தணல் வந்ததா?

பா. இதோ கொண்டுவரச் சொல்கிறேன்—அடே! பையா கொண்டு வாடா சீக்கிரம்!

ஒருபையன் தணல் சட்டி யொன்றைக் கொண்டு வருகிறான்.

பை. இதோ சாமி!-இது போதுங்களா, இன்னும் வேணுமா?

பா. எதற்கும்—இன்னும் இரண்டு சட்டி தணல் தயார் பண்ணிவை.

[தணல் சட்டியை வாங்கிக்கொண்டு உள்ளே போகிறான்.]

பை. அப்படியே வைக்கிறேங்க. [கீழே போகிறான்.]

நடுக்கதவின் வழியாக உள்ளிருந்து ராமகிருஷ்ண ஐயரும், தர்மலிங்க முதலியாரும், துக்கித்த வண்ணம் வந்து ஹாலில் இருக்கும் ஒரு சோபாவின் மீது உட்காருகிறார்கள். ஒரு நிமிஷம் இவர்கள் துக்கசப்தம் தவிர வேறொரு சப்தமுமில்லாதிருக்கிறது.

வே [உள்ளிருந்து] பாலு! ஓடிப்போய் இன்னும் இரண்டு சட்டிகள் கொண்டுவா! சீக்கிரம்!

பாலசுப்பிரமண்யம் நடுக்கதவிலிருந்து வெளியே ஓடிவருகிறான்.

பா. அடே! பையா! கொண்டுவாடா! இரண்டு சட்டியையும்! ஓடியா! ஓடியா!

ரா.தர். [திடுக்கிட்டெழுந்து] என்ன ! என்ன !

பா. ஏதோ, கொஞ்சம்—சான்ஸ் (Chance) இருக்கிறாற் போலிருக்கிறது! கண் இரப்பை அசைகிறது!—கொண்டாடா சீக்கிரம் பையா !

பையன் இரண்டு தணற்சட்டிகளைக் கொண்டு வருகிறான்; அதை அவன் கையிலிருந்து பிடுங்கிக்கொண்டு

ஐயா, நீங்கள் வெளியே தானிருங்கள்! உள்ளே வந்து காபுரா பண்ணுதீர்கள் !

[நடு அறைக்குள் விரைந்து போகிறான்.]

ரா. [சோபாவின் மீது சாய்ந்து] தியாகராஜா! தியாகராஜா! என் பிள்ளையை உயிர்ப்பிப்பீராக !

த. [சோபாவில் உட்கார்ந்து கைகூப்பி] இரண்டு பெயரையும் உயிர்ப்பிப்பீராக !

ரா. [திடுக்கிட்டுக் கண்விழித்து] தர்மலிங்கம்! இந்த புத்தி எனக்கில்லாமற் போச்சுதே! [அவரது கரத்தைப்பற்றி] —தர்மலிங்கம்! என்னை மன்னிக்கிறாயா நீ ?

த. ராமகிருஷ்ணா! இருவரும் ஸ்வாமியின் மன்னிப்பைக் கேட்போம் !

ரா. ஆம் ஆம்—[அறையிலிருக்கும் கடியாரம் ஒன்பது அடிக்கிறது] நற்சகுனம்—தர்மலிங்கம்! அவர்களிருவரும்—உயிர் பிழைத்தால்—உன் பெண்ணை என்மகனுக்கு கொடுக்கிறாயா ?

த. ஆகட்டும் ! [ஒருவர் கையை ஒருவர் பற்றுகின்றனர்.]

வே. [உள்ளிருந்து] அடே! கிழவா! கண்ணைத் திறக்கிறான்போலிருக்கிறதே !

சா. [உள்ளிருந்து உரக்க] ஆம் ஆம்! கற்பகம் கூட!

பாலசுப்பிரமணியம் உள்ளிருந்து வெளியே விரைவாக வருகிறான்.

பா. பிழைத்துவிட்டார்கள்! பிழைத்துவிட்டார்கள் !

ரா.த. யார் ? யார் ? [எழுந்து]

பா. இரண்டு பெயரும்! இரண்டு பெயரும்!

ரா·த. [ஆனந்த பாஷ்பம் சொரிந்து ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு சோபாவின்மீது வீழ்ந்து மூர்ச்சையாகிறார்கள்.]

**சாம்பமூர்த்தி ஐயர்,** நடு அறையிலிருந்து வெளியே வருகிறார்.

சா. ஐயரவாள்!—முதலியார்!—இரண்டு பெயரும்—இதென்னடா இது?

பா இது ஏன் இவர்கள் இருவரும் அழுகிறார்களே!

சா. [அவனைக் கையமர்த்தி] அப்படியே அழட்டும்! நல்லது தான்! நீ போய் ஐந்தாறு கப் காப்பி சுடச்சுடப் போட்டுக்கொண்டுவா—உங்கள் வீட்டிலிருந்து உடனே!

[பாலசுப்பிரமணியம் போகிறான்.]

**வெங்கடேச முதலியார்** நடு அறையிலிருந்து வெளியே வருகிறார்.

என்னடா கிழவா! நீயும் வந்து விட்டாய்?

வே. இனி பயமில்லை! அவர்களிரண்டு பெயரும் கொஞ்சம் பேசட்டும்!—இதென்னடா இது'—இந்த ரெண்டு கிழங்களும் இப்படி கிடக்கிறதுகளே?

சா. அவர்களை எழுப்பாதே! அப்படியே இருக்கட்டும் கொஞ்சம்-இப்பொழுதுதான் அவர்களுக்கு—கொஞ்சம் புத்தி வந்தது!

[ஒரு போர்வையை எடுத்து அவர்களிருவரையும் ஒன்றாய்ப் போர்க்கிறார்.]

**காட்சி முடிகிறது.**



## நான்காம் காட்சி

இடம்—அதே இடம்.

ஒருபுறமாக மரகதம்மாள் கற்பகத்துடன் பேசிக்கொண்டிருக்கிருள். மத்தியில் ராமகிருஷ்ண ஐயரும் தர்மலிங்க முதலியாரும் பேசிக்கொண்டிருக்கின்றனர்; மற்ருெரு புறமாக, வெங்கடேச முதலியாரும், சாம்பமூர்த்தி ஐயரும் மத்தியில் சீதாராமனை உட்காரவைத்துக்கொண்டு பேசிக்கொண்டிருக்கின்றனர்.

சா. என்னடா! சீதாராமா! எல்லோருக்கும் எவ்வளவு கஷ்டம் வைத்தாய்! நான் வருவதற்கு நேரம் ஆச்சுது வாஸ்தவம் தான்! நான் சொன்னபடி வரவில்லை, ஒப்புக்கொள்ளுகிறேன், இருந்தபோதிலும் என்ன அதற்குள் அவசரம்—இரண்டு பெயருமாக—அந்த நடைபாவியின் ஆழத்தைப் பார்க்கவேண்டுமென்று!

சீ. நேரமானது காரணமல்ல—சத்யநாராயண அய்யர் கார் (car) வரவே-அவர்தான் வருகிருரென்று நினைத்துகொண்டோம்—நீங்கள் அதில் இருந்தது எங்களுக்கு எப்படி தெரியும்?—அதில் நீங்கள் வரும்படி எப்படி நேர்ந்தது?

சா. அவர் வீட்டு வாசலண்டை போன உடன் எங்கள் மோட்டார் என்னமோ யந்திரம் கெட்டுப்போய் நின்றுவிட்டது. நாங்கள் என்ன செய்வது? அப்பொழுதே நேரமாய்விட்டது என்று அறிந்தவர்களாய், எப்படியாவது சிக்கிரம் உங்களை வந்து பார்க்கவேண்டுமென்று தீர்மானித்து, அவருடையவண்டியை இரவல்கேட்டோம்-உன்னைத் தேடிப்பார்க்க வேண்டுமென்று—அவரும் உடனே இசைந்தார், இந்த காரணத்தைச் சொல்லவே—ஆயினும் அவர் வண்டிக்காரன் ஏதோ வேலையாகப் போய் விட்டானும்! அதன் பேரில், எங்கள் ஷாபரை (Chaffeur) அவர் வண்டியை ஓட்டச்சொல்லி இங்கு விரைந்துவந்தோம்-இன்னும் கொஞ்சம் நாழிகைகழித்து வந்திருப்போமாகில்—

சீ. மாமா! என்பேரில் தவறுதான்! என்னை மன்னியுங்கள்! நான் அவசரப்பட்டது மிகவும் தப்பு—அதற்காகப் பிராயச்சித்தம் செய்து விட்டேனே!—இனி இந்த வார்த்தை யார் முன்னிலையிலும் எடுக்காதீர்கள்—இருவரும்.

வே. எந்த வார்த்தை? ஏதோ கற்பகம் கால்தவறி கிணற்றில் வீழ்ந்து விட்டாள்—அவளைக் காப்பாற்றப்போய் நீயும் விழுந்து விட்டாய்! இதில் என்ன தவறு? என்னடா கிழவா?

சா. [சிரித்துக்கொண்டே] ஆம் ஆம்! அப்படித்தான் நேர்ந்திருக்கவேண்டும். இனி இந்தப் பேச்சு வேண்டாம்.

சா ஏன் அக்காள்! உன் மாட்டுப்பெண் என்னமாயிருக்கிறாள்? உன் மனதிற்குப் பிடித்திருக்கிறதா?

ம. நன்றாகக் கேட்டீர்கள்! என் சின்னவயதில் நான்தான் மிகவும் அழகாயிருந்தேன் என்று சொல்வார்கள். அதற்குமேலிருக்கிறாள்!—சீதாராமா! நீ அதிர்ஷ்டசாலிதான்! எங்கம்மாளைப்போல அழகாயிருந்தால்தான் கண்ணாலம் பண்ணிகிவேன் இன்னு சொல்லிண்டிருந்ததற்கு, அதுக்குமேலே இருக்கா உன் ஆம்படையாள், போ!

வே. அதற்குத்தானே, சத்தியநாராயண ஐயர் பெண்ணைக் கட்டப்பார்த்தார் ஐயரவாள்?

ம. நன்றாகேட்டைக ஒரு பேச்சு! அவளுக்கும் இவளுக்கும் எங்கே ஈடுஜோடு?

ரா. நீதானே, அந்தப் பெண்ணை சீதாராமனுக்குக் கட்டிக் கொள்ளவேண்டும் என்று சொன்னாய்!

ம. ஆமாம், அப்போ இந்தமாதிரி ஒரு பெண் இருக்காள்—அவளை சீதாராமன் கட்டிகணு இன்னு ஆசைபடரான் இன்னு சொன்னேளா என்னிடம்?

ரா. அதைச் சொன்னால், எங்கே நீ ஆட்சேபனை பண்ணுகிறாயோ என்று சொல்லவில்லை.

ம. நானு ஆட்சேபணை பண்ணுவே? இந்த சமாசாரத்தை சாம்பமூர்த்தி சொன்ன உடனே ரொம்ப சந்தோஷம் இண்ணு ஒப்புக்கொண்டேனே! கட்டிகிணு வாழப்போரவன் இஷ்டமா நம்ப இஷ்டமா?

சா இந்த புத்தி, எல்லா தாயார் தகப்பன்மாருக்கும் இருந்தால், நம்ம தேசம் சீக்கிரம் சரிப்பட்டுபோம்.

ரா. நான் சொல்லவந்தது—இந்த ஜாதி வித்தியாசத்தைப் பற்றி—

ம. ஆமாம்! ஜாதியும்—வித்தியாசமும்! நீர்தான் ஏதோ சனுதனதர்மம் இன்னு கட்டிண்டிருக்கிறீர்! காலத்தோடே இதெல்லாம் மாறவேண்டியதுதானே! பழய காலத்துலே அந்த ஜாதிபேதமெல்லாம் இருக்கவேண்டி இருந்தது; இப்போ அதெல்லாம் நீங்கவேண்டியகாலம் வந்தூட்டுது! காலத்தை ஒத்து நாம் நடக்கவேண்டாமோ?

வெ. பேஷ்! அக்கா!—ஏனடா சாம்பமூர்த்தி! அக்காள் சொன்னதைக் கேட்டாயா?

சா. சபாஷ் அக்கா! இந்த புத்தி எல்லாருக்கும் இருக்கக் கூடாதா? ராமகிருஷ்ண ஐயரவாள்! நீங்கள் அந்த சனுதன சபை கான்பரன்சுக்கு பிரசிடெண்டாக இருப்பதை விட்டு விட்டு, மரகதம்மாளை பிரசிடெண்டாக நியமித்து விடுங்கள்!

ரா. நான் பிரசிடெண்டாக இருக்கமுடியாது என்று காலே எழுந்த உடன் தந்தி அனுப்பி விட்டேன்.

சீ. மிகவும் சந்தோஷம் அப்பா!

ம. சரி—இனிமேல் நடக்கவேண்டிய காரியத்தைப் பார்ப்போம்.

ரா. இன்னுமென்ன?

வெ. வேறென்ன—நிட்சயதார்த்தம் ஆகவேண்டியதுதான்!

ரா. [நகைத்துக்கொண்டே] ஓ! அதையும் நடத்திவிடுமே நீர்தான் வாத்தியாராயிருந்து.

சா. என்ன ஐயரவாள்? இந்த சூத்திரனுக்கு என்ன மந்திரம் தெரியும்!

வே. உன்னைவிட எனக்கு நன்றாய்தெரியும்! இதோ நடத்து கிறேன் பார்! என்ன ஐயரவாள் அனுக்ஞைதானே?

ரா. செய்யுங்கள்

வே. என்ன முதலியாரவாள்! உத்திரவுதானே? என்ன வாயைத்திறவாது உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்?

த. நான் எங்கே வாயைத்திறப்பது? எல்லோருமாகச் சேர்ந்து நீங்களே எல்லாம் பேசிவிடுகிறீர்களே.

வே. என்னவென்றாலும்—பெண்ணின் தகப்பனாராச்சே—உங்கள் உத்திரவில்லாமல் நடக்கலாமா?

த. அவளுயிரை இரண்டுமுறை காப்பாற்றினீர்கள் நீங்கள்—ஆகவே நீங்களும் அவளுக்கு தந்தையின் ஸ்தானம்தான்.

வே. என்னவென்றாலும் நீர் பெற்ற தந்தையோ இல்லையோ?

த. [சிரித்துக்கொண்டே] எனக்கு ஆட்சேபனை இல்லையென்று நேற்று சாயங்காலமே சொல்லிவிட்டேனே!

வே. சரி ஆனால்—ஆரம்பிக்கிறேன் [நிட்சயதார்த்த ஆரம்ப மந்திரத்தைச் சொல்லி] ஐயரவாள், உம்முடைய பாட்டனார் பெயர் என்ன?

ரா. என் பெயர்தான்!

வே. உம்—ராமகிருஷ்ண சர்மா நப்தாவும், முத்துகிருஷ்ண சர்மா பௌத்திரனும், ராமகிருஷ்ண சர்மாவின் புத்திரனுமான சீதாராம சர்மாவுக்கும்,—முதலியாரவாள், உங்கள் பாட்டனார் பெயர்?

த. ஏகாம்பர முதலியார்.

வே உம்—ஏகாம்பர முதலியார், உங்கள் தகப்பனார் பெயர்?

த. திருஞான முதலியார்.

வே. திருஞான முதலியார் பௌத்திரியும், தர்மலிங்க முதலியார் புத்திரியுமான—கற்பகாம்பாளுக்கும்—விவாக சுப

முகூர்த்த நிச்சயம்! சுபமஸ்து!—ஏய், பிராம்மணா, ததாஸ்து சொல்லும், இல்லாப்போனா, தட்சிணை கிடையாது!

சா. ததாஸ்து!

ரா. ததாஸ்து!

வே. சரி—தட்சிணை? [எல்லோரும் நகைக்கின்றனர்.]

த. வெங்கடேசம்—இதையெல்லாம் எங்கு கற்றுவைத்தாய்?

வே. பிராம்மணர்களெல்லாம் மறந்துபோய் விடுகிறார்களென்று —நான் கற்றுவைத்தேன். தட்சிணை எடுமையா? ஓஹோ! அதைக் கொடுக்காமல் ஏமாற்றலாம் என்று பார்க்கிறீரோ?

த. தட்சிணையா? என் கையிலே ரூபாயில்லையே இப்போ?

வே. அதெல்லாம் உதவாது—ஏதாவது கொடும் கையிலிருப்பதை—

த. கையில் இதுதான் இருக்கிறது தற்காலம்—வாங்கிக் கொள்ளும்.

[தன் கையில் அணிந்திருந்த மிகவும் விலையுயர்ந்த பச்சைக்கல் மோதிரத்தைக் கொடுக்கிறார்.]

வே. இதென்ன! இது ஆயிரம் ரூபாய் பெறுமே! இதை வைத்துக்கொள்ளும் வேடிக்கைக்குக் கேட்டேன்.

த. ஒருமுறை கொடுத்ததை வாங்கமாட்டேன் மறுபடியும்—கொடுத்தது கொடுத்ததே.

வே. சரி—அப்படியானால்—எனக்குத்தானே கொடுத்துவிட்டீர்? இந்தா அம்மா கற்பகம், உனக்கு ஸ்ரீதனமாகக் கொடுக்கிறேன், வாங்கிக்கொள்—

க. வேண்டாம் சிற்றப்பா! நீங்கள்தான் போட்டுக்கொள்ளுங்கள்.

வே. ஏனம்மா! நாங்களிருவரும், கையிலிருக்கும் வெறும் பொன்மோதிரம் தவிர, வேறு எதையாவது போட்டுக் கொண்டிருக்கும் பொழுது பார்த்திருக்கிறாயா? எனக்கு

வேண்டாம் அம்மா, போட்டுக்கொள்—உன் விரலில் அழகாயிருக்கும்—ஓகோ! உன் ஆத்துக்காரர் உத்திர வில்லாமல் வாங்கிக்கொள்ள மாட்டாயோ! அப்பா, சீதாராமா! நான் சிற்றப்பா கொடுத்தால் வாங்கிக்கொள் வதற்கென்னடா—வாங்கிக்கொள்ளச்சொல்.

சீ. வாங்கிக்கொள் கற்பகம்—அவர் அவ்வளவு சொல்லும் போது நீ மறுக்கலாகாது.

[கற்பகம் அம்மோதிரத்தை வாங்கிக் கொள்கிறாள்.]

சா. ஐயரவாள்! எனக்கு தட்சிணை?

ரா. நீ என்ன செய்தாய்?

சா. நான்—ததாஸ்து சொன்னேனே?

ரா. ஆம் ஆம், உனக்கும் கொடுக்கவேண்டியதுதான்; இந்தா.

[தன் கையிலிருந்த வைரக்கல் மோதிரத் தைக் கழற்றிக்கொடுக்கிறார்.]

சா. இந்தா சீதாராமா, இதை நீ வாங்கிக்கொள்.

சீ. எனக்கென்னத்திற்கு மாமா?

சா. அடே அதனப்பிரசங்கி! மாமா கொடுத்தால் நீ வாங்கிக் கொள்ள வேண்டாமா?

ரா. ஏனையா, என் பிள்ளைக்குக் கொடுக்கவா உமக்குக் கொடுத்தேன்?

சா. நீர் பெரியவர் ஆச்சுதே, இது தெரியாமலாபோச்சு? எனக்குக் கொடுத்தபின் நான் அதை என்ன செய்கிறேன் என்று நீர் யார் என்னைக் கேட்பதற்கு? [சீதாராமன் கையில் கொடுக்கிறார், அவன் அதை வாங்கிக்கொண்ட பிறகு] ஆனாலும்- சீதாராமா! இந்த ரவை மோதிரம் உன் கைக்கு சரியா யிராது என்று தோற்றுகிறது.

வே. கற்பகம், அதைத்தான் நானும் சொல்ல வாயெடுத்தேன்! ஆண்பிள்ளைகள் தானம்மா பச்சை மோதிரம் போட்டுக் கொள்வது அழகு!

சீ. இந்தா கற்பகம்—இதை நீ எடுத்துக்கொள்.

[வைரமோதிரத்தைக் கழற்றி கற்பகத்திடம் கொடுக்கிறான்.]

வே. அடே! சீதாராமா! நீ என்னமடா ஐ. சி. எஸ். பாஸ் பண்ணினாய்? அதுவும் முதலாக! எக்ஜாமினர்களுக்கெல்லாம் ஏதாவது லஞ்சம் கொடுத்தாயா என்ன? ஒரு மோதிரத்தை ஒரு பெண் கையில் போடத் தெரியாதவன்! நீ என்னமாகத்தான் அசிஸ்டென்ட் கலெக்டர் வேலை பண்ணுகிறாயோ?

சீ. [சிரித்து] இதற்கா இந்த யுக்தி எடுத்தீர்!

[அம்மோதிரத்தை கற்பகத்தின் விரலில் அணிகிறான்.]

சா. நீ போட்டு விடம்மா, அவன் கையில்-உன் மோதிரத்தை.

க. [புன்சிரிப்புடன்] அதற்காகத்தானே என் கையிலேயே வைத்துக்கொண்டிருந்தேன்.

சா. பார்த்தாயா! பெரியம்மா! என் பெண்தான் சமர்த்து!

வே. அதை நான் ஒப்புக்கொள்ளவேண்டியதுதான்!

சீ. சந்தேகமென்ன? சின்ன மாமா, உங்களுக்குத் தெரியுமோ என்னவோ, நாங்கள் இருவரும் பி. ஏ. பரீட்சைக்குப் போனபோது கற்பகம் எனக்குமேல் இரண்டு மார்க் வாங்கினாள் இங்கிலீஷில்.

ம. என்ன! கற்பகம்—பாஸ் பண்ணியிருக்கிறாளா என்ன?

சீ. பி. ஏ. பஸ்டு (first) கிளாஸிலே பாஸ் பண்ணியிருக்கிறாள் அம்மா!

ம. அதை யேன் என்னிடம் சொல்லவில்லை கற்பகம்? காலை முதல் இதுவரையில் பேசிக்கொண்டிருந்தவள் ஒரு வார்த்தையாவது இங்கிலீஷ் பேசவில்லையே! இந்த காலத்து குட்டிகள் நாலுவார்த்தை இங்கிலீஷ்படிப்பதன் முன், தமிழ் பாஷை மறந்து விட்டவர்கள் போல் அதைப் பொறித்துக்கொட்டுகிறார்களே!

சா. அவள் தகப்பனார் அப்படி நல்லவழியில் அவளைக் கொண்டுவந்திருக்கிறார் !—

தோட்டக்காரப்பையன் தான்தோன்றி வருகிறான்.

தா. ஐயா—இந்த ஊர் கிராம முனிசிப்பு உங்களை பார்க்கணுமாம்.

சா. அவனா ? வரச்சொல். [தான்தோன்றி போகிறான்.]

ரா.தா. என்ன சமாசாரம் ?

சா. உம் — ஒன்றுமில்லை — பயப்படாதீர்கள் — நம்முடைய மனுஷன் அவன் !

கிராம முன்சீப் வருகிறான்.

கி.மு. நமஸ்காரங்கோ ! எல்லாருக்கும்.

சா. என்னடா சமாசாரம் நடராஜம் ?

கி.மு. நேற்று ராத்திரி—நம்ப—கிணத்துலே—ரெண்டுபேரு—உழுந்துட்டாங்க இண்ணு கேள்விபட்டேன்—அதைப் பற்றி விசாரிக்க வந்தேன்.

சா. அடே ! நன்றாக கிராம முன்சீப் வேலை பார்க்கிறாய் ? நேற்று ராத்திரி 9 மணிக்கு நடந்தசமாசாரத்தை இன்று காலை 10 மணிக்கு விசாரிக்கிறாயோ?

கி.மு. இல்லை—மன்னிக்கவேணும் — நேத்து ராத்திரி—வீட்டிலே—பெண்சாதி பிரசவிச்சா ! அந்த காபுராவில் இருந்து விட்டேன்.

சா. உன் பெண்டாட்டியா ? சந்தோஷம் ! ஆண்குழந்தையோ பெண்குழந்தையோ ?

கி.மு. ஆண்குழந்தயுங்க.

சா. நிரம்பசந்தோஷம் ! தாயாரும் பிள்ளையும் க்ஷேமமாயிருக்கிறார்களோ இல்லையோ ?

கி.மு. உங்கதயவிலே—க்ஷேமமாயிருக்கிறாங்க.

சா. என் தயவென்னடா, சாமி தயவு என்று சொல். நீ, ஒரு பெண் கால்தவறி நடபாவிக்குள் விழுந்து விட்டது—

அதை எடுக்கப்போன ஒரு பிள்ளையாண்டானும் விழுந்து விட்டார், அருகிலிருந்தவர்கள் எடுத்து விட்டார்கள்—என்று எழுதிவிடு.

கி.மு. அப்படியே! என் பேரில் கொஞ்சம் தயவிருக்கவேணும்.

சா. இன்னும் என்னடா?

கி.மு. வேறொன்றுமில்லே—நேத்தே வந்து விசாரிக்கலே இண்ணு என் பேர் லே கம்பிளெயின்ட் பண்ணிவிடாதீர்கள்!

சா. சீச்சி! அப்படி செய்வேனா? அதுவும் உனக்கு இப்பொழுது பிள்ளை பிறந்திருக்கிறது! பயப்படாதே—போய் வா!

[நடராஜன் எல்லோருக்கும் நமஸ்கரித்து விட்டுப் போகிறான்.]

வே. பொய்ம்மையும் வாய்மையிட த்த—

சா. புரைதீர்ந்த—நன்மைபய க்குமெனின்.

து. உங்களுக்கு இரட்டையர் என்று சரியான பெயர் வைத்தாள் கற்பகம்!—உங்களுக்கு இவனை முன்பே தெரியுமோ?

சா. தெரியும், இவனை இந்த வேலையில் நான்தான் சிபாரிசு செய்து வைத்தேன்.

சீ. சரியானவனைத்தான் சிபாரிசு செய்தீர்! நன்றாக வேலை பார்க்கிறான்!

சா. தம்பி சீதாராமா! அவன் சரியாக வேலை பார்த்திருந்தால்—உன் கதி யென்னவாயிருக்கும்—நிஜத்தைச் சொல்லவா அவனிடம்—கூப்பிட்டு?

க. சிற்றப்பா! இதைப்பற்றி மறுபடியும் பேசுவதில்லை என்று எனக்கு பிரமாணம் செய்து கொடுத்தீர் இல்லையோ?

சா. ஆனால் அவனைப் பிரமாணம் செய்து கொடுக்கச்சொல், மறுபடியும் இம்மாதிரியான தப்பு தண்டா வேலை செய்வதில்லையென்று! முன்னே ஒரு தரம் சுட்டுக்கொள்ளப் பார்த்தான்! இப்பொழுது என்ன வென்றால்—

ரா. சாம்பமூர்த்தி! அந்த ரகசியம் உனக்கு எப்படி தெரிந்தது?

சா. எல்லாம் ஜோசியம் பார்த்தேன்—முதல் முதல் அந்த காயத்தைப்பார்த்தவுடனே எனக்குத் தெரிந்து போச்சுது.

[கற்பகம் சீதாராமன் காதில் ஏதோ சொல்கிறாள்.]

சீ. இல்லைமாமா! சத்தியமாக நான் இனி அம்மாதிரி ஒன்றும் செய்வதில்லை! [கையடித்துக் கொடுக்கிறான்.]

சா. ஞாபகமிருக்கட்டும்! பயமுமிருக்கட்டும்! எப்பொழுதாவது கற்பகத்தின் மனதிற்கு விரோதமாக நடந்தாயோ—அவள் கண்ணில் துளி தண்ணீர் வந்ததா, உன்னை இழுத்து விடுவேன் வெளியில்!

சீ. அதைப்பற்றி உமக்கு விசாரமே வேண்டாம்.

ரா. என்ன—தர்மலிங்கம், கலியாணத்திற்கு சீக்கிரம் ஒரு நாள் பார்த்துச் சொல்லுகிறீர்களா?

தர். உன் இஷ்டம்.

ரா. என் இஷ்டமாவது? இது பெண்வீட்டுக்காரர் இஷ்டம்! நான் ஏன் கேட்டேன் என்றால்—சீக்கிரத்தில் நாள் வைத்துக் கொண்டால் நல்லது; என் சம்சாரத்திற்கும்—உடம்பு—அவ்வளவாகச் சவுக்கியமில்லை—

வே. அதைப்பற்றி உங்களுக்கு கவலை வேண்டாம். நான் ஜோஸ்யம் சொல்கிறேன் பாருங்கள்—அம்மாளுக்கு இனி உடம்பு எல்லாம் சவுக்கியமாய் விடும்.

ம. உம்முடைய வாக்குபலிக்குமாக!-எதற்கும் இந்தமாதத்திற்குள்ளாக வைத்துக்கொண்டால் நல்லது! பிறகு சாதுர்மாஸ்யம் வந்துவிடுகிறது.

சீ. எனக்கு லீவ் இன்னும் இருபதுநாள் தானிருக்கிறது.

சா. ஏனடா! கலியாணத்திற்கு அவ்வளவு அவசரமாயிருக்கிறதோ! இந்தக் காலத்துப் பிள்ளைகளை நம்பவே கூடாது, கலியாணம் வேண்டாம் வேண்டாம் என்று

சொல்லிகொண்டிருக்கிறது, அப்புறம் சீக்கிரம் சீக்கிரம் நாள் வைத்துக்கொள்ளுங்கள் என்கிறது!

தர். அப்படியே, நாள் பார்த்துச் சொல்லுகிறேன்-சீக்கிரத்தில்.

சா. ஆமாம், கலியாணம் எந்த வீட்டில் நடக்கப் போகிறது?

தர். ஏன்? என் வீட்டில்.

சா. இல்லை—எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது-உங்கள் வீட்டில் வைத்துக்கொண்டால்—உங்களுடைய பந்துக்களெல்லாம் பிராம்பண மாப்பிள்ளைக்கு பெண்ணைக் கொடுக்கிறார் என்று ஏதாவது கலகம் செய்வார்கள்! ராமகிருஷ்ண ஐயர் வீட்டில் வைத்துக்கொண்டால்-சூத்திரப் பெண்ணைக்கட்டிக்கொள்ளுகிறார் தன் பிள்ளைக்கென்று அவர் பந்துக்களெல்லாம் கலகம் செய்வார்கள். திருவொற்றியூரில்-இந்த எங்கள் பங்களாவில் வைத்துக்கொள்ளுங்கள்—யார் என்ன கலகம் செய்கிறார்களோ—நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம்.

தர். உங்களிஷ்டம்.

ரா. ஆமாம், நீ சொல்வதும் நல்லயோசனைத்தான்.

ம. உம்! அதைநான் யோசிக்கவில்லை—என்ன—பிராம்மணாளெல்லாம்—கலியாணத்திற்கு வரமாட்டார்களா?

சா. அக்காள்! நீ யொன்றும்பயப்படாதே அம்மா! அந்த ஏற்பாடுகளை எல்லாம் எனக்கு விட்டுவிடு. கலியாணத்திற்கு வருகிற பிராம்மணாளுக்கெல்லாம் நாலுநாள் சாப்பாடு, 5 ரூபாய் தட்சிணை என்று மெல்ல ஒரு வைதீகப் பிராம்மணனிடம் 'ரகசியமாய்ச்' சொல்லிவிடுகிறேன். எத்தனை பிராம்மணர்கள் வந்து சேர்கிறார்கள் பார் பிறகு? நான் யோசிப்பதெல்லாம் அத்தனை பெயருக்கும் இந்த செலவெல்லாம் என்னால் பொறுக்க முடியுமா என்பது தான்!

தர். சாம்பமூர்த்தி! அந்த கவலை உனக்கு ஏன்? நான் கொடுக்கிறேன் எவ்வளவு வேண்டுமானாலும்.

சா. என்னால் கொடுக்க முடியாதா என்ன? நான் வேடிக்கைக்குச் சொன்னேன். ஆயினும் மற்ற செலவெல்லாம் எவ்வளவு வேண்டுமானாலும் செய்யுங்கள். வேண்டாமென்று சொல்லவில்லை; இந்த போஜன செலவும், பூரி தட்சிணை செலவும் என்னுடையதாயிருக்கவேண்டும். இதற்கு மாத்திரம் ஆட்சேபனை சொல்லாதீர்.

தர். இது நியாயமல்லவே—

சா. நான் வளர்த்த பெண்ணிற்கு நான் கலியாணத்திற்காக செலவு செய்கிறேன்—நீர் என்ன அதற்கு ஆட்சேபனை சொல்வது?

வே. முதலியாரவாள்! ஆம் என்று ஒப்புக்கொள்ளும், இந்தக் கிழம் பெரிய பிடிவாதக்காரன்—

சா. அன்றியும்— அவள் உயிரை—

தர். இல்லை இல்லையப்பா! உன்னிஷ்டப்படி செய்!

சா. ஆ! கொஞ்சம்—பயமிருக்கட்டும்.

திருநாவுக்கரசும், வேதமும் மெத்தையேறி வருகிறார்கள்.

ம. வேதம், இத்தனிநாழி எங்கிருந்தே?

வே. நாங்க—இரண்டுபேரும்—வௌாடனோம்—

ம. யார் அந்தக்குழந்தை?

க. என் தம்பி.

ம. அப்படியா—வாடாப்பா இப்படி [திருநாவுக்கரசு அருகில் போகிறான்] உன்பெயர் என்ன?

தி. திருநாவுக்கரசு.

ம. திருநாவுக்கரசு—என்ன?

தி. வெறும் திருநாவுக்கரசுதான்—மொதலியார் கிதலியார் எல்லாம் கிடையாது. குண்டுமல்லி தாதா—அதெல்லாம் சொல்லக்கூடாது இண்ணு சொன்னாரே!

ம. புத்திசாலியா யிருக்கிறான்—அப்பா [சீதாராமனைக்காட்டி] இது யார் தெரியுமா உனக்கு?

தி. தெரியும்—என்—என்—மச்சினரு.

[எல்லோரும் ஆச்சரியப்படுகின்றனர்.]

ம அடடா-இதற்குள்ளாக-இவனுக்கெப்படி இது தெரிந்தது? எப்படியப்பா உனக்கு மைத்துனர்?

தி. நானு — அவரு — தங்கச்சியெ கட்டிக்க போரேனே! [எல்லோரும் நகைக்கின்றனர்] ஏன்—அல்லாரும் சிரிக்கிராங்க அக்கா?

க. உன்—அதோ—அவர்களைக்கேள்.

தி. ஏம்மா, நானு நண்ணு படிச்சி பாஸ்பண்ணு, எனக்கு வேதத்தைக்கட்டிக் கொடுக்க மாட்டைங்க?

ம. [அவனைமடியில் உட்காரவைத்து] நாம் ஏன் அப்படிச்செய்யலாகாது? முதலியார் பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொள்ளும் பொழுது, முதலியார் பிள்ளைக்கு நமது பெண்ணை ஏன் கொடுக்கலாகாது?

ரா திருநாவுக்கரசு, நீ மாத்திரம் புத்திசாலியாய் நன்றாய்ப் படித்து—உன் அக்காளைப்போல் பாஸ்பண்ணு—உனக்கு வேதத்தைக் கொடுக்கிறேன்.

தி. ஆவுட்டும்—எல்லா ப்பரீட்சையும் பாஸ் பண்ணிவிட மாட்டேனு!

ரா. தர்மலிங்கம்!

தர். ராமகிருஷ்ணன்!—உன் மனதிலிருப்பதைச் சொல்லவா நான்?

ரா. சொல் பார்ப்போம்.

தர். நாமிருவரும் காலேஜில் படித்த பொழுது—ஆண்டர்சன் ஹாலில்—வே பேபர் பத்திராதிபர், பிரசங்கத்தைக் கேட்டபிறகு—ஒருவருக்கு ஒருவர் செய்து கொண்ட பிரதிக்ஞையைப்பற்றி—இப்பொழுது நினைக்கிறாய்.

ரா. ஆம்—வாஸ்தவத்தில்.

சா.வே. என்ன பிரதிக்ஞை அது? கேட்கலாமா?

ரா. வேறொன்றுமில்லை — எங்களிருவருக்கும் ஆண் பெண் குழந்தைகள் பிறந்தால், ஒருவர் பெண்ணை மற்றவர் பிள்ளைக்குக் கொடுத்து, அவரது பெண்ணை தன் பிள்ளைக்குக் கொண்டுக் கொள்ளவேண்டுமென்று பிரதிக்ஞை செய்தோம்.

சா. அடடா! அப்படியா சமாசாரம்! இந்த ரகசியம் எனக்கு முன்பே தெரியாமற்போயிற்றே! தெரிந்திருந்தால் நான் இவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டியதில்லையே! அதிருக்கட்டும்—அவ்வளவு அந்யோன்யமாயிருந்தவர்களா—பிறகு நாயும் பூனையும்போல்-சண்டை போட்டுக் கொண்டிருந்தீர்கள் இத்தனை வருஷமாக!

வே. அடே! சின்ன கிழம்! பெரியவர்களை அப்படிச் சொல்லாதே!

சா. இல்லை—நான் பேச்சுக்குச் சொன்னேன்.

ரா. எங்கள் பிராரப்தம்! முதலில் அந்யோன்யமாயிருந்து, பிறகு பிரிந்து, மறுபடியும் இப்படி ஒருங்கு சேரவேண்டுமென்றிருந்தாற் போலிருக்கிறது.

வே. இனிமேல் முன்போல் சண்டைபோட மாட்டீர்களே?

ரா.-தர். [நகைத்துக் கொண்டே] மாட்டோம்.

ரா. நாங்கள் இரண்டு பெயரும் ஒன்றாய்ச் சேர்ந்து மற்றவர்களுடன் சண்டை போடவேண்டும்போலிருக்கிறது, என் தர்மலிங்கம்?

தர். அப்படித்தான்—எனக்கும் தோற்றுகிறது.

வே. அதெல்லாம் பயப்படாதீர்கள் என்றால்—நாம் நான்கு பெயர் இருக்கிறோம்—வருகிறவர்களெல்லாம் வரட்டும்—ஒரு கைபார்த்து விடுவோம்—நாம் செய்வது தவறல்ல என்று நமக்கு உறுதியாய்த்தோன்றும் பொழுது நமக்கு பயமென்ன? நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளுங்கள் — இவ்விஷயங்களிலெல்லாம் முதல் அடி எடுத்து வைப்பதுதான் கஷ்டம்! அது ஆனவுடன் பிறகு

எல்லாம் சுலபம் தான். நாளாவட்டத்தில் எல்லோரும் நம்முடையவழிக்கு வந்து விடுவார்கள். நாற்பது வருஷத்திற்கு முன் கப்பலில் பிராம்மணன் ஏறுவதென்றால் பெரிய தப்பு, அதற்கு பிராயச்சித்தம் செய்யவேண்டும், அது செய்யவேண்டும், இது செய்யவேண்டும் என்று காபுரா பண்ணிக்கொண்டிருந்தார்கள்; இப்பொழுது சீமைக்குப் போய் வந்தாலும் யார் கவனிக்கிறார்கள்? முப்பது வருடங்களுக்கு முன்பாக சூத்திரன் பார்த்தால் பிராம்மணன் சாப்பிடமாட்டான் தண்ணீரையும்! இப்பொழுது ஏதோ சில வைதீகர்கள் தவிர, மற்றெல்லோரும் ஒன்றாய் உட்கார்ந்து சாப்பிடுகிறார்களா இல்லையா? அதேமாதிரி—இந்த கொள்வனை கொடுப்பனை வழக்கமும் இன்னும பத்துவருடங்களுக்கெல்லாம் சகஜமாய்ப் போகும்.

சா. அடே பெரிய கிழம்—நிறுத்து உன் பிரசங்கத்தை-இவ்வளவு போதும் இன்றைக்கு—மற்றதையெல்லாம் இன்னொரு நாளைக்கு வைத்துக்கொள்—அவர்கள் எல்லாம் வீட்டிற்குப்போய்ச் சாப்பிடவேண்டாமா?

வே. ஏன்? இங்கேயே சாப்பிடட்டுமே.

தா். இல்லை, எங்களுக்கு நேரமாகிறது—உத்திரவு கொடுக்க வேணும். [எழுந்திருக்கிறார்.]

ரா. நாங்களும் போய்வரவேண்டும் — உத்தரவு கொடுக்க வேணும். [எழுந்திருக்கிறார்.]

[கற்பகம் தன் தகப்பனார் காதில் ஏதோ சொல்கிறாள்.]

தா். உன் சிற்றப்பாவைக் கேளம்மா—

சா. என்னம்மா அது?

[கற்பகம் அவர் காதில் ஏதோ சொல்கிறாள்.]

ம. கற்பகம், இனி உனக்கென்ன லஜ்ஜை என்னிடம்—நான் உன் அம்மாவாகி விட்டேனே—என்னைக்கேளேன்.

சா. வேறொன்றுமில்லை—கற்பகம் தன் மாமனார் மாமியாரைச் சேவித்துக்கொண்டு போகவேண்டுமாம்.

ரா. ஆஹா ! மிகவும் சந்தோஷம். அதற்குத் தடையென்ன?

வே. அடேய்! சீதாராமா நீயும் உன் தகப்பனார் தாயாரை சேவித்துக்கொள்ளேன்.

சீ. அதை நீங்கள் சொல்வதென்ன? நானே செய்பலமென்று தானிருந்தேன்—தர்மலிங்க முதலியார்—நீங்களும் அப்படி நில்லுங்கள்.

வே. யாரு? யார் அவர்?

சீ. மாமா—நீங்களும் கொஞ்சம் தயவு செய்து அவர்கள் பக்கமாக நில்லுங்கள்.

வே. இதைமாத்திரம் நீ சொல்வதென்ன—நாங்களாக நிற்கிறோம். வாடா சின்ன கிழவா !

[இவர்களெல்லாம் ஒருபுறம் நிற்க, சீதாராமனும் கற்பகமும் அவர்களைச் சேவித்துக் கொள்கின்றனர்.]

ரா சா. 'சீக்கிரமேவ விவாகப்பிராப்திரஸ்து சுபுத்ராவாப்திரஸ்து !"

வே. ததாஸ்து !

சா. ததாஸ்து சொல்லத்தான் தெரியும்! பிராம்மணனாகப் பிறந்தையே !

வே மற்றதெல்லாம்—என் வாயில் நுழையவில்லையே !

சா. ஆமாம்—சம்ஸ்கிருதம் படித்தாலல்லவோ வரும்.

வே. எனக்குப் பதிலாகத்தான் நீ எல்லாம் படித்திருக்கிறாயே.

சா. இல்லையோ ?

ரா. சரி ! உங்கள் சண்டையை இப்பொழுது ஆரம்பிக்காதீர்கள்—நாங்கள் எல்லாம் போன பிறகு எவ்வளவு வேண்டுமென்றாலும் சண்டை போடுங்கள்.

சா. அதில் என்ன பிரயோசனம்?

ரா. சாம்பமூர்த்தி—வெங்கடேசம்-நில் லுங்களிருவரும், எங்களிரண்டு குடும்பங்களுக்கும் செய்த பரோபகாரத்திற்கு—

சா. அடடா! இதோவந்துவிட்டேன்—மோடார் வண்டிகளை கொண்டு வரச்சொல்லமறந்தேன்—

[வெங்கடேச முதலியாரை இழுத்துக் கொண்டு விரைந்து கீழே இறங்குகிறார். மற்றவர்க ளெல்லாம் இறங்கிப்போகின்றனர்.]

காட்சி முடிகிறது.



## பிற்கூறு

இடம்—திருவொற்றியூரில் புதிதாய்க் கட்டப்பட்ட பங்களாவின் கீழ்ஹால்· ஒருபுறம் தொட்டில் சிங்காரித்திருக்கிறது. மற்றொருபுறம் சாம்பமூர்த்தி ஐயர் கண்ணைக் கட்டிக்கொண்டு நடுவில் உட்கார்ந்திருக்க திருநாவுக்கரசு, வேதம் முதலிய ஐந்தாறு குழந்தைகள் அவர் தலையில் மாறிமாறி குட்டிக் கொண்டிருக்கின்றனர்.

சா. [கண்மூடிய வண்ணம்] ராமதுரை! வேதம்! முருகேசன்! —அரசு!

வேங்கடேச முதலியார் வருகிறார்.

வே. ஓ! இங்கேயா இருக்கிறான்!

[சாம்பமூர்த்தி தலையில் நன்றாய்க்குட்டுகிறார்.]

சா. வெங்கடேசன்! [குழந்தைகளெல்லாம் கைகொட்டி நகைக்கின்றனர்; கண்ணை அவிழ்த்து] நீ தான் கண்ணைக்கட்டிக் கொள்ள வேண்டும்!

வே. ஆமாம்! கிழக்குழந்தை விளையாடுகிறது! ஐம்பது வயதாச்சுது—இன்னும் விளையாட்டு!

சா. உனக்கு தான் ஐம்பது வயதாச்சுது! எனக்கின்னும் ஆகவில்லை—ஆறுமாசம் குறைவு!

வே. அப்பொழுது நீ சின்னகுழந்தைதான்! எழுந்திருடா—அதோ உள்ளே கூப்பிடுகிறார்கள்.

சா. என்ன சமாசாரம்?

வே. வேறொன்றுமில்லை—குழந்தைக்கு என்ன பெயர் வைக்கிறது என்று இந்தக்கிழக்குழந்தைகளெல்லாம் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறதுங்கள்! நான் உன் பெயர் வைக்கச்சொன்னேன், உன்னைக்கேட்கவேண்டுமாம்.

சா. அதெல்லாம் உதவாது! என்பெயர் வைக்கக்கூடாது! நான் போய்ச்சொல்லி விடுகிறேன்—உன் பெயர் வைக்கச் சொல்லி— [விரைந்து போகிறார்.]

வே அடடே! வேண்டாமடா!—அவன் கேட்கமாட்டான்!

குழந்தைகள். ரோஜாப்பூ தாதா! ரோஜாப்பூ தாதா! என்னமாறு புதுசவிளையாட்டு சொல்லுங்க தாதா!

வே. புதுவிளையாட்டா! உம்—நான் சின்னபாபாவாம்! என்னை தொட்டிலிலே போட்டு நீங்களெல்லாம் தாலாட்டுவீர்களாம்.

குழந்தைகள். உம் உம்! ஆவட்டும்! ஆவட்டும்!

[வெங்கடேச முதலியார் தொட்டிலில் காலை மடக்கிக்கொண்டு கஷ்டப்பட்டுப்படுத்துக் கொள்ள, குழந்தைகளெல்லாம் பெருங் கூச்சலுடன், அதையாட்டுகின்றனர்]

சாம்பமூர்த்தி ஐயர் வருகிறார்.

சா. ஓ! இதுதானே கூச்சல்!—அடே பெரிய கிழவா! என்னை விளையாடக்கூடாது என்று சொல்லிவிட்டு, இந்த சின்னகை குழந்தை விளையாடுகிறதா? எழுந்திரடா! ஜாக்கிரதையாக! புஷ்பம் சிங்காரித்திருப்பதை யெல்லாம் கெடுத்து விடாதே!

வே. நான் விளையாடினேனே! இந்தத்தொட்டிலில் தான் என் தாயார் நான் பிறந்தபொழுது என்னை வளர்த்தி, ஆட்டினார்களாம், அது எப்படியிருக்கிறது என்று இப்பொழுது பார்த்தேன்— அதிருக்கட்டும் என்ன தீர்மானித்தீர்கள்?

சா. உன் பெயரை நான் வைக்கச்சொன்னால்—அது கூடாதென்று முன்னமே நீ ஆட்சேபித்ததாகச் சொன்னார்கள்— கடைசியாக ராமலிங்கம் என்று பெயர் வைக்கச் சொன்னேன்.

வே. அதென்னடா அது! மக்கு! ராமலிங்கம் என்னடா?

சா. நீ தான்மக்கு! இது தெரிய வில்லையே! ராம, லிங்கம், தகப்பனைப்பெற்ற பாட்டன் பெயரில்பாதி, தாயாரைப் பெற்ற பாட்டன் பெயரில்பாதி!

வே. ஓ! சரிதான்—உனக்குக்கொஞ்சம் புத்தியிருக்கிறது.

சா. கொஞ்சமா? உனக்கிருப்பதைவிட அதிகமாயிருக்கிறது.

வே. அது கிடையாது!

சா. இருக்கிறது!

வே. இல்லை!

ராமகிருஷ்ணஐயரும் தர்மலிங்க முதலியாரும் வருகிருர்கள்.

ரா. என்ன! ஆரம்பித்தீர்களா, உங்கள் சண்டை? இன்றைக்கு ஒன்றும் இல்லாதிருந்ததென்று பார்த்தேன்.

சா. நீங்கள்தான் சொல்லுங்கள்! இந்தக்கிழவன் எனக்கு புத்தி இல்லையென்று சொல்கிறுன்!

வே. அடியோடு இல்லையென்று சொன்னேனு நான்?

சா. பார்த்தீர்களா அவன் சொல்வதை!

தர். ஆமாம்! நீங்கள் இரண்டு பெயரும் — எப்பொழுதும் வாயால்தானே சண்டை போடுகிறீர்கள்!

சா. கையாலே சண்டை போடவா! வரச்சொல்லுங்கள்! ஒரு கை பார்த்துவிடுகிறேன்!

வே. எல்லாம் நீ பெரிய வஸ்தாதிதான்! குழந்தையை தொட்டிலில் போட லக்னம் வைத்தாயே, அது என்னமாய்ப் போகிறது?

சா. ஆமாம்— அதைமறந்தேன் [கதவண்டைபோய்] கற்பகம், கொண்டுவா அம்மா சீக்கிரம் குழந்தையை.

[கற்பகம், கைக்குழந்தயை எந்திவர,அவள் பின்னல் சீதாராமன் தன் தாயாரைக் கைப்பிடித்து அழைத்து வருகிருன். சில பெண்கள் பின்னல் வருகின்றனர்.]

வே. [ஒரு புறமாக] அடடே சாம்பமூர்த்தி! இந்த கிழவி எழுந்திருந்து நடக்கிறுடா!

சா. [ஒரு புறமாக] பேரன் பிறந்த சந்தோஷம்! கற்பகம்—லக்னம் வந்து விட்டது! தொட்டிலில் போடம்மா குழந்தையை.

க. அம்மா—உங்கள் கையால் போடுங்கள்.

ம. கற்பகம்—என் கை—நடுக்கிறது பலயீனத்தால்—உன் மாமாவைப் போடச் சொல்.

க. மாமா—

[ராமகிருஷ்ணஐயரிடம் குழந்தையைக் கொடுக்கப்போகிருள்.]

ரா. கற்பகம்! நான் சொல்வதைக்கேளம்மா! உன் தகப்பனார் கையில் கொடுத்துத் தொட்டிலில் இடச்சொல்.

க. அப்பா— [தகப்பனாரிடம் போகிறாள்.]

தர். கற்பகம், உன் புருஷனிடம் கொடுத்து தொட்டிலிலிடச் சொல்.

க. நீங்கள் — [புருஷனருகில் போகிறாள்.]

சீ. அதெல்லாம் உதவாது! உன் சிற்றப்பாகையால் போடச் சொல்—அவர்தானே லக்னம் எல்லாம் வைத்துக் கொடுத்தார்

க. சிற்றப்பா— [அவர் அருகிற்போகிறாள்.]

சா. நான் சின்னவன்! எனக்குப் பெரியவன்—அதோ பெரிய கிழமிருக்கிறது! அதுங்கிட்ட கொடுத்து தொட்டிலி லிடச் சொல் அம்மா!

க. பெரியப்பா— [அவர் அருகிற் போகிறாள்.]

வே. ஏனடா! சாம்பமூர்த்தி! நீ ரொம்பசின்னவனோ? ஆறு மாசம் எனக்கானு சின்னவன், அதை எப்பொழுது பார்த்தாலும் டம்பமாய்ப் பேசிக்கொள்ளுகிறான்!

சா. அதெல்லாம் இருக்கட்டும்—ஒருநாளாவது எனக்குமேல் பெரியவனு இல்லையா நீ?

வே. என்னைவிட உனக்குத்தலை அதிகமாய் நரைத்துப் போயிருக்கிறதே!

சா. ஏனடா! கிழவா! உனக்கென்னமானு கேட்கிறதா? உன் தலையெல்லாம் ஏறக்குறைய மொட்டையாய்ப் போயிருக்கிறதே!

சீ. உங்கள் சண்டை முடிவதற்குள்—லக்னம் போய்விடும்.

க. அப்பா, நீங்கள் இரண்டு பெயருமாக சேர்த்து தொட்டிலிலிட்டு விடுங்கள்!

சா. ஆ! அதுதான் சரி! சீதாராமா, உன்னைவிட உன் அகமுடையாளுக்கு புத்தி அதிகமாயிருக்கிறதடா.

[சாம்பமூர்த்தி ஐயரும் வெங்கடேச முதலியாருமாக இருவரும் பிடித்து, கைக்குழந்தையைத் தொட்டிலிலிடுகிறார்கள்.]

அதற்கப்புறம் என்ன செய்யவேண்டும் அம்மா?

க. மாமியைக் கேளுங்கள்.

சா. அக்கா, அப்புறம் என்ன செய்யவேண்டும்?

ம. இவ்வளவு வயதாகியும் இதுகூட தெரியவில்லையே, மூன்று தரம் குழந்தையின் பெயரையிட்டு அழைக்க வேண்டும்! கலியாணம் பண்ணிக்கொண்டு குழந்தை பெற்றாலல்லவோ தெரியும்!

சா. ஆமாம் அக்கா! நீ சொல்வது நிஜம்தான்—

சா. வெ. ராமலிங்கம்!—ராமலிங்கம்!—ராமலிங்கம்!

ம. சாம்பமூர்த்தி—வெங்கடேசம்—உங்களிருவரையும் நிரம்ப நாளாகக் கேட்க வேண்டுமென்றிருந்தேன்! நீங்களேன் இரண்டுபெயரும் இவ்வளவு வயதாகியும்—கலியாணம் பண்ணிக்கொள்ளாதிருக்கிறீர்கள்? அப்படி யென்ன உங்களுக்கு அதிகமாய் விட்டது? அறுபது வயதில் கூட சிலர் கலியாணம் பண்ணிக் கொள்வதில்லையா, இரண்டாம் தாரம்?

வெ. ஏன்டா சின்னகிழவா? ஏனடா கலியாண மில்லாதிருக்கிறாய்? பதில் சொல்லேன்.

சா. நீதான் சொல்லேன்!

வெ. இல்லை அக்காள், சுமார் முப்பது வருடங்களுக்கு முன்னே ஒருநாள் நாங்கள் ஒன்று தீர்மானித்தோம்—அதன் பிரகாரம்—எங்களுக்குக் கலியாணமாவது கஷ்டமாயிருக்கிறது.

ம. என்ன தீர்மானம்?

வே. சாம்பமூர்த்திக்கு கலியாணமான பிறகுதான்—நான் கலியாணம் பண்ணிக்கொள்வது, என்று தீர்மானித்தேன்!

சா. வெங்கடேசத்திற்குக் கலியாணமான பிறகுதான் நான் கலியாணம் பண்ணிக்கொள்வது, என்று நான் தீர்மானித்தேன்.

சீ. இரண்டு பெயரும் கலியாணம் பண்ணிக்கொள்வதில்லை என்று தீர்மானித்தீர்கள் என்று சொல்லுகிறதுதானே! இதற்கு இந்த யுக்தி எடுத்தீர்களோ? நீங்கள் இவ்வாறு தீர்மானித்த தேதியைச் சொல்லவா நான்?

சா. சொல்! கேட்போம்.

சீ. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்து மூன்றுவது வருஷம்—ஜூன் மாசம்—

வே. சீதாராமா! கொஞ்சம் பொறு இதோ வந்து விட்டேன்—கற்பகம், குழந்தையைத் தொட்டிலில் விட்டவுடன் தாலாட்ட வேண்டாமா? அக்கா, கற்பகம் பாட்டை நீங்கள் கேட்டதில்லையே! மிகவும் நன்றாய் பாடுவாள்.

ம. அப்படியா! கற்பகம்—நான் கேட்டதே யில்லையே! கொஞ்சம் ஏதாவது தாலாட்டு பாட்டுபாடு.

[கற்பகம் மெல்லப்பாடுகிறாள்]

வே. சீதாராமா, இப்படிவா [ஒருபுறமாக இருவருமாக அவனை அவழைத்துப் போகின்றனர்] இந்த ரகசியத்தை எப்படியடா கண்டுபிடித்தாய்?

சீ. நான்—நேற்று—திருவான்மியூருக்குப் போயிருந்தேன்—அப்பொழுது அந்த சமாதியைப் பார்த்தேன்.

சா. சீதாராமா, இதை ஒருவரிடமும் வெளியிடாதே—இதில் ரகசியம் ஒன்றுமில்லை, ஆயினும் இது மற்றவர்களுக்குத் தெரிவானேன்?

சீ. சின்னமாமா, யார் அந்த ரங்கரத்தினம்?

சா. அப்புறம் சாவகாசமா யிருக்கும் பொழுது சொல்லுகிறேன்—இப்பொழுது எல்லோரும் சந்தோஷமாயிருக்கும் பொழுது— அந்த துக்ககரமான பேச்சு வேண்டாம்.

சீ சின்னமாமா—என்னை மன்னியும்—நான் தெரியாது கேட்டேன.

ரா. [தர்மலிங்க முதலியாருடன், இவர்களிருக்குமிடம் போய்] வெங்கடேசம், சாம்பமூர்த்தி, எங்களிருவருக்கும் ஒரு சந்தேகம் பிறந்திருக்கிறது; அதை நீங்கள் தான் தெரிவிக்க வேண்டும்.

சா.வே என்ன அது?

தர். இந்தக்குழந்தை பெரியவனானல்—சிரஞ்சீவியாக வாழ்வானாகக் கடவுள் கிருபையால்!—அவனை ராமலிங்க ஐயர் என்று கூப்பிடுவார்களா? அல்லது ராமலிங்க முதலியார் என்று கூப்பிடுவார்களா?

சா. ராமலிங்கம் என்று தான் கூப்பிடட்டும் எல்லோரும்; எவ்வளவு பெரியவனானலும்! எவ்வளவு சீக்கிரத்தில் இந்த ஐயர், ஐயங்கார், முதலியார், நாயுடு, பிள்ளை என்கிற பிரிவுகளெல்லாம் அற்றுப்போகிறதோ, அவ்வளவும் நலம் தான்.

ரா. அப்படித்தான் எனக்கும் தோற்றுகிறது.

[தங்களிடம் போய்ச்சேர்கின்றனர்]

தர். எனக்கும் அப்படியே.

ம. சீதாராமா, இப்படிவா—

சீ. இதோ வந்தேன்.

[தன் தாயாரிருக்குமிடம் போகிறான்.]

வே. சாம்பமூர்த்தி! நீ சொன்ன காலம் எப்பொழுதாவது வருமென்று நினைக்கிறாயா?

சா. ஏன் வரக்கூடாது? அந்தக் காலம் வந்தால் தான் நமது தேசம் ஐக்கியப்பட்டு, முன்னுக்கு வரும்! ஒருகால் அப்

படி நேரிடவில்லை, அதற்காக நாம் துயரப்படலாகாது நாம் என்னமோ நமது கடமையைச் செய்து விட்டோம். பிறகு ஈசன் செயல்! ஒருவருஷத்திற்கு முன்பாக தர்ம லிங்க முதலியார் மேல் மாடியில் நாமிருந்த பொழுது என்னை ஒரு கேள்வி கேட்டாயே ஞாபகமிருக்கிறதா?

வே. நன்றாய் ஞாபகம் இருக்கிறது—அதற்கு என்ன பதில்

சா. இதற்காகத்தான் படைக்கப்பட்டிருக்கிறோம்-என்பதே

வே. ஆம்—நாம் ஆரம்பித்த காரியம்—பலன் பெறுமா? எப்பொழுதாவது?

சா. எப்படியும் பலன் பெறும் என்று தோன்றுகிறது—ஈசன கருணையினால்.

வே. ஆம், ஈசன் கருணையினால்

காட்சி முடிகிறது.



நாடகம் முற்றிற்று.